# பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை
# (சங்க காலம்)

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**சே.பாண்டிலீலா**

**(பதிவு எண் : 670)**

**நெறியாளர்**

**முனைவர் க.அமுதா**

**தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி-3**






# அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில்3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி
மற்றும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**சனவரி - 2019**

முனைவர் **க.அமுதா,**எம்.ஏ.,எம்.ஏ.,பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**“பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை (சங்க காலம்)”** என்னும் தலைப்பில் சே.பாண்டிலீலா அவர்கள் தமிழ் முழுநேர முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**தமிழ்த்துறைத்தலைவர்**

**(க.அமுதா)**
**நெறியாளர்**

**முதல்வர்**

**சே.பாண்டிலீலா,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்.670,
தமிழ்த்துறை உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**"பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை (சங்க காலம்)"** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இந்த ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(சே.பாண்டிலீலா)**
**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்
முனைவர் **க.அமுதா,**எம்.ஏ.,எம்.ஏ.,பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

**“பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை (சங்க காலம்)”** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், மற்றும் நிர்வாகத்தார் அனைவருக்கும் என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அழகப்பா அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் இம்முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு வழி நடத்திய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேரா. முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

அழகப்பா அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் இம்முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்து உதவிய கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் பேரா.ம.துரை அவர்களுக்கும், இவ்வாய்விற்கு நெறியாளராக இருந்து, நல்வழிகாட்டியாக விளங்கி என்னை நெறிப்படுத்திய முனைவர் க.அமுதா அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக் காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் வழங்கிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் உளம்கனிந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுத் தரவுகளுக்குத் தேவையான நூல்களை வேண்டும் போதெல்லாம் கொடுத்துதவிய முனைவர் சி.பரமேஸ்வரி, உதவிப் பேராசிரியர், முனைவர் ரெ.முத்துராசன், உதவிப் பேராசிரியர் அவர்களுக்கும், அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகத்தாருக்கும், சிவகங்கை மாவட்டக் கிளை நூலகத்தாருக்கும், தேவையான புத்தகங்களை அனுப்பித்தந்த பாரி நிலையத்தார்க்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பயணத்தில் அனுதினமும் உடனிருந்து ஆக்கமும், ஊக்கமும் தந்துதவிய என் மாமா ஆ.இளங்கோவன் அவர்களுக்கும், சிறுசிறு உதவிகளையும் உற்சாகத்தையும் கொடுத்த என் அருமை மகள் இள.பா.வேணுபிரியமதிக்கும், இலக்கியக் கதைகளால் மனதிற்கு இனிமை பயக்கும் என் அன்பு மகன் இள.பா.சேரநாத்பிரியனுக்கும் என்றென்றும் கடப்பாடுடையவள் என்பதில் கருத்தாளம் கொள்கிறேன்.

என் கல்விப் பயணத்தில் உறுதுணையாகவும் உந்துசக்தியாகவும் திகழ்ந்த என் அருமைத் தாத்தா - பாட்டி மாணிக்கம் - சடச்சியம்மாள் அவர்களுக்கும், பெற்றோர் அழ.சேது - சீவரத்தினம் அவர்களுக்கும், என் நலன்விளையும் உறவுகளுக்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரி முனைவர்பட்ட மாணவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

ஓராண்டு முடிவுற்ற நிலையில் நடைபெற்ற நேர்முகத் தேர்வில் ஆய்வு குறித்த நல்ல பல தகவல்களை வழங்கிய தேர்வாளர் அய்யா த.கனகசபை அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வினைச் சீரிய முறையில் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த திருமதி.சாந்திபாண்டியன் அவர்களுக்கும், கட்டமைப்புச் செய்தளித்த பூராடம் அச்சகத்தாருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஆய்வாளர்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அகம். | - | அகப்பாக்கள் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| உ.வி. | - | உரை விளக்கம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| குறி.கலி. | - | குறிஞ்சிக்கலி |
| குறி.பா. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல்.எழுத்து.நூன். | - | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபு |
| தொல்.சொல்.கிளவி | - | தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கம் |
| தொல்.பொருள்.அகத். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணை |
| தொல்.பொருள்.புறத். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணை |
| தொல்.பொருள்.செய். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் |
| தொல்.பொருள்.பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் பொருளியல் |
| தொல்.பொருள்.மரபு. | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் |
| நற். | - | நற்றிணை |
| நெய்.கலி. | - | நெய்தற்கலி |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பரி. | - | பரிபாடல் |
| பா.எண். | - | பாடல் எண் |
| புறம். | - | புறப்பாக்கள் |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| மேலது. | - | மேலே குறிப்பிட்டுள்ள நூல் |
| வ.எண். | - | வரிசை எண் |
| Vol. | - | Volume |
| Pg.No. | - | Page Number |

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைத் தமிழ் நூல்களான பாட்டும் தொகையும் பழந்தமிழரின் அறிவுப் பெட்டகமாகும். சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்த பெருமை பாண்டியருக்கு உண்டு. சங்கப் புலவர்களில் நூற்றி ஐந்து புலவர்கள் பாண்டிய நாட்டினர். ஆண்பாற்புலவர்கள், பெண்பாற்புலவர்களோடு அரச மகளிர், பாண்டிய மன்னர்களின் பங்களிப்பும் பெருமிதமுடையது. பாண்டிய நாட்டில் வாழ்ந்த புலவர்கள் சங்கப் பாடல்களில் தம் கருத்தோட்டத்திற்கும், மக்களின் வாழ்வியல் பயன்பாட்டிற்கும் ஏற்ப இயற்கையைப் பாடியுள்ளனர். அவற்றை ஆராய்வதுடன் மற்ற புலவர்களிலிருந்து வேறுபடும் இவர்தம் இயற்கை நலன் பற்றியும் ஆராய்ந்துரைப்பதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

**'பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை (சங்க காலம்)'** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

பாண்டியநாட்டுப் புலவர் பாடல்களில் வெளிப்படும் இயற்கை பற்றிய கருத்துக்களை வெளிக்கொணர்வதும்; இயற்கைச் சமநிலையின்மை, புவிவெப்பமயமாதல் போன்ற பேரழிவைச் சந்தித்து வரும் இயற்கையையும், சுற்றுச்சூழலையும் போற்றிப்பாதுகாக்க வேண்டிய இந்தக் காலக்கட்டத்தில், பண்டைக்காலத் தமிழர்களின் வாழ்க்கையில் இணைந்தேயிருந்த இயற்கையை அதன் பல்வேறு பயன்பாட்டோடு எடுத்தியம்புவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

தற்காலக் கவிஞர்களைப் போல் அழகியல் நோக்கோடு இயற்கையை மட்டும் பாடும் வழக்கம் சங்க காலத்தில் இல்லை. ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த புலவர்கள், அவர்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்ப பெரும்பான்மை இயற்கையைப்பாடி அவற்றைப் பிரதிபலித்துள்ளனர். அந்நிலையில் மற்ற பகுதியில் வாழ்ந்த புலவர்கள் இயற்கையைப் பாடியதற்கும், பாண்டிய நாட்டுப் புலவர்கள் இயற்கையைப் பாடியதற்கும் வேறுபாடு இருக்கக்கூடும் என்பது இந்த ஆய்வின் கருதுகோளாகும்.

**சான்றாதாரங்கள்**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆய்வுக்கு அடிப்படையாக அமைகின்றன. உ.வே.சாமிநாத ஐயர், ஔவை சு.துரைசாமி பிள்ளை பதிப்புகள், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடுகள், தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புகள் இவ்வாய்விற்கான **முதன்மைச் சான்றாதாரங்களாக** அமைகின்றன.

பாண்டிய நாட்டுப் புலவர்கள் குறித்த திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், சங்க இலக்கியத்தில் இயற்கை குறித்த திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், சொற்பொழிவுகள் குறித்த நூல்கள், இக்கால இயற்கை குறித்த ஆய்வுகள், இலக்கண நூல்கள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், மருத்துவ நூல்கள், இணையத்தரவுகள் போன்றவை **துணைமைச் சான்றாதாரங்களாகும்.**

**ஆய்வு எல்லை**

ஆய்வுத் தலைப்பிற்கேற்ப சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் ஆய்வில் உட்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாகப் பாண்டிய நாட்டுப் புலவர்களின் பாடல்கள் முழுமையும் இவ்வாய்வேட்டின் எல்லையாகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

பாண்டிய நாட்டுப் புலவர்கள், அவர்களின் பாடல்கள் குறித்த தரவுகளைத் தொகுத்தும், பகுத்தும், விளக்கியும் காணும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach), புலவர்களின் வரலாற்றைச் சுட்ட வரலாற்று அணுகுமுறையும் (Historical Approach), இயற்கை நலனைக் கண்டறிய முருகியல் அணுகுமுறையும் (Aesthetic Approach), மக்களின் வாழ்வை நன்னெறிப்படுத்தும் உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach), சமூகப் பயன்பாட்டை எடுத்தியம்பும் வகையில் சமூகவியல் அணுகுமுறையும் (Sociological Approach) இந்த ஆய்விற்கான அணுகுமுறைகளாக இடம்பெற்றுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியத்தில் இயற்கை பற்றிய ஆராய்ச்சி நூல்களும், **'மருதம்', 'முல்லை', 'நெய்தல்'** என்று நிலம் தொடர்பான ஆய்வுகளும்

எழுந்துள்ளன. இவை அனைத்திலும் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை பற்றிய தனி ஆய்வுகள் நிகழவில்லை, ஆகையால் இவ்வாய்வு பயனுள்ளதாக அமையவுள்ளது. இதுவரை எழுந்த நூல்களில், மு.வரதராசனாரின் **'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை'**, அன்னி மிருதலகுமாரி எழுதிய **'பரிபாடலில் இயற்கை'**, பி.எல்.சாமி எழுதிய **'சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்'**, செ.வேங்கடராமச் செட்டியார் எழுதிய **'பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள்'** கா.கோவிந்தன் எழுதிய **'சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை'**, சு.பாலசாரநாதன் எழுதிய **'சங்க காலப் புலவர்கள்'** போன்ற ஆய்வுகளும், ஆய்வு நூல்களும் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை எனும் இந்த ஆய்வின் முன்னோடிகளாக அமைந்துள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்கண்ட நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. அவை,

1. பாண்டிய நாட்டுப் புலவர்கள்
2. பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கைப் புனைவுகள்
3. நிலப்புனைவின் வகைப்பாடுகளும், காலப்புனைவுகளும்
4. பாண்டிய நாட்டுப் புலவர்களின் இயற்கைக்கொடைகளும் தனித்தன்மைகளும்

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

**'பாண்டிய நாட்டுப் புலவர்கள்'** என்பது முதல் இயலாகும். பாண்டிய நாடு, பாண்டிய நாடும் பைந்தமிழும், பாண்டிய நாட்டுப் புலவர்களும், அவர்களது பாடல்களின் எண்ணிக்கையும், அகப்பாடல்கள், புறப்பாடல்களில் மிகுதியாகக் காணப்படும் பாடல் புனைதிறன் குறித்தும் கண்டறியப் பெற்றுள்ளது.

**'பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கைப் புனைவுகள்'** இரண்டாம் இயலாக அமைகிறது. இயற்கை விளக்கம், புனைவு விளக்கம், பாடல் புனைவில் இயற்கையின் பங்களிப்பு, இயற்கை வனப்பைப்பாடத்

தொல்காப்பியம் காட்டும் வழிமுறைகள், முதல், கரு, உரிப்பொருள் தொடர்பான புலப்பாட்டு நெறிமுறைகள், உள்ளுறையுவமை, இறைச்சி போன்றவற்றால் புலப்படும் வாழ்வியற் பயன்பாடுகளும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியப் பனுவல்களில் காலத்தால் அழியாத சங்ககால இயற்கைக் காட்சிகளைக் கட்புலனாக்கும் பதிவுகள் குறித்தும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**‘நிலப்புனைவின் வகைப்பாடுகளும் காலப்புனைவுகளும்’** என்னும் மூன்றாம் இயலில் ஐவகை நிலப்புனைவும் அதன் வகைப்பாடுகளும், காலப்புனைவும் மக்களின் வாழ்வியற் பயன்பாடுகளுக்கு ஏற்ப விளக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டின் நில அமைவிற்கேற்ற இயற்கைப் புனைவுகள் இடம்பெற்றுள்ளன.

**‘பாண்டிய நாட்டுப் புலவர்களின் இயற்கைக் கொடைகளும், தனித்தன்மைகளும்’** என்பது நான்காவது இயலாக அமைகிறது. இவ்வியல் பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள் வெளிப்படும் ஐம்பெரும்பூதங்கள், விலங்குகள், பறவைகள் போன்றனவும், வாழ்வாதார வளங்களான நிலவளங்கள், நீர்வளங்கள், இசை, மலர்கள் போன்ற மனவளப்பம் தரும் இயற்கைக் கொடைகளும், பாண்டிய நாட்டுப் புலவரின் தனித்தன்மை வாய்ந்த படைப்புகளும் எடுத்தாளப்பட்டுள்ளன.

முடிவுரையில் ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்து தெளிந்த கருத்துகள் தொகுக்கப்பட்டுள்ளன.

முடிவுரைக்குப் பின் துணைநூற்பட்டியல் இடம்பெறுகின்றது. இதன் பின்னர் ஆய்வுக்கு அடிப்படையான அட்டவணைகள் பின் இணைப்புகளாக அமைந்துள்ளன.

# இயல் ஒன்று

# பாண்டிய நாட்டுப் புலவர்கள்

## முன்னுரை

செவ்விலக்கியங்களுள் முதன்மையானது சங்க இலக்கியமாகும். பாட்டும், தொகையும் பழந்தமிழரின் வாழ்வையும், தமிழ்மொழியின் தொன்மையையும் எடுத்துரைக்கும் கலங்கரை விளக்கமாகத் திகழ்கின்றன. மூவேந்தராண்ட தமிழகத்தில் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தவர் பாண்டியரேயாவர். இவ்வியலில் பாண்டிய நாடு, பாண்டியரும் பழந்தமிழும், பாண்டிய நாட்டுப் புலவர்கள், இப்புலவர் பாடல்களுள் மிகும் பாடல்புனைதிறன், புலவர் வரலாறு ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

## பாண்டியரின் தொன்மை

பண்டைத் தமிழகத்தை மூவேந்தர்களும், பல சிற்றரசர்களும் ஆண்டுவந்தனர். "தமிழர்களால் எப்போதும் மூவேந்தர்கள் என அழைக்கப்படும் சேர, சோழ, பாண்டிய தமிழ் அரசர் மூவரும் உலகம் தோன்றிய நாள்தொட்டு, அல்லது சரியாகக் கூறுவதாயின் தமிழ்ப் புலவர்கள் தமிழரசர்களைப்பாடிப் பாராட்டத் தொடங்கிய நாளிலிருந்தே தமிழ் நாட்டில் அரசோச்சியிருந்தனர் என்பதே வரலாற்றுக்கு முந்திய மரபுவழிச் செய்தியாகும்"[1] என்கிறார் கா.கோவிந்தன்.

பாண்டியரின் ஆட்சிச் சிறப்பைக்கூறும் இரா.கிருஷ்ணமூர்த்தி, "தமிழகத்தின் பழம் பெரும் அரச மரபினரான மூவருள், பாண்டியரே மிகத் தொன்மையானவர். மிக நீண்ட நெடுங்காலம் ஆட்சி செய்தவரும் அவரே ஆவர். பாண்டியர் ஆட்சி கி.மு.3-ஆம் நூற்றாண்டிலோ, அதற்கு இரு நூற்றாண்டுகளுக்கு முன்னரோ தொடங்கி இருக்கலாம். இடையில் ஏற்பட்ட களப்பிரரின் ஆட்சிக்காலம் தவிர்த்து இடைவிடாமல் 10 ஆம் நூற்றாண்டுவரை ஆட்சி செய்துள்ளனர்"[2] என்கிறார். இக்கருத்துக்களால் பாண்டியர் தொன்றுதொட்டுத் தமிழ் மண்ணின் மைந்தர்கள் என்பதும், ஆட்சிச்சிறப்பில் முதன்மையாய்த் திகழ்ந்துள்ளனர் என்பதும் தெளிவுபெறுகிறது.

பாண்டியரின் குடிப்பெயர்களைச் சுட்டும்பொழுது "சங்ககாலப் பாண்டிய மன்னர்களின் பின்னடைகள் வழுதி, மாறன், செழியன்

என்பவையாகும்”[3] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாண்டியர் ஆட்சிச்சிறப்பில் மட்டுமல்லாது அருந்தமிழ் வளர்ச்சியிலும் பெரும்பங்காற்றியுள்ளனர்.

**பாண்டிய நாடு**

தமிழ்மொழியின் ஆட்சிக்கு உட்பட்ட நிலப்பகுதியை வடவேங்கடம் முதல் தென்குமரி வரை என்று தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் கூறுகிறது. முற்காலத்தில் பாண்டிய நாட்டின் வடஎல்லையாகத் தென்வெள்ளாறும், தென் எல்லையாகக் கன்னியாகுமரியும், கிழக்கெல்லையாக ஆழ்கடலும், மேற்கெல்லையாகப் பெருவழியும் இருந்ததைப் பழம்பாடல் கூறுகிறது. இதனை,

> **“வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்**
> **தென்னார் புனர்கன்னி தெற்காகும் - உள்ளார்**
> **ஆண்கடல் கிழக்கா மைம்பத் றறுகாதம்**
> **பாண்டிய நாட்டெல்லை பகர்”[4]**

என்பதுணர்த்தும். பழந்தமிழகத்தில் அரசர்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகள் ‘மண்டலம்’ எனும் பெயரில் வழங்கப்பெற்றுள்ளது. “பாண்டி மண்டலம் என்பது மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஆகிய மூன்று ஜில்லாக்களையும் (மாவட்டங்களையும்) புதுக்கோட்டை நாட்டில் வெள்ளாற்றுக்குத் தெற்கிலுள்ள பகுதியையும் தன்னுள் கொண்டு விளங்கிய நிலப்பரப்பாகும்”[5] என்ற சதாசிவபண்டாரத்தாரின் கருத்தால் பாண்டிய நாட்டின் எல்லைகளை அறியமுடிகிறது.

**பரந்துபட்ட பாண்டிய நாடு**

சங்ககால மன்னர்களுக்கு அறமும் மறமும் இரு கண்களாகின. அவர்கள் தம் நாட்டின் எல்லைப்பகுதியைக் காப்பதோடு, விரிவுப்படுத்துவதிலும் மனம் விளைந்தனர். இதனை உ.வே.சாமிநாதையர், “குமரிக்கும் ப.்.றுளியாற்றிற்கும் இடையிருந்த நாட்டைக் கடல்கொண்டு விட்டமையால் தன் நாட்டுக்குள் இழந்த பாகத்தினைப் பெறுவதற்கு, சோழ நாட்டெல்லையிலிருந்த முத்தூர்க் கூற்றத்தையும், சேரமானாட்டுக் குண்டூர் கூற்றத்தையும் வென்று பெற்றுப் பாண்டியன் அரசாண்டானென்று தெரிகிறது”[6] என்கிறார்.

பாண்டியர் தம் எல்லையை விரிவுப்படுத்துமிடங்களில் எல்லாம் கட்டடம், ஓவியம் போன்ற அழகுக்கலைகளை உருவாக்கினர். இதனை "வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே கன்னியாகுமரி வரை விரிந்துள இவற்றுள் பாண்டியர் காலக் கட்டடக் கலையும் அடங்கும்"[7] என்பதனால் பாண்டியரின் பரந்துப்பட்ட ஆட்சிப்பகுதியை அறியமுடிகிறது.

### பிரித்தாளும் ஆட்சித்திறம்

'பாண்டி மண்டலம்' ஆட்சிச் சிறப்பிற்கேற்ப கூற்றங்களாகவும், நாடுகளாகவும் பிரிக்கப்பட்டு, குறுநில மன்னர்கள் ஆட்சி செய்தனர் என்பதும் புலப்படுகிறது. இதனை "இரணியமுட்டநாடு, புறப்பறனை நாடு, பாகனூர்க் கூற்றம், மிதிலைக் கூற்றம் …. இடைக்குளநாடு, கோட்டூர் நாடு என்பன முற்காலத்தில் பாண்டிய மண்டலத்திலிருந்த உள்நாடுகள்"[8] என்பவை உணர்த்தும்.

### பாண்டியரும் பழந்தமிழும்

பழந்தமிழ் வளர்ச்சியில் பாண்டியரின் பங்கு போற்றுதற்குரியது. தம் ஆட்சிப் பகுதியை மேம்படுத்தியது போன்று கடல்கோளால் அழிந்துபட்ட தமிழ்ச்சங்கத்தைப் புதுப்பித்து, தமிழ் மொழியைப் போற்றி வளர்த்தனர் என்பது தெரிகிறது. "தமிழ் அல்லது திராவிட மொழி தென்னிந்திய மொழிமட்டுமன்று. ஆரியர் வருகைக்கு முன் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பேசப்பட்ட மொழியென்று அறிஞர் அம்பேத்கர் கூறியுள்ளார்"[9] (Tamil or Dravida was not merely the language of S.India, but before the Aryar come, it was the language of the whole of India, and was spoken from Kashmir to Capccomori) என்பதை சு.இரத்தினசாமி குறித்துள்ளார். இவ்வாறு, இந்தியா முழுவதும் வாழும் மக்களுக்குப் பேச்சு மொழியாக இருந்த தொன்மைத் தமிழ்மொழியை, சங்கத் தமிழோடு உலகு போற்றத்தந்த பெருமை பாண்டியரைச் சார்ந்ததாகும். இதனை,

> **"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**
> **மகிழ்நனை மறுகின் மதுரை"[10]**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

பாண்டிய மன்னர்கள் தமிழ்ப் புலவர்களைக் கண்போல் காத்தனர். எனவேதான் அவர்களின் கருத்தாளம் தமிழ்மொழி வளர்ச்சியில்

திளைத்தன. இதனை "நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து"[11] என்னும் பனம்பாரனாரின் கூற்று, தமிழ்மொழிக்குப் பாண்டியர் ஆற்றிய தொண்டினைச் சிறப்பித்துக் கூறுகிறது.

பாண்டிய வேந்தர்கள் புலமையைப் போற்றும் புரவலர்களாய் மட்டுமல்லாது, தாங்களும் புலமையோடு தமிழ்ப் பாக்களைப் படைத்தனர் என்பது பெறப்படுகிறது. "தலையாளங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் புரவலனாகவும், புலவனாகவும் திகழ்ந்தவர். நக்கீரர், மாங்குடி மருதன், பரணர், கல்லாடனர் போன்ற பெரும் புலவர் எல்லாம் இவனால் போற்றப்பட்டவர்கள் மற்றும் மதுரையிலிருந்த தமிழ்ச் சங்கத்திற்குப் புத்துயிர் தந்தவனும் இவனே"[12] என்னும் கருத்து இதற்குச் சான்றாய் விளங்குகிறது. **தமிழ் மொழிக்கு இரு கண்களாய் தொல்காப்பியமும், திருக்குறளும் திகழ்கின்றன. அவை பாண்டியர் அவையில் அரங்கேற்றப்பட்டன என்பது பாண்டியருக்கும் பழந்தமிழுக்கும் உள்ள தொடர்பை மெய்ப்பிக்கிறது.**

**பாண்டிய நாட்டுப் புலவர்கள்**

சங்கப் புலவர்களுள் பெயர் தெரிந்தவர்கள், பெயர் தெரியாதவர்கள், புனைப்பெயரால் நிலைத்தவர்கள் எனும் வகைப்பாடுகள் உள்ளன. பெயர் விளங்கப்பெறும் புலவர்களுள் நூற்றிஐந்து புலவர்கள் பாண்டிய நாட்டினராவர். சங்கப் புலவர்களைப் பல திறத்தோடு ஆராய்ந்த ந.சஞ்சீவி "பாண்டிய நாட்டில் புலவர்கள் நிறைந்துள்ளமை கருதத்தக்கது"[13] என்றுரைத்துள்ளார். இவர்களுள் அரசர்களும், அரசமாதேவியரும், குறுநில மன்னனின் மகளிரும் புலமை வாய்ந்தோராய் இருந்துள்ளனர்.

சங்ககாலப் புலமைபெற்ற அரச மாதேவியர் இருவருள் பாண்டிய நாட்டைச் சேர்ந்த பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டும், சோழ மாதரசி ஆதிமந்தியாரும் அடங்குவர். பாரி மகளிர் குறுநில மன்னனின் மக்களாவர். "பெண்பாற்புலவருள் சேரநாட்டுப் பெண்கள் இல்லாமை குறிப்பிடத்தக்கது"[14] என்பதால் சங்ககால அரச குடும்பத்துப் பெண்பாற் புலமையோர் நால்வருள் பாண்டிய நாட்டினர் மூவரென்பது அறியப்படுகிறது. "பாண்டிய நாட்டுப் பெண்பாற்புலவர் பதினொருவர்."[15] "பதினொன்று

அரசப்புலவரோடு ஆண்பாற் புலவர்கள் தொன்னூற்று நால்வராவர்."[16] ஆகையால் நூற்றிஐந்து புலவர்கள் பாண்டிய நாட்டினர் என்பது பெறப்படுகிறது.

**பாண்டிய நாட்டுப் புலவர் பனுவல்களுள் மிகும் பாடல்**

சங்க இலக்கியம் தோன்றிய காலம் குறித்த கருத்து வேறுபாடுகள் பலவுண்டு. எனினும் "கி.மு. சில நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றி கி.பி.200-300 முடிய நிலவியது என்பதில் கருத்தொருமைப்பாடு காணப்படுகிறது."[17] பண்டைத் தமிழ் மக்கள் கல்வியிலும் கேள்வியிலும் சிறந்து விளங்கியுள்ளனர். சங்கப்பாக்கள் தமிழினத்திற்கு மட்டுமல்லாது மக்களினத்திற்குப் பயன்படும் வகையில் படைக்கப்பட்டுள்ளது. "சங்கப் பாக்கள் 2366னுள் அகப்பாக்கள் 1851 ஆகவுள்ளன."[18] இதுபோலவே "பாண்டிய நாட்டுப் புலவர் பாக்கள் 609னுள் 487 பாக்கள் அகம் சார்ந்தவை, புறப்பாக்கள் 118 ஆகும்."[19] ஆதலால் புறப்பாடல்களினும் அகப்பாக்களின் தொகையே மிகுந்திருப்பதைக் காணமுடிகிறது.

"பாண்டிய நாட்டில் ஐந்து பெண்பாற் புலவரும், அறுபத்து ஒன்று ஆண்பாற் புலவருமாய் அறுபத்து ஆறு புலவர்கள் அகப்பாக்களை மட்டும் பாடியுள்ளனர். மூன்று பெண்பாற் புலவரும், ஒன்பது ஆண்பாற் புலவருமாய் பன்னிருவர் புறப்பாக்களை மட்டும் பாடியுள்ளனர்."[20]

"அகப்பாக்களையும், புறப்பாக்களையும் பாடியோராய் மூன்று பெண்பாலரும், இருபது ஆண்பாலரும் அறியப்படுகின்றனர். அகமும் புறமும் கலந்த பரிபாடலில் இரண்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை என்பனவாய் நான்கு பாடல்கள் இடம்பெற்றுள்ளன."[21] சங்கப்பாக்களைப் போன்றே பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள்ளும் அகப்பாக்களின் புனைவு மிகுதியாக உள்ளது.

"பத்துப்பாட்டினுள் திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் முதலான ஏழு பாக்களைப் பாண்டிய நாட்டுப் புலவர்கள் பாடியுள்ளமைக் குறிப்பிடத்தக்கது. இக்குறிப்புகள் பாண்டிய நாட்டுப் புலவர்களும் பாடற்தொகைகளும் என்னும் அட்டவணையில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன."[22]

**பாண்டிய நாட்டுப் புலவர் வரலாறு**

பாண்டிய நாட்டின் தலைநகர் மற்றும் இந்நாட்டின் சிறப்புமிக்க ஊர்ப்பெயர்களை அடைமொழியாகக் கொண்ட புலவர், பாண்டியனின் குடிப்பெயருடையோர், அரசன் வழங்கும் பட்டங்களுக்குரியோர், பாண்டிய நாட்டுக் குறுநில மன்னர்கள் என்பனவற்றால் பாண்டிய நாட்டுப் புலவர்கள் அடையாளம் காணப்பட்டுள்ளனர். அகரவரிசைப்படி புலவர் வரலாறும் அவர்களது பாக்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**அகம்பன் மாலாதனார்**

"இவர் ஆதன் என்னும் இயற்பெயருடையவர். அகம்பல் ஓரூர். இவ்வூர் மதுரை மாவட்டம், பெரியகுளம் தாலுகாவில் உள்ள அகமலை எனப்படும் ஊராகும்"[23] என்பதால் இவர் பாண்டிய நாட்டினர் என்பது தெளிவாகிறது. இவர் பெயரைக் காரணப்பெயராகக் கொண்டு "கம்பமும் கம்பனமும் சந்தேகம் அல்லது நடுக்கமென்னும் பொருளில் வருவனவாகிய வடசொல்லாதலின் இப்பெயர் ஐயமில்லாத அல்லது நடுக்கமில்லாத மாலாதனார் என்னும் பொருளைத் தந்து இவரது தெளிந்த புலமையை வெளிப்படுத்தும்"[24] என்பதால் இவரது சிறந்த சொல்லாற்றல் புலப்படுகிறது. அகம்பல் - மால் - ஆதனார் என்று ஊர் அடைமொழியும் இவரது தலைமைப் பண்பும், 'ஆர்' விகுதியும் இணைந்து ஊர்ப்பெயரால் இப்புலவரும், இப்புலவரால் ஊரும் சிறப்புற்றதை அறியமுடிகின்றது. இவர் நற்றிணையில் ஒரு பாடலைப் பாடியுள்ளார். (நற்.81)

**அண்டர் மகன் குறுவழுதியார்**

"அண்டர் என்பதன் பொருள் ஆயர் என்பதாகும்"[25] வழுதி என்னும் பெயர் பாண்டியருக்குரியது. ஆகையால் இவர் பாண்டிய மரபினராதல் அறியப்படுகிறது. இப்புலவரை மு.வரதராசன் "இவர் பாண்டிய அரசரோடு எவ்வகையிலேனும் தொடர்புடையராக வேண்டும் எனத் தெரிகின்றது"[26] என்கிறார்.

அண்டர் மகன் குறுவழுதியார் என்பவரும் குறுவழுதியார் என்பவரும் ஒருவராவர் என்பதற்குச் "சங்க இலக்கியப் பொருட்களஞ்சியமும், ந.சஞ்சீவியவர்களின் ஆராய்ச்சிக் குறிப்பும்

இப்பெயர்களில் இடம்பெறும் நான்கு பாடல்களை ஒருவரே பாடியனவாய்த் தொகுத்திருப்பது இக்கருத்திற்கு அரண் சேர்க்கும்."[27] (அகநா:150, 228, குறுந்:345, புறநா:396)

**அள்ளுர் நன்முல்லையார்**

"திருநெல்வேலிக் கோயில் கல்வெட்டொன்றில் (S.I.I.Vol.V. No.438) அள்ளுர் ஒன்று காணப்படுகிறது."[28] இப்புலவரின் அகநானூற்றுப் பாடல் நாற்பத்தாறில் பாண்டியனையும் அள்ளுரையும் 'கொற்றச் செழியன் பிண்டநெல்லின் அள்ளுர்' எனச் சிறப்பித்துள்ளமையால் இவ்வூர் பாண்டிய நாட்டு அள்ளுர் என்பது தெளிவாகிறது. இவர் பெண்பாற்புலவர். இவரின் பெயரில் 'முல்லை' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. தமிழ் நிலத்திற்கு மலர்களின் பெயர்களைச் சூட்டும் மரபைப்போல் இம்மகளிருக்கு மலரின் பெயர் சூட்டப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. 'ந' என்னும் நன்மை அடையோடும் ஆர் விகுதிச் சிறப்போடும் இணைந்து நன்முல்லையார் என்று பெயர் விளங்கியுள்ளது.

ஊர் என்ற அடைமொழியால் இவரை மருத நிலத்தவராகக் கருத வாய்ப்புள்ளது. "இவர் பெயரில் 'முல்லை' என்ற இயற்பெயர் கொண்டமையாலும், இவர் புறப்பாடலில் பெண்ணின் வீரம், மகட்பாற்காஞ்சி ஆகியவற்றைப் பாடியிருப்பதும் இவர் பெண் என்பதை உறுதிப்படுத்துகின்றன. இவர் பாடலில் பாண்டிய நாட்டிலுள்ள அள்ளுரைப் பாடியதால் பாண்டியநாட்டுப் புலவர் என்பது உறுதி"[29] என்று ஆய்வாளர் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடிய நான்கு மருதத்திணைப் பாடல்களுள் இரண்டு பாடல்களில் சிறந்த மருத நிலப்புனைவு காண்பதாலும் இவ்வுண்மைப் புலனாகிறது. இவர் பாடியதாகப் பதினொரு பாடல்கள் உள்ளன.

(குறுந்.32, 67, 68, 93, 96, 140, 157, 202, 23, அகநா:46, புறநா:306)"

**ஆலம்பேரி சாத்தனார்**

சாத்தனார் என்பது இப்புலவரின் இயற்பெயராகும். "இவர் மதுரையைச் சார்ந்த ஆருலவிய நாட்டு ஆலம்பேரி என்னும் ஊரிலுள்ள சாத்தனென்னும் இயற்பெயருடையவர்"[30] என்பது உணர்த்தும். ஊர்ப்பெயர்

அடையோடு (நற்.303, 338-ல்) மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரிச் சாத்தனார் என வழங்கப்படுகிறார். இதனால் இவர் மதுரைப் புலவர் என்பது தெரியவருகிறது. இவர் எட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.104, 152, 255, 303, 338, அகநா.81, 143, 175)

**இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்**

"இரணிய முட்டம் என்பது மதுரையை அடுத்த யானைமலை, அழகர்மலைப் பகுதிகளைத் தன்னகத்தே கொண்ட நாடு என்று கல்வெட்டுகளால் அறியப்படுகிறது."[31] ஆதலால் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூரில் வாழ்ந்த பெருங்கௌசிகனார் என்பதால் இவர் பெயர் ஊர்ப் பெயருடன் சேர்த்து வழங்கப்பட்டுள்ளது. "தொண்டை நாட்டுப் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னனை மலைபடுகடாம் பாடியவர் இவரேயாவர்."[32]

பெருங்கௌசிகனார் எனப் பெயர் விளங்கும் நற்றிணை நூற்றி முப்பத்தொன்பதாம் பாடலும், மலைபடுகடாம் முதல் மூன்றடியும் பொருள் ஒற்றுமையுடையது. இவற்றுள் மழையைத்தரும் மேகங்கள் போற்றப்படுகின்றன. விண் அதிரும்படி முழங்கும் பேரோசை போன்றது, பண் அமைத்துக் கட்டப்பட்ட மத்தளத்தின் இசை என்று முழவொலியும் மேகத்தின் ஒலியும் ஒப்பிடப்பட்டுள்ளது. இவ்விரு பாடல்களிலும் ஒலியின் இயக்கத்தை ஓசை நயம்பட உரைப்பதாலும் புலவரின் பெயர்ப் பொருத்தத்தாலும் இப்பாடல்கள் இவரால் பாடப்பட்டுள்ளமைப் பெறப்படுகிறது. இப்புலவர் மூன்று பாக்களைப் பாடியுள்ளார்.
(நற்.44, 139, மலைபடுகடாம்)

**இளம்புல்லூர்க் காவிதி**

இப்புலவரது இயற்பெயர் வழங்கப்படவில்லை. "இவரது ஊர் மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்த இளம்புல்லூராகும். காவிதிப்பட்டம்- நல்லொழுக்கம் நற்செய்கை சான்ற பெருமக்களுக்கு வழங்கப்படும் சிறப்புப் பெயராகும்."[33] இதனால் இவர் பெற்ற சிறப்புப்பட்டமான காவிதி என்பதை முதன்மைப்படுத்தி இளம்புல்லூரான ஊரோடு இணைத்து 'இளம்புல்லூர்க் காவிதி' என்ற பெயர் நிலைபெற்றுவிட்டது. "பாண்டிய காவிதிகளை வேளாளர் என்றும் அவர்கள் தமிழக அரசர்களோடு

மகட்கொடைக்கு உரியர் என்றும் கூறுவார்."[34] இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(நற்.89)

**இளம்பெருவழுதியார்**

இவர் அரசப் புலவர். பாண்டியர் மரபில் பிறந்து வழுதி எனக் குடிப்பெயரைப் பெற்றவர். "'உண்டாலம்ம' எனத் தொடங்கும் இவனது புறப்பாட்டும், பரிபாடலும், நற்றிணைப் பாடல்களும் இவனது புறவயக்கோட்பாடுகளையும், அகவயக்கோட்பாடுகளையும், காதலறக் கோட்பாடுகளையும் இனிதே நமக்கு எடுத்தியம்புகின்றன."[35]

இவர் பாடிய பாடலில் சாவா மருந்தாகிய அமிழ்தையும் விருந்தினருக்குப் பகிர்ந்தளிக்கும் சிறந்த பண்பும். பழிக்கு அஞ்சி உயிரையும் தரத்துணியும் தமிழனின் மனவளப்பமும் புலப்படுகிறது. இவ்வரசர் "கடலுட் சென்றவிடத்து இறந்தமையின் இவர் கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதியென்று கூறப்பட்டார்"[36] என்பதால் **சங்ககாலச் சான்றோர் தமிழ் மன்னர்களின் குடிப்பிறப்பு மட்டுமல்லாது இறப்பு குறித்தும் அடைமொழிகள் வழங்கிச் சிறப்பித்தமை இப்புலவர் பெயரால் தெரியவருகிறது.** இப்புலவர் பாடியதாக நான்கு பாடல்கள் உள்ளன.

(நற்.55,56, பரிபாடல் 15, புறநா 182)

**உக்கிரப் பெருவழுதி**

அரசப் புலவரான இவர் தன் பகைவனை வென்று அவனுக்குரிய "கானப்பேரெயில் (காளையார்கோயில்) என்னும் ஊரைக் கைப்பற்றினவனாதலிற் கானப்பேரெயில் கடந்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதியென்றுங் கூறப்படுவான்"[37] என்பதால் இவர் பெயர் விளங்கப் பெறுகிறது. "கடைச்சங்கப் பாண்டியர் நாற்பத்தி ஒன்பது அரசர்களுள் ஒருவன். இவன் முன்னிலையில் திருக்குறள் அரங்கேற்றப்பட்டதென்ற செய்தி அக்குறளுக்கு இவன் கொடுத்த 'நான்மறையின் மெய்ப்பொருளை' என்னும் வெண்பாவிற் காணப்படுகிறது."[38] இவ்வாறு உலகு போற்றும் உலகப் பொதுமறையைப் போற்றித் தமிழுக்குத் தொண்டு செய்துள்ள இவரது திறம் கருத்திற்கொள்ளத்தக்கது. எட்டுத்தொகையுள்

அகநானூற்றைத் தொகுப்பித்த புரவலனும், அதில் இருபத்து ஆறாம் பாடலைப் பாடிய புலவனும் இவ்வரசன் ஆவார். இரண்டு பாடல்கள் இவர் பாடியனவாகும்.

(நற்.98, அகநா.26)

**ஒக்கூர் மாசாத்தனார்**

மாசாத்தன் என்பது இவரது இயற்பெயர் எனத்தெரிகிறது. "ஒக்கூர் என்ற பெயருடைய ஊர்கள் சோழ நாட்டிலும், பாண்டிய நாட்டிலும் உள்ளன"[39] என்கிறார் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை. "ஒக்கூர் பாண்டி நாட்டில் திருக்கோட்டியூர்ப் பக்கத்தே உள்ள ஓர் ஊர்"[40] என்பது, புலவர் பெயரால் அறியப்படும். ந.சஞ்சீவியவர்கள் ஊர்ப்பெயர்களில் குறிப்பிட்டுள்ளார். சிவகங்கை மாவட்டத்தில் ஒக்கூர் என்னும் ஊர் இன்றளவும் உள்ளது. இரு பாடல்கள் இவர் பாடியனவாகும்.

(அகநா.14, புறநா.248)

**ஒக்கூர் மாசாத்தியார்**

இவர் பெண்பாற்புலவர். ஒக்கூர் மாசாத்தனார் பற்றிய குறிப்பில் "மாசாத்தியார் என்னும் சான்றோர் ஒருவரும் இவ்வூரில் தோன்றியிருந்திருக்கிறார்"[41] என்பதால் இவ்விருவரும் ஒரே ஊரினர் என்பது உறுதியாகிறது. "பாண்டி மண்டலத்து மிழலைக்கூற்றம் வேள் எவ்விக்குரியதாய், கடற்கரையைச் சார்ந்திருந்த நாடு என்பது 24 ஆம் புறப்பாடலால் அறியப்படுகிறது. 'பாண்டி மண்டலத்து மிழலைக்கூற்றத்து ஒக்கூர்' என்பதை கல்வெட்டுகள் மூலம் நை.சி.கரிகாலன் தெளிவுபடுத்தியுள்ளார்."[42] இவர் எட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார்.

(குறுந்.126, 139, 186, 220, 275, அகநா.324, 384, புறநா.279)

**ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்**

அரசப் புலவரான இவர் வெற்றியால் மீண்டும் கிடைத்த ஊர்ப்பெயரோடு இணைத்துப் புகழப்பட்டுள்ளார். "பூதப்பாண்டியன் பாண்டியருக்குரிய ஒல்லையூரைப் பகைவரிடமிருந்து வென்று கொண்ட சிறப்பால் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் எனச் சிறப்பிக்கப்பட்டான்"[43] என்கிறார் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை. இக்குறிப்பால் இவரது

ஆட்சியில் ஒல்லையூர் பாண்டிய நாட்டுடன் இணைந்திருந்ததை அறியமுடிகின்றது. "புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள ஒலியமங்கல மென்னும் ஊரிலுள்ள சாசனத்தால் ஒல்லையூர் என்பது அவ்வூரென்று தெரிகிறது."[44] இதனால் இவ்வூர் சோழநாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்குமிடையில் எல்லைப்பகுதியாய் இருந்துள்ளதை அறியமுடிகின்றது.

இவ்வரசன் இறந்ததும் இவனரசி பெருங்கோப்பெண்டு, தாம் கொண்ட தீராக் காதலின் மீளாத்துயரை அவரது புறப்பாடலில் புலப்படுத்தியுள்ளார். இரு பாடல்கள் இவ்வரசப் புலவர் பாடியனவாகும். (அகநா.25, புறநா.71)

**கடியலூர் உருத்திரங்கண்ணனார்**

உருத்திரங்கண்ணனார் கடியலூரில் வாழ்ந்த புலவர். கா.கோவிந்தனவர்கள் "இவரால் பாடப்பட்ட இருவரும் சோணாட்டிலும் அதற்கு வடக்கில் கண்ணதாய தொண்டை நாட்டிலும் அரசோச்சியவராதலின் உருத்திரங்கண்ணனார் சோணாட்டைச் சேர்ந்தவராவர்"[45] என்பார். ந.சஞ்சீவி அவர்கள் "கடியலூர் பாண்டி நாட்டில் திருநெல்வேலிக்கு அருகில் உள்ளது"[46] என்கிறார். "உ.வே.சாமிநாதையரின் கருத்தும் இதனை ஒத்துள்ளது."[47] இதனால் கடியலூர் பாண்டி நாட்டிலுள்ளது என்பது தெளிவாகிறது. இப்புலவர் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.
(குறுந்.352, அகநா.167, பட்டினப்பாலை பெரும்பாணாற்றுப்படை)

**கணியன்பூங்குன்றனார்**

கணியன் என்னும் சொல் சோதிடத்தில் வல்லோன் என்னும் பொருள் தருவதாகும். இதனை "விளைவெல்லாங் கண்ணி யுரைப்பான் கணி எனப் புறப்பொருள் வெண்பாமாலை குறிப்பிடுகிறது."[48] "பூங்குன்றம் என்பது சிறுநாடொன்றின் தலைநகர்"[49] என்பதை நாலடியார் உணர்த்துகிறது. இன்றைய சிவகங்கையில் உள்ள "மகிபாலன்பட்டி எனும் ஊருக்கருகில் கிடைத்துள்ள சாசனங்களில் இவ்வூர் பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமெனக் குறிக்கப்பட்டுள்ளது"[50] என்று பாலசாரநாதன்

தெளிவுறுத்துகிறார். இப்புலவர் தம் தொழிலாலும், தாம் வாழ்ந்த ஊராலும் இப்பெயர் பெற்றுள்ளார். இவர் இரு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.226, புறநா.192)

**கபிலர்**

பண்டையப் புலவர்களுள் அதிகமான பாடல்களைப் பாடியவர் கபிலர். 'நல்லிசை வாய்மொழிக் கபிலர்', 'வெறுத்த வேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' எனப் போற்றப்பட்டவர். வ.சுப.மாணிக்கனார் "பலரைப் பாடிய பெருமையோடு பலரால் பாடப்பட்ட பெருமையும் உடையவர் கபிலர் என்பது இவரது புலமைக்கும் சிறப்பிற்கும் சான்றாகிறது என்பர்."[51] இவர் பாரியின் உற்ற தோழர். "இருதலைப் புள்ளின் ஓருயிர் என்னும் அரிய உவமையே கபிலருக்கும் பாரிக்கும் இருந்த நட்பின் திறத்தில் பிறந்ததாய் இருக்கலாம்"[52] என்பது இவ்விருவரின் நட்பின் மேன்மையை உணர்த்துகிறது. பாரி இறந்தபின் தன் மீளாத்துயரை எட்டுக் கையறுநிலைப் பாடல்களில் பாடியுள்ளார். இப்புலவர் பாரியின் மகளிரை நல்வாழ்க்கைப்படுத்த நினைத்துத் தன்னைத் தந்தையாக எண்ணியுள்ளதை இவரது புறப்பாடல் இருநூற்றி ஒன்று புலப்படுத்துகிறது.

குறிஞ்சி நிலச்சிறப்பைக் குன்றிலிட்ட விளக்காகக் காட்சிப்படுத்துவதால் 'குறிஞ்சிக் கபிலர்' எனப் போற்றப்பட்டுள்ளமைத் தெரிகிறது. பாண்டிய நாட்டுப் புலவர்களில் மிகுதியான பாடல் பாடியவர். நிறைந்த கல்விப்புலமைக்கும், வாழ்ந்த நிலப்புலமைக்கும், நட்புச் சிறப்பிக்கும் எக்காலமும் தமிழ் நிலத்தில் நிலைத்திருக்கும் புலவர்.

பறம்பு மலையின் சிறப்பைப் புறப்பாடல்களில் புனைந்தவர். பலதிறத்தோடு குறிஞ்சியின் இயற்கையை மக்களின் வாழ்வியல் இயல்புக்கு ஏற்ப பல பாக்களில் விரித்துரைத்துள்ளார். கபிலர் 234 பாடல்களைப் பாடியுள்ளார். 197 பாக்கள் அகம் சார்ந்தவை. அவற்றுள் 161 பாக்கள் குறிஞ்சித் திணைக்குரியவையாகும்.
(நற்.1, 13, 32, 39, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376, குறுந்.13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 264, 288, 291, 312, 355, 357, 361, 385, ஐங்.201-300, பதிற்.61-70, குறி.கலி.37-65,

அகநா.2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182, 203, 218, 238, 248, 278, 292, 318, 332, 382, புறநா.8, 14, 105-111, 113-124, 143, 200-202, 236, 237, 374 பத்துப்பாட்டுள் - குறிஞ்சிப்பாட்டு)

**கிள்ளி மங்கலங்கிழார்**

கிள்ளி கிழார் என்றும் சில பிரதிகளில் காணப்படுகிறது, “கிள்ளி மங்கலம் என்ற ஊர் பாண்டிய நாட்டைச் சார்ந்தது.”[53] பனிக்காலத்தில் அசையும் சேம்பின் இலை பெருங்களிற்றுச் செவிக்கும், கருவிலை மலர் மலிற்பீலியன் ஒள்ளிய கண்ணுக்கும், தாய்முகம் நோக்கி வளரும் ஆமையின் பார்ப்பு, தலைவனைக் கண்டு வளரும் காமத்திறகும் உவமைகளாய் (குறுந்.76, 110, 152) அமைந்துள்ளன. இப்புலவர் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.
(குறுந்.76, 110, 152, 181)

**கிள்ளி மங்கலங்கிழார் மகனார் சோகோவனார்**

“கோவன் என்னும் இயற்பெயர் பெற்றவர். ‘சோ’ என்பது அடைமொழியாக இருக்கலாம் என்று புலவர்கள் கருதுகின்றனர்”[54] “‘சோ’ என்பதற்கு அரண், நகர், மதில்”[55] எனப் பொருள் உள்ளமையால் நாட்டின் பாதுகாப்போடு தொடர்புடையவர் என்பது பெறப்படுகிறது. இப்புலவர் கிள்ளி மங்கலங்கிழாரின் மகனாவார். சோ என்னும் அடைமொழி, கோவன் என்னும் பெயரோடு சிறப்பு ஆர் விகுதி பெற்று ‘சோகோவனார்’ எனப் பெயர் விளங்கியமைப் புலப்படுகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(நற்.365).

**குறுங்குடி மருதனார்**

மருதனார் என்பது இவரது இயற்பெயராகும். “குறுங்குடி பாண்டி நாட்டிலுள்ளதோர் ஊர்.”[56] இத்தொடர் இவர் பாண்டிய நாட்டினர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. மருதனார் என்ற வேறுபுலவரிலிருந்து தனித்துக்காட்ட ஊர்ப் பெயரோடு குறுங்குடி மருதனார் என வழங்கப்பட்டுள்ளார். இப்புலவர் இரு அகப்பாக்களைப் பாடியுள்ளார்.
(அகநா.4, குறுந்.344)

### கோட்டியூர் நல்லந்தையார்

பின்னத்தூர் நாராயணசாமியவர்கள் “நல்லன் தந்தை நல்லந்தையாரென முடியும்”[57] என்கிறார். இவரது மகனால் இவர் பெயர் விளங்கியமை தெரியவருகிறது. கோட்டியூர் பாண்டிய நாட்டில் உள்ளதென்பது “பாண்டி நாட்டகத்தாகிய திருக்கோட்டியூர்”[58] என்னும் கருத்தால் தெளிவாகிறது. இந்நிலையில் இவரது இயற்பெயர் விளங்கப்பெறாமல் மகனது பெயரால் அழைக்கப்பட்டமைப் புலனாகிறது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(நற்.211)

### கோளியூர் கிழார் மகனார் செழியனார்

செழியனார் என்னும் இயற்பெயருடைய இவர் வேளாண் மரபினர் என்பதை அறியமுடிகின்றது. இவர் கோளியூரை வாழிடமாகக் கொண்ட நிலக்கிழாரின் மகனாவார். “குறுங் கோழியூர் கிழார்”[59] எனவும் வழங்கப்பெற்றுள்ளார். ஊரோடும் தந்தை பெயரோடும் இணைத்து அழைக்கப்பட்டமைத் தெரியவருகிறது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(நற்.383)

### கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்

ஔவை.துரைசாமிப்பிள்ளை, “கோனாடு என்பது புதுக்கோட்டைப் பகுதியில் ஓடும் வெள்ளாற்றின் கரை சேந்த நாடு... இக்கோனாடு வடகோனாடு, தென்கோனாடு, கீழ்கோனாடு என்று மூவகைப்படும். குமரனாருடைய எறிச்சலூர் கீழ்க்கோனாட்டில் உள்ளது. இந்நாடு இப்போது தஞ்சை சில்லாவில் உள்ள அறந்தாங்கித் தாலுகாவில் மேலைப்பகுதியாக இருக்கிறது”[60] என்கிறார்.

புதுக்கோட்டை என்று வழங்கப்படும் கோனாட்டில் உள்ள எறிச்சலூரைப் பூர்விகமாய்க் கொண்டவர் மாடலன். இதனைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் என்பது உணர்த்துகிறது. இவரது மகனார் குமரனார் மதுரைக்கு வந்து வாழ்ந்த புலவராவார். இதனை “மதுரையில் குடியேறி வாழ்ந்தவராதலின் மதுரைக் குமரனார் எனப்பட்டார்”[61] என்கிறது

தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம். ஆகையால் கோனாட்டு எறிச்சலூர் மாடலனின் மகனாய் மதுரையில் குடியேறி வாழ்ந்தவர் என்பதும் இவரது இயற்பெயர் குமரனார் என்பதும் அறியப்படுகிறது. ஆறு புறப்பாடல்கள் இவர் பாடியனவாகும்.

(புறநா.54, 61, 167, 180, 197, 394.)

**செங்கண்ணனார்**

இவர் கண்ணனார் என்னும் இயற்பெயரையுடையவர். மதுரைச் செங்கண்ணனார் என்றும் வழங்கப்படுவார். “செங்கண்ணனார் சிவந்த கண்களையுடையவர் என்ற முறையில் இப்பெயர் பெற்றிருக்கலாம்”[62] என்னும் இக்கருத்தை வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிவுகளில், உறுப்பால் பெயர் பெற்றவர் என்னும் வரிசையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகையால் கண்ணனார் தம் சிவந்த கண்களால் செங்கண்ணன் ஆனார் என்பது புலனாகிறது. இப்புலவர் இரு அகப்பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.122, அகநா.39.)

**சேந்தங்கண்ணனார் மதுரை சேந்தங்கண்ணனார்**

இவரது இயற்பெயர் கண்ணனார். சேந்தன் என்பது தந்தையின் பெயராகும் என்பதைச் “சேந்தனுக்கு மகனாகிய கண்ணனார். சேந்தங்கண்ணனார்”[63] என்னும் சொற்றொடர் மெய்ப்பிக்கின்றது. இவர் இரு அகப்பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.54, அகநா.350)

**சேந்தம் பூதனார்**

சேந்தனுடைய மகன் சேந்தம் பூதனார் எனவும் மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் எனவும் வழங்கப்படுவார். “சேந்தங்கண்ணனார், சேந்தங்கீரனார், சேந்தங்கூத்தனார், சேந்தங்கொற்றனார் என்ற பெயருடைய வேறு சங்கப் புலவர்களும் உண்டு.”[64] இவரது தனித்திறத்தையும், இவர் பாண்டிய நாட்டினர் என்பதையும் ‘மதுரை எழுத்தாளன்’ என்னும் புனைப்பெயர் அடையாளப்படுத்துகிறது. “இயற்பெயரின்றி ‘மதுரை எழுத்தாளன்’ என வழங்கும் அளவிற்கு சிறந்து விளங்கியுள்ளார்”[65]

என்பது இவர் புலமைக்குச் சான்றாகிறது. இப்புலவர் ஏழு அகப்பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.69,261, குறுந்.90,226,247, அகநா.84,207)

**தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்**

"தங்கால் என்பது திருத்தண்காலென இக்காலத்தில் வழங்கப்படுகின்றது. இது ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகில் உள்ளது. 108 வைணவத் தலங்களுள் ஒன்று."[66] செங்கண்ணன் என வேறொரு புலவரும் இருந்தமையால் இவரை வேறுபடுத்தி ஊரோடு இணைத்துப் பெயர் விளங்கப்பெற்றுள்ளார். இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (நற்.386)

**தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்**

தங்கால் என்னும் ஊரினர். பொற்கொல்லன் என்பதால் இவர் தொழிலால் பொற்கொல்லரென்பது தெரியவருகிறது. "அகம் முதலாய சில ஏடுகளிலும் பொற்கொல்லனென்பது பிறழ்ந்து பூட்கொல்லனென்றும் பூட்கொற்றனென்றும் (அகநா.48) எழுதப்பட்டுள்ளது."[67] திருத்தண்காலில் இருந்து இவர் மதுரைக்கு வந்து வாழ்ந்தவர் என்பதால் தங்கால் என்று ஊராலும், பொற்கொல்லன் என்று தொழிலாலும் இணைந்து இவர் பெயர் சிறந்துள்ளமை உணரப்படுகிறது. உ.வே.சா. "முடக்கொல்லனார்"[68] என்று குறித்துள்ளார். இவர் பாடியனவாய் ஐந்து பாடல்கள் மேற்கூறிய இருவராலும் குறிப்பிடப்படுவதால் இப்பெயர்களுக்குரியவர் ஒருவரென்பது பெறப்படுகிறது. இப்புலவர் ஆறு பாடல்கள் பாடியுள்ளார்.

(நற்.313, குறுந்.217, அகநா.48,108,355, புறநா.326.)

**நக்கீரர்**

இவர் கடைச்சங்க காலத்தவர் என்பதும், மதுரைக் கணக்காயனாரின் மகனென்பதும் அறியமுடிகின்றது. கீரன் கொற்றனார் இவரின் மகனாவார். "கீரர் என்பது குலப்பெயர். அக்குலம் சங்கு அறுக்கும் குலம்"[69] என்கிறார் அ.மாணிக்கம். "எல்லா நிலங்களிலுஞ்சென்று அவற்றின் இயற்கையமைப்பை ஆராய்ந்து அவ்வந் நிலங்களிலே பிறந்து வளர்ந்தவரினும் வல்லவராய்ச் செய்யுளியற்றும் ஆற்றல் வாய்ந்தவர்"[70] என்பதால் இவரது புலமை விளங்கப்பெறுகிறது.

இவரது பனுவல்களில் முல்லைநிலப் பாடல்கள் இடம்பெறவில்லை. கீரர் என்ற இயற்பெயரை 'ந' என்னும் சிறப்புச் சொல் இணைந்து நக்கீரர் ஆனது பெறப்படுகிறது. இவரது பாக்கள் மூவேந்தர்களின் வரலாற்றுச் செய்திகளையும், இயற்கையின் இயக்கங்களையும் வெளிக்கொணர்கிறது. பத்துப்பாட்டுள் முருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்னும் பாடல்களோடு முப்பத்தாறு பாடல்கள் இவர் பாடியனவாகும்.
(நற்.31, 86, 197, 258, 340, 358, 367 குறுந்.78, 105, 143, 161, 266, 280, 368, அகநா.36, 57, 78, 93, 120, 126, 141, 205, 227, 249, 253, 290, 310, 340, 346, 369, 389, புறநா.56, 189, 395)

**நல்வழுதியார்**

வழுதி என்னும் பாண்டியரின் பரம்பரைப் பெயரும், இவரது மதிப்பை உணர்த்தும் 'ஆர்' விகுதியும் இப்புலவர் பாண்டிய மரபினர் என்பதைக் காட்டுகின்றது. உலக இயக்கத்திற்குப் பேருதவி செய்யும் வையை ஆற்றின் நன்மைகள் இவரால் பாடப்பட்டுள்ளன. இப்புலவர் அகமும், புறமும் கலந்த ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(பரி.12)

**படுமரத்து மோசிகீரனார்**

கீரன் என்னும் இயற்பெயருடைய இவரை பிரித்தறிதலின் பொருட்டு சொந்த ஊரையும், வாழ்ந்த ஊரையும் இணைத்துப் பெயர் பெற்றுள்ளமை தெரிகிறது. "மோசியினின்று படுமரம் போந்து வாழ்ந்தவராதலின், இவர் படுமரத்து மோசிகீரனார் என்று அழைக்கப்பெற்றார்"[71] என்பது கா.கோவிந்தனின் கூற்றாகும். "படுமரத்து மோசி கொற்றனாரும் இவரும் சகோதரர்களாக இருக்கலாம்"[72] என்ற கருத்துமுள்ளது. இப்புலவர் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார்.
(குறுந்.33, 75, 383)

**படுமரத்து மோசிகொற்றனார்**

படுமரத்து மோசி கீரனாரும் இவரும் ஒரே ஊரினர். கொற்றனார் என்னும் பெயருடைய இவரும் மோசி என்னும் ஊரிலிருந்து படுமரம் வந்து

வாழ்ந்தமையால் இப்பெயர் பெற்றுள்ளமைத் தெரிகிறது. இப்புலவர் ஒரு பாடலை மட்டும் பாடியுள்ளார்.

(குறுந்.376)

**பாண்டியன் அறிவுடைநம்பி**

அறிவுடை நம்பியும், பாண்டியன் அறிவுடை நம்பி என்பவரும் ஒருவரேயாவார். இவர் கடைச்சங்கப் புலவர் என்பதை அறியமுடிகின்றது. புறநானூற்றுப் பாடலிலும், நற்றிணைப் பாடலிலும் ஒத்த பொருள் இடம் பெற்றிருத்தல் குறிப்பிடத்தக்கது. இவ்விரு பாடல்களிலும் "குழவியின் இன்றியமையாமை கூறப்பட்டுள்ளது."[73]

தலைவியின் நாணமிழந்த பெண்மையை, குழவியைப் பழியிடக் கொடுப்பதோடு ஒப்பிடுதல்; குழந்தையில்லாத ஒருவரின் வளமையும், வாழ்வும் பயனற்றது என்பது முதலான கருத்து ஒற்றுமையாலும், பெயர் ஒற்றுமையாலும் இரு பாடல்களையும் ஒருவரே பாடியுள்ளமைப் புலப்படுகிறது. பிசிராந்தையார் இவ்வரசனுக்கு பொருண்மொழிக்காஞ்சி பாடியுள்ளதால் இருவரும் சமகாலத்தவர் என்பது புலனாகிறது. இவர் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.15, குறுந்.230, அகநா.28, புறநா.188)

**பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்**

பாண்டிய நெடுஞ்செழியன் அரச புலவராவார். "இவன் ஓர் ஆரியப் படையை வென்றதால் இப்பெயர் பெற்றான்"[74] என்பது தெரிகிறது. சிலம்பின் நாயகன் கோவலனைக் கொல்வித்து முத்தமிழ்க் காப்பியம் உருவாக மூலக்காரணமாய் இருந்தவனும் இவனாவான் என்பதை,

> **"வடவாரியர்படை கடந்து**
> **தென் தமிழ்நாடு ஒருங்கு காணப்**
> **புரைதீர் கற்பின் தேவிதன்னுடன்**
> **அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்**
> **நெடுஞ்செழியன்"[75]**

என்னும் சிலம்பின் அடிகள் உணர்த்துகின்றன. இவரது செங்கோற் சிறப்பும், வட ஆரியரை புறங்கண்டு ஓடச்செய்த வீரமும் அறியப்படுகிறது. கற்றலைப் பெரும்பயனாகக் கருதியதையும், கற்றோரை மதித்ததையும் இவர்தம் பாடல் உணர்த்துகின்றது. இது பாண்டியர் கல்வியைப்

போற்றியதற்குச் சான்றாதாரமாய்த் திகழ்கிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(புறநா.183)

**பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்**

ஏனாதி என்பது வேந்தனால் சேனாதிபதிக்குக் கொடுக்கும் பட்டமாகும். இதனை "ஏனாதி என்பது வேந்தனாற் கொடுக்கப்படும் பட்டப்பெயர்களுள் ஒன்று. சேனாதிபதிகட்கு வழங்கப்படும் பட்டம் இது"[76] என்பது உணர்த்தும். இப்புலவர் பாண்டியனின் சேனைத்தலைவனாய் இப்பெயர் பெற்றுள்ளார். இப்பதவியின் பெருமையை விளக்குமாறு இவரது "அகநானூற்றுப் பாடலில் போரின் காரணமாக அழிந்து போன பொதுமன்றம், மான்களுக்கு இடமாவது குறித்த புனைவுகள் இடம்பெற்றுள்ளன. வேந்தர் பலர் சூழ்ந்துகொள்ள ஒற்றை மதிலில் இருந்து கலங்கும் மன்னன் குறித்தும் புனைந்துள்ளார்."[77] இக்கூற்று இப்புலவரின் போர் அனுபவத்தைப் பறைசாற்றுகிறது. இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

(குறுந்.156, அகநா.373)

**பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்**

இவர் அரச புலவராவார். "இளமைப் பருவத்தில் தலையாலங் கானத்தில் கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையோடு போர் செய்து அவனைச் சிறைப்படுத்தியது தெரியவருகிறது."[78] ஏழு பகையரசர்களை வென்று முத்தூர்க் கூற்றத்தையும், மிழலைக் கூற்றத்தையும், பாண்டியராட்சியில் இணைத்த வீரத்தினன். தமிழ்ப்பற்று மிக்கவன் என்பதனை "மறக்கள வேள்வியும், அறக்கள வேள்வியும் செய்தான். செய்யுள் யாத்தலில் வல்லவன், புலவர்களிடத்து மிக்க அன்புள்ளவன்"[79] என்னும் கருத்து மெய்ப்பிக்கிறது. இவ்வரசப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (புறநா.72)

**பாண்டியன் மாறன்வழுதி**

இவர் பாண்டிய அரச மரபினர். மாறன்வழுதி எனவும், பாண்டியன் மாறன்வழுதி எனவும், பன்னாடு தந்தான் பாண்டியன் எனவும்

வழங்கப்பெற்றமைப் புலப்படுகிறது. இவ்வரசப் புலவர் நற்றிணையைத் தொகுப்பித்தவரும், அதனுள் 97, 301 என்னும் இரு பாடல்களைப் பாடியவரும் ஆவார். குறுந்தொகை 270-ஆவது பாடலைப் பாடியவர் பெயர் பாண்டியன் பன்னாடு தந்தார் என இடம்பெற்றுள்ளது. பாண்டியர் வரலாறும், சங்ககால அரசர்கள் குறிப்பும், நற்றிணையைத் தொகுப்பித்தவரின் பெயர்ப் பொருத்தமும் "பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி"[80] என்பதை இணைத்து வழங்குவதால் இப்பெயர்கள் ஒருவருக்குரியது என்பது தெளிவாகிறது. மாறன், வழுதி எனும் பாண்டியரின் இரு குடிப்பெயரோடு இணைந்து பல நாடுகளை வெற்றிகொண்டு பாண்டியராட்சியைச் சிறப்பித்துள்ளார். இப்புலவர் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.97,301 குறுந்.270)

**பாரி மகளிர்**

பாரி கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய சிற்றரசன். பறம்பு மலையை ஆட்சி செய்தவர். நட்பிற்கு இலக்கணமாய்த் திகழும் கபிலரின் நண்பர். இவ்வரசனின் மகளிர் இயற்பெயர் விளங்கப்பெறாமல் பாரி மகளிர் என வழங்கப்பட்டுள்ளர். இதனை "அவனுக்கு இரண்டு புதல்வியருண்டு"[81] என்பது உணர்த்தும். இவர்களது 'அற்றைத் திங்கள்' என்னும் புறப்பாடல் பறம்பு நாட்டின் சிறப்பையும், தந்தையின் பிரிவுத் துயரையும், மூவேந்தரின் சூழ்ச்சியையும் ஒருங்கே விளக்கும் ஒப்பற்ற திறத்தினதாகும். இவர்கள் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளனர். (புறநா.112)

**பிசிராந்தையார்**

"இவர் பாண்டி நாட்டுப் பிசிர் என்னுமூரிலுள்ள ஆதன் தந்தையார்"[82] என்கிறார் பின்னத்தூர் நாராயணசாமி. இவரது இயற்பெயர் விளங்கப்பெறாமல் ஆதன் என்பானின் தந்தையார் என்பதும் ஊர்ப்பெயரும் இணைந்து பிசிராந்தையார் என்று பெயர் பெற்றுள்ளார். பரிமேலழகர் 785 ஆம் குறள்விளக்கத்தில் "கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சியொப்பின், அதுவே உடன் உயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும்"[83] என்கிறார். இதன் மூலம் இவரது நட்பின் சிறப்பு வெளிப்படுகிறது. இவர் ஆறு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.91, அகநா.308, புறநா.67, 184, 191, 212)

**பெருங்குன்றூர்க்கிழார்**

'நிலக்கிழார்' என்னும் சொல் வேளாளரைக் குறிப்பதால் இவர் வேளாண் மரபினராவார். இவரது பனுவல் பெரும் பரிசைப் பெற்றுத் தந்ததோடு, பிரிந்திருந்த மன்னனையும் மாதரசியையும் சேர்த்து வைத்த பெருமைக்குரியதாகும். வையாவிக்கோப்பெரும் பேகனிடம் சென்று, அவனைப்பாடியவர்; தமக்குரிய பரிசாய் மன்னனின் மனதை மாற்றி, அவனது இல்லற வாழ்வை இனிதாக்கினார். இதனை, புறநானூறு நூற்றிநாற்பத்து ஏழாம் பாடலில் "நீ நின் மனைவியை மீட்டுக் கொள்வதே எமக்குப் பரிசில் கொடுத்ததாகும்"[84] என்பதால் அறியப்படுகிறது. இப்புலவர் இருபத்தொரு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.5, 112, 119, 347, குறுந்.338, அகநா.8, பதிற்றுப்பத்துள் 9-வது பத்து (81-90), புறநா.147, 210, 211, 266, 318)

**பெருங்கோப்பெண்டு**

இப்பெண்பாற் புலவர் அரசமாதேவியார். ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனின் மனைவியாவார். "பாண்டி நாட்டின் வடஎல்லை ஒல்லையூர் நாடு. கல்வியில் சிறந்த இவர் தன் கணவனைப் பிரிந்து வாழ விரும்பாது தீப்பாய முயன்றார். தடுத்த பெரியோரைப் பார்த்து 'பல்சான்றீரே பல்சான்றீரே' எனும் பாடலைப் பாடிப் பின்னர் தீயில் பாய்ந்து இறந்தார்"[85] என்று கா.கோவிந்தன் கூறுகிறார். இப்பெண்ணரசி இறப்பை வேண்டி இப்பனுவலைப் படைத்துள்ளது புலப்படுகிறது. கைம்மை நோற்பது எப்பெண்ணுக்கும், பட்டத்தரசிக்கும் பொதுமையானதும், கொடுமையானதும் என்பதை இவரது பாடல் புலப்படுத்துகின்றது. **சூழலின் உந்துதலால் ஆழ்மனதின் ஊற்றாய் இப்பனுவல் கிடைத்துள்ளமைப் புலப்படுகிறது.** இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(புறநா.246)

**பேராலவாயர்**

மதுரைப் பேராலவாயர் எனவும் வழங்கப்படுகிறார். பூதப்பாண்டியன் இறந்த பிறகு தானும் இறக்க விரும்பி தீப்பாயும் பெருங்கோப்பெண்டின் நிலைகண்டு இவர் பாடிய புறப்பாடல் மனதை நெகிழ்விப்பதாகும். இதனை,

**"..........நன் கொழுநன்**
**முழவு கண் துயிலாக் கடியுடை வியல்நகர்ச்**
**சிறுநனி தமியள் ஆயினும்**
**இன் உயிர் நடுங்கும்"** (புறநா.247:1-10)

என்ற அடிகளால் அறிந்துகொள்ள முடிகிறது. இவர் ஆறு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.51,361, அகநா.87, 296, புறநா.247,262)

**பொதும்பில் கிழார்**

"பொதும்பில் பாண்டி நாட்டிலுள்ள தோரூர்: மதுரைத் தாலுகாவிலுள்ளது. இப்பொழுது பொதும்பு என வழங்குகிறது."[86] இதனால் இவரது இயற்பெயர் வழங்கப்படாமல் பொதும்பில் என்னும் ஊர்ப்பெயரும் வேளாண் தொழிற்பெயரும் இணைந்து இவர் பெயர் விளங்கியது தெரிகிறது. ஒரு பாடல் மட்டும் இவர் பாடியதாகும்.

(நற்.57)

**பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார்**

இப்புலவர் வெண்கண்ணியார் என்னும் இயற்பெயரையுடையவர். மேற்கூறிய பொதும்பில் கிழாரின் மகனாவார். **வெண்கண்ணி என்னும் இகர ஈற்றைக் கொண்டு முடிந்திருந்தபோதும் உறவுப் பெயரடையாய்ப் பொதும்பில் கிழார் மகனார் என்றிருந்தமையால் ஆண்பாலர் என்பது தெளிவாகிறது.** பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் என அகநானூற்றுப்பாடல் குறிக்கிறது. இவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனைப் பாடியுள்ளதால் இருவரும் சம காலத்தினர் என்பதும் புலப்படுகிறது. இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.375,387)

**பொதும்பில் புல்லாளங் கண்ணியார்**

இப்புலவர் மேற்கூறிய பொதும்பில் என்னும் ஊரினர். இவ்வூரில் மூன்று புலவர்கள் வாழ்ந்தமைப் புலப்படுகிறது. இகர ஈற்றுவிகுதி இவரைப் பெண்பாலரென உணர்த்துகிறது. கார்காலத்தால் காடு வளம்பெற்றதையும், பிடவமலர்களால் முல்லை நிலம் அழகுற்றதையும் குறித்துள்ளார். இப்பெண்பாற்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார். (அகநா.154)

**மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்**

“அளக்கர் ஞாழல் என்பது ஓர் ஊர். மள்ளர் என்பது வீரரைக் குறிக்கும் சொல். பாண்டிய அரசரால் முதலில் இவர் பாதுகாக்கப்பெற்றவர்... இவர் சேனைத்தலைவர் என்பதற்கு இசைய தம் பாடல்கள் சிலவற்றில் போர்க்களத்தில் பெறும் வெற்றியைச் **செல்வம்** என்று குறித்திருக்கிறார்”[87] என்பதால் இவரது போர்த்திறம் புலப்படுகிறது. “தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன், புலவர் பலர் போன்று வாழ்ந்தவன்”[88] என்பதால் இவரது எளிய வாழ்வும் புலமைச் சிறப்பும் புலப்படுகிறது. இப்புலவர் பதின்மூன்று பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்..82, 297, 321, குறுந்.188, 215, அகநா.144, 174, 244, 314, 344, 353, 33, புறநா.388)

**மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்**

இப்புலவர் ஆடை விற்கும் வணிகராவார். இளவேட்டனார் எனும் பெயரிலும் இவரது பாடல்கள் இடம் பெற்றுள்ளன. “மதுரையில் மாண்புற்று அங்காடியில் அமர்ந்து இத்தகைய போற்றுதற்குரிய அறுவை வாணிகம் மேற்கொண்டு வாழ்ந்து மேன்மையுற்றவர்”[89] என்பது கா.கோவிந்தனின் கருத்தாகும். ‘ஆடை விற்பகம்’ அக்காலத்தே மிகவும் போற்றுதற்குரிய தொழிலாய்த் திகழ்ந்தமைப் புலனாகிறது. இவர் பன்னிரெண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.33, 157, 221, 344, குறுந்.185, அகநா.56, 124, 230, 254, 272, 302, புறநா.329)

**மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார்**

இப்புலவர் மதுரை ஆசிரியர் எனப் பெயர் பெற்றதால் பாண்டிய நாட்டினர் என்பது தெளிவாகிறது. இப்பெயரால் இவருடைய கற்பித்தல் தொழிலும் புலப்படுகிறது. இவர் மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாக ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(குறுந்.144)

**மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார்**

இவரது இயற்பெயர் கௌசிகனார். “இளங்கண்ணியென்பது இவரின் தந்தை பெயர்”[90] என்கிறார் ஔவை.துரைசாமிப்பிள்ளை. இவர்

தொலைவிலிருந்தே அஞ்சத்தூண்டும் வீரனை நல்லபாம்புப் புற்றுக்கும் கொல்லும் தன்மையுடைய ஏறுக்கும் உவமித்துள்ளார். இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.
(புறநா.309)

**மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்**

கூத்தனார் என்னும் இயற்பெயருடைய இவர் "கூத்தின் வகையொன்றிற்கு ஆசிரியராய் இருந்துள்ளார் என்பது தெரியவருகிறது. சேந்தன் என்பது தந்தையின் பெயராக இருக்கலாம். இயற்பெயர் கூத்தனார் என்பதாகும். இவர் தன்னூரில் இருந்து மதுரை சென்று கூத்தின் வகை ஒன்றனுக்கு ஆசிரியராகத் திகழ்ந்தார். தில்லையுரையும் கடவுள் கூத்தனாரின் பெயரைத் தம்பெயராகக் கொண்டவர்"[91] என்கிறார் க.கோவிந்தன். மேற்கூறிய தொடரால் தில்லைக்கூத்தன் போலவே ஆடற்கலையில் சிறந்துள்ள இவரது புலமைப் புலனாகிறது. இவர் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.273, அகநா.102, 348)

**மதுரை ஓலைக்கடைக் கண்ணம் புகுந்தராயத்தனார்**

"மேலைக்கடையமென்பது தென்பாண்டி நாட்டிலுள்ளதோரூர். இவ்வூர் நல்லிசை சான்றோர் பலர் பிறந்த சிறப்புடையது. கடையம் என்பது குறைந்து கடையெனச் சுருங்கிற்று... மேலைக்கடையத்தார் எனற்பாலது மதுரையோலைக்கடையத்தாரென ஏடெழுதினோரால் பிழைக்கப்பட்டுள்ளது. இக்கடையத்தைச் சார்ந்த ஒரு குடியினர் மதுரையிற்றங்கிருந்தமையின் அவர் மதுரை மேலைக்கடையத்தாரென வழங்கப்பட்டுள்ளார்"[92] என்று ஔவை துரைசாமிப்பிள்ளை கூறுகிறார். இக்கருத்துக்களால் இப்புலவர் பாண்டிய நாட்டினர் என்பது தெளிவாகிறது.
(புறநா.350)

**மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்**

"இவர் பெண்பாலரென் றூகிக்கப்படுகின்றது. நிறையடு காமம் சிறையடு கடும்புனலோ டொத்த என்னும் வரிகள் வியக்கத்தக்கது"[93] என்கிறார் நாராயணசாமியவர்கள். நற்றிணை முந்நூற்று அறுபத்தொன்பதாம் பாடலில் கங்கையாற்றின் கரையுடைக்கும்

பெருவெள்ளம் போன்றது நான் கடத்தற்கரிய காமம் (நற்.369:10-11) என்கிறார். நற்றிணை இருநூற்றி ஐம்பதாம் பாடலில் ஊடலுக்குத் தன்பிள்ளையைத் துணைக்கழைத்து வரும் தலைவனை (யாரை யோவென்று) சினந்து வினவுதல் பெண்ணின் உரிமைக்குரலாய் பெறப்படுகிறது. இக்கருத்து இப்புலவர் பெண்பாலரென்பதை உணர்த்துகிறது. இவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.250, 369)

**மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகனார்**

இவ்வூர் "மேற்கடையம், கீழ்க்கடையம் என வழங்கப்படுகின்றன. இது 'கோனாட்டு விக்கிரமபாண்டிய நல்லூரான கடையம்' என்றும், 'கோனாட்டுக்கடையம் என்றும் வழங்கப்பெற்றுள்ளன."[94]

கடையம் என்பது தென்பாண்டி நாட்டிலுள்ள ஓர் ஊர் என்பதும், இப்புலவர் இவ்வூரிலிருந்து மதுரை சென்று வாழ்ந்தவர் என்பதும் அறியப்படுகிறது. பிறந்த ஊராலும், வாழ்ந்த ஊராலும் இணைந்து இப்புலவர் பெயர் விளங்கியுள்ளது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (குறுந்.223)

**மதுரை கணக்காயனார் (தத்தன்)**

கணக்காயனார் என வழங்கப்படும் இப்புலவர் கல்வி கற்பிக்கும் ஆசிரியராவார். குறுந்தொகை முன்னூற்றி நான்காம் பாடல் கணக்காயன் தத்தன் என்கிறது. இதனால் இயற்பெயர் தத்தன் என்பதை அறியமுடிகிறது. கா.கோவிந்தன் "தமிழரிச்சுவடிக்குத் தமிழ்க்கணக் கென்றும், நெடுங்கணக் கென்றும் பெயருண்டு: ஆயம்-கூட்டம்; கூட்டமாகப் பிள்ளைகளைச் சேர்த்து வைத்துத் தமிழ்க்கணக்கைப் பயிற்றுவித்ததால் உவாத்தியர் கணக்காயரெனப்பட்டார்"[95] என்கிறார். இப்புலவர் ஆறு பாடல்களைப் பாடியுள்ளார்.
(அகநா.338, 342, 27, நற்.23, குறுந்.304, புறநா.330)

**மதுரைக் கண்டரதத்தனார்**

இப்புலவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பது இப்பெயரடையால் விளங்கப்பெறுகிறது. பனிக்காலத்தில் வடதிசையிலிருந்து வரும்

வாடைக்காற்றுக்கு அழிந்த மேகம் தென்திசை நோக்கிச் செல்லும் என்பதை இப்புலவர் பாடியுள்ளார். இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.
(குறுந்.317)

**மதுரைக் கண்ணனார்**

இவரது இயற்பெயர் கண்ணனார். கண்ணனார் எனப் பலரிருப்பின் மதுரைக் கண்ணனார் எனப் பெயர் பெற்றுள்ளார். மதுரை எனும் ஊரடை இப்புலவர் பாண்டிய நாட்டினர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

பொருள்வயிற் பிரிந்து மீண்டுவந்த தலைவனோடு தலைவி இன்புறுகிறாள். தம்மை எழுப்பிய சேவலை, பிள்ளைவெருகிற்கு நீண்டநாள் உணவாகுக என்பது இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(குறுந்.107)

**மதுரைக் கண்ணத்தனார்**

மதுரையை இடமாகக் கொண்டு வாழ்ந்தவர். இவரும் மதுரைப் புலவர்களுள் ஒருவராவார். இவர் பனுவலில் "அந்திமாலையில் மேலைக் கடல் சங்கர நாராயண அவதாரத்தின் தோற்றம் போன்றது என்பது வியக்கத்தக்கது"[96] என்று பின்னத்தூர் நாராயணசாமி குறிப்பிட்டுள்ளார். இவரது பாடலில் செக்கர் வானமும், நீலக்கடலுமாய் சிவனும் திருமாலும் காணப்படுகின்றனர். இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.351, அகநா.360)

**மதுரைக் கதக்கண்ணனார்**

கண்ணனார் என்பது இவரின் இயற்பெயராதலால் வேறுபடுத்திக் காட்டும்பொருட்டு கதக்கண்ணனார் எனப்பட்டுள்ளார். "கோபமிக்க கண்களையுடைவர்"[97] என்பது இவர் உறுப்பால் பெயர்பெற்றுள்ளதை உணர்த்துகிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.
(குறுந்.88)

**மதுரைக் கவுணியன் பூதத்தனார்**

இயற்பெயர் பூதத்தனார். "ஆரிய வழிவந்த அந்தணராவார். கௌணிய கோத்திரமாதலின் இப்பெயர் பெற்றார்"[98] என்கிறார்

கா.கோவிந்தன். இவரது குலப்பெயரும் ஊர்ப்பெயரும் இணைந்து பெயர் விளங்கியமை புலனாகிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (அகநா.74)

**மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்**

பாண்டிய நாட்டிலுள்ள கடையம் என்னும் ஊரினர். வெண்ணாகனார் இவரது இயற்பெயராகும். "தொண்டை நாட்டில் ஆத்திரையன் போன்ற புலவர் பெருமக்கள் பிறந்த பெருமை வாய்ந்த ஊரான கள்ளில் புகுந்து வந்தமையால் இப்பெயர் பெற்றார்"[99] என்பதும் பொருத்தப்பாடுடையது. இப்புலவர் இருபாடல்களைப் பாடியுள்ளார். (அகநா.170, புறநா.316)

**மதுரைக் காமக்கணி நப்பசலையார்**

இவர் பெண்பாற் புலவர். காமக்கணி பசலையார் எனவும் வழங்கப்படுகிறார். நாராயணசாமி "காமக்கணி காமாட்சி என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு"[100] என்கிறார். இது மொழிபெயர்ப்பல்ல. உலகின் மூத்தமொழியான தமிழின் சொல்லாக்கம் என்பது புலப்படுகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார். (நற்.243)

**மதுரைக் காமக்கணி நப்பாலந்தனார்**

"யாப்பருங்கல மேற்கோளால் நப்பாலந்தனார் சூத்திரமென சில சூத்திரங்கள் காட்டப்படுதலின் யாப்பிலக்கணம் ஒன்று செய்துள்ளார் என்றும் கருதப்படுகின்றது"[101] என்கிறது தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம். இதனால் இவரது இலக்கியப் புலமையோடு இலக்கணப் புலமையும் பெறப்படுகிறது. இவர் பாலந்தனார் என்றும், நப்பாலந்தனார் என்றும் அழைக்கப்பட்டுள்ளார். இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (அகநா.204)

**மதுரைக் காருலவியங்கூத்தனார்**

இவரது பெயர் குறித்து "மதுரை ஆருலாவிய நாட்டுக் கூத்தனார் என்ற பிரதிபேதமும் இருப்பதால் அதனையே பாடமாகக் கொள்ளின் இவர் மதுரையைச் சார்ந்த ஆருலாவிய நாட்டினர் எனக் கருதலாம்"[102] என்பதன் மூலம் கூத்தனார் என்பது தொழிற்பெயரெனவும், இப்புலவரை நன்கறிய

இருவேறு ஊர்ப்பெயர்கள் இணைந்துள்ளமையும் புலப்படுகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(நற்.325)

**மதுரைக் கூத்தனார்**

"இவர் மதுரைக் கடாரத்தனார், மதுரைக் கந்தரத்தனார், மதுரைக் கோடரத்தனார் எனவும் வழங்கப்படுவார்."[103] இவரது இயற்பெயர் இன்னதென சுட்டப்படவில்லை. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(அகநா.334)

**மதுரைத் தமிழ்க்கூத்தனார்**

தமிழ்மொழிக்கு உரிய கூத்தின் வகையால் பெயர் பெற்றவர் எனத்தெரிகிறது. "இவருக்கு கடுவன்மள்ளனார் நாகன்றேவனாரென இருபுதல்வருளர்"[104] என்கிறார் பாலசாரநாதன். இருபுலமைவாய்ந்த புலவர்களின் தந்தையாவார் என அறியப்படுகிறது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(புறநா.334)

**மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்**

மதுரையில் கூலங்களை வாணிகம் செய்தமையால் மதுரைக் கூலவாணிகன் என்றமைத் தெரிகிறது. இவரது இயற்பெயர் சாத்தனாரென்பது புலப்படுகிறது. "இவர் பத்தினிக்கடவுள் கண்ணகியின் வரலாற்றையும் அவள் மேம்பாட்டையும் சேரன்செங்குட்டுவனுக்கு அறிவுறுத்தி, அவனைக் கொண்டு ஒரு கோயில் கட்டுவித்து நித்திய பூசை முதலியன நடக்கும்படி செய்தனர்"[105] என்கிறார் உ.வே.சாமிநாதையர். இவ்வாறு கண்ணகியின் சிறப்பை உலகறியச் செய்த சீத்தலைச்சாத்தனாரின் செயல் போற்றுதற்குரியதாகும். இப்புலவர் பத்துப்பாக்களைப் பாடியுள்ளார்.
(நற்.127, குறுந்.36, 154, 339, அகநா.53, 134, 229, 306, 320, புறநா.59)

**மதுரைக் கொல்லன் புல்லன்**

இப்புலவர் கொல்லர் மரபினர். இதனைக் "கொல்லர் மரபில் பல புலவர்கள் மதுரையில் இருந்தனர்"[106] என்பதன் மூலம் உணரப்படுகிறது.

இவரது பாடலில் நிலம், நீர், நெருப்பு, பெருங்கடல் இவை தம் இயல்பில் மாறினாலும் தலைவி தலைவனுடன் கொண்டுள்ள உறவு மாறாது எனக் காதலை உறுதிப்படுத்துகிறார். இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(குறுந்.373)

**மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்**

இப்புலவர் பொன் ஆபரணங்கள் செய்யும் கொல்லர் ஆவார். இவர்தம் அகநானூற்றுப் பாடலில் "பொலம் செய் காசின்"[107] எனக் கூறியதால் பொற்கொல்லரெனத் தெரிகிறது. இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.285, அகநா.363)

**மதுரைச் சுள்ளம் போதனார்**

இவரது இயற்பெயர் தெரியவில்லை. "இவர் சுள்ளம் போது என்னுமூரிலிருந்து மதுரையையடைந்து வைகியவர்."[108] இதனால் இவரது சொந்த ஊரான சுள்ளம் போதுவிலிருந்து வந்து மதுரையில் வாழ்ந்தது தெரிகிறது, இவ்விருவூரும் இணைந்து இவரது பெயர் விளங்கியமை புலப்படுகிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (நற்.215)

**மதுரைத் தத்தங் கண்ணனார்**

"தத்தன் என்பது இவருடைய தந்தையின் பெயர்"[109] என்பர். இதனால் கண்ணன் என்பது இவரது இயற்பெயரெனத் தெளிவாகிறது. தம் ஊரோடும் தந்தை பெயரோடும் இணைந்து இவரது பெயர் நிலைத்துள்ளமை தெரிகிறது. மதுரை மதிற்புறத்து கமுகு மரம் இவரால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. புதுப்பூக்கள் கவரி போலவும், அப்பூக்களோடு வளரும் முற்றாத பசுங்காய் ஆலங்கட்டியைப் போலவும் உள்ளதென்கிறார். இவ்உவமை, புதுமையும் பொருத்தமும் உடையதாய்க் காணப்படுகின்றது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.
(அகநா.355)

**மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார்**

மதுரை என்னும் அடைமொழி இவரைப் பாண்டிய நாட்டுப் புலவரென உறுதிசெய்கிறது. கடுவன் மள்ளனார் என்பதைக்

காரணப்பெயராகக் கொண்டு இப்பெயர் பெற்றுள்ளார். இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

(அகநா.70, புறநா.334)

**மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார்**

இவரின் இயற்பெயர் நாகன் தேவனார். "மதுரைத் தமிழ்க் கூத்தனாரின் புதல்வர் இவர்"[110] என்பர். இதனால் மதுரை என்னும் ஊர்ப்பெயரோடும், தந்தை பெயரோடும் இவர் பெயர் விளங்கியுள்ளது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(அகநா.64.)

**மதுரை நல்வெள்ளியார்**

இவர் மதுரையைச் சேர்ந்த பெண்பாற் புலவராவார். வெள்ளியார் என்பதனைச் "சுக்கிரனுக்குரிய பெயர் இவருக்காயிற்று போலும்"[111] என்பதால், கதிரவன், நிலா, அருந்ததி என்னும் தற்காலப் பெயர் சூட்டுதலுக்கு அடிப்படையாய் இவரது வானியல் பெயர் விளங்கியமைப் பெறப்படுகிறது. இவர் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.

(குறுந்.365, நற்.7, 47, அகநா.32)

**மதுரை படைமங்க மண்ணியார்**

இப்புலவர் மதுரையைச் சார்ந்தவர். இப்பெயர் காரணப் பெயராய் நிலைத்துள்ளது. "தன் படை முழுவதும் கெட்டவிடத்தும் தளராது நின்று போராற்றி வென்ற வீரன் ஒருவனைப் 'படைமங்க மன்னினான்' எனச் சிறப்பித்தமையால் இப்பெயர் பெற்றார் என்பர்"[112] என்கிறார் கா.கோவிந்தன். இவரது இயற்பெயர் மறைந்து பாடல்வரியால் சிறப்புப்பெயர் பெற்றுள்ளார். இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(புறநா.351)

**மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்**

இவர் மதுரையில் வாழ்ந்த பண்டைத்தமிழ்ப் புலவராவார். இயற்பெயர் இளந்தேவனாரென்றும் இவர் பண்டங்களை விற்கும் வணிகரென்பதையும் இப்பெயர் உணர்த்துகிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (அகநா.58)

**மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார்**

சேந்தனாரின் மகனான இவரது இயற்பெயர் கொற்றனார். "இவரது தந்தை இளஞ்சிறார்களுக்குக் கல்வி போதித்து வந்த காரணத்தினால் இவர் பாலாசிரியன் சேந்தன்கொற்றனார் என்று வழங்கப்பட்டார்."[113] தந்தையின் தொழிற்பெயரால் இப்புலவரின் பெயர் விளங்கியமைத் தெரிகிறது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(நற்.322)

**மதுரைப் பாலாசிரியர் நப்பாலானார்**

இவரது "இயற்பெயர் பாலனார் 'ந' சிறப்புப் பொருளைத் தருவதோர் இடைச்சொல்லாகும்"[114] என்பதிலிருந்து இவரது சிறப்புப் புலப்படுகிறது. இவரும் கல்வி கற்பிக்கும் ஆசானாக விளங்கியமைப் புலப்படுகிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(அகநா.172)

**மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார்**

"தாமன் என்பது இவரது இயற்பெயர்"[115] என்பதால் 'ந' என்னும் சிறப்பு இடைச்சொல் சேர்த்து நற்றாமனார் எனப்படுகிறார். இப்புலவர் கல்வியைப் போதிக்கும் ஆசிரியராக விளங்கியமை இவர் பெயரால் புலப்படுகிறது. ஆதலால் இப்புலமையோர் நற்செயல்கள் பல செய்திருத்தல் இவரது அடைமொழிகளால் பெறப்படுகிறது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(அகநா.92)

**மதுரைப் புல்லங் கண்ணனார்**

கண்ணனார் என்பது இவரது இயற்பெயர். இப்பெயரில் பல புலவர்கள் இருப்பதால் இவரை வேறுபடுத்திக் காட்ட தந்தையின் பெயரையும் இணைத்துள்ளமை புலப்படுகிறது. இதனை "புல்லன் என்பது இவரது தந்தையின் பெயராகும்"[116] என்ற குறிப்பு மெய்ப்பிக்கிறது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(அகநா.161)

**மதுரை மருதன் இளநாகனார்**

பின்னத்தூர் நாராயணசாமியவர்கள் இவரது பெயர். "எழுதுவோர் மிகையால் மதுரைப் பூதனிளநாகனெனவும் மருதன் இளநாகனெனவும் காணப்படும்"[117] என்கிறார். பாண்டியன் இலவந்திகை நன்மாறனைச் செவியறிவுறுத்திப் பாடி நல்வழிப்படுத்தியுள்ளார். இதனால் இருவரும் சமகாலத்தவர் என்பது புலப்படுகிறது. இப்புலவர் 38 பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.194, 216, 283, 290, 302, 326, 341, 362, 392, குறுந்.77, 160, 279, 367, அகநா.34, 59, 90, 104, 121, 131, 184, 193, 206, 220, 245, 255, 269, 283, 297, 312, 343, 358, 365, 368, 380, 387, புறநா.55, 276, 349)

**மதுரைப் பூவண்ட(ல்) நாகன் வேட்டனார்**

"பூவண்டல் ஓரூர்"[118] என்பதால் மதுரை, பூவண்டல் என்னும் இரு ஊர்ப்பெயரடையால் இவர் பெயர் நிலைத்துள்ளமை பெறப்படுகிறது. இதனால் பூவண்டல் என்பது ஓர் ஊரின் பெயர் என்றும் நாகன் வேட்டனார் இவரது இயற்பெயரென்றும் தெரிகிறது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார். (நற்.317)

**மதுரைப் பெருங்கொல்லானார்**

இப்புலவர் தொழிலால் பெயர் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. இவர் மதுரையைச் சேர்ந்த தமிழ்ப் புலவர் என்பதும், கொல்லர் மரபினர் என்பதும் தெரிகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார். (குறுந்.141)

**மதுரைப் பெருமருதனார்**

இவர் மதுரையைச் சார்ந்தவர். இயற்பெயர் பெருமருதனார் எனத் தெரிகிறது. மதுரை என்னும் ஊர்ப் பெயரடையால் இப்புலவர் பாண்டிய நாட்டினர் என்பது தெளிவாகிறது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். (நற்.241)

**மதுரைப் பெருமருதிளநாகனார்**

இப்புலவர் பெருமருதனாரின் புதல்வராவார். இவர் 'தினையை நோக்கி காலம் நீட்டித்து கதிரீன்று விளைவாயாக' என்று பாடியுள்ளார்.

இதனால் இவரது இயற்கையுடனான ஈடுபாடு புலனாகிறது. இவர் ஒரு பாடலை மட்டும் பாடியுள்ளார்.
(நற்.251)

**மதுரைப் போத்தனார்**

போதனார் என்றொரு புலவர் நற்றிணை நூற்றிபத்தாம் பாடலைப் பாடியுள்ளார். இப்புலவரிலிருந்து வேறுபடுத்திக்காட்ட, மதுரைப் போத்தனார் என்று வழங்கியிருத்தல் புலப்படுகிறது. இவரது இயற்பெயர் போத்தனார் என்பது பெறப்படுகிறது. இவர் ஒரு பாடலை மட்டும் பாடியுள்ளார்.
(அகநா.75)

**மதுரைப் பள்ளி மருதங்கிழார் மகனார் சொகுத்தனார்**

“இவர் உடன்பிறந்தார், இளம்போத்தனார், பெருங்கண்ணனாரென இருவர்”[119] என்று பின்னத்தூர் நாராயணசாமி குறித்துள்ளார். இதனால் இப்புலவர் மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனாரெனத் தெரிகிறது. இதனால் இவ்வூரில் ஒரே குடும்பத்தில் மூன்று சகோதரர்கள் புலமையுடன் திகழ்ந்தமைப் போற்றுதற்குரியதாகும். இப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.329, 352)

**மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்**

இப்புலவரின் இயற்பெயர் பெருங்கண்ணனார். மேற்கூறிய குறிப்பிலிருந்து சொகுத்தனார், இளம்போத்தனார் இருவரும் இவருடைய சகோதரர் என்பது புலனாகிறது. சங்ககாலப்புலவர் குறிப்பில் “இவர் வேளாளர். இளம்போத்தனார், சொகுத்தனார் என்பவர்களின் சகோதரர்”[120] என்று குறித்துள்ளார். கிழார் என்பதால் இவர்கள் வேளான் தொழில் செய்தமைப் பெறப்படுகிறது. இப்புலவர் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார்.
(நற்.388, அகநா 364, 247)

**மதுரை மருதங்கிழார் மகனார் இளம்போத்தனார்**

இப்புலவரின் இயற்பெயர் போத்தனார். இவர் குடும்பத்திலுள்ள புலவர் மூவருள் இவர் இளையவராதலால் இளம்போத்தனார் என்று

அழைக்கப்பட்டிருத்தல் தெரிகிறது. இதனை "இளம்போத்தன் என்பவர் மூவரில் இளையவர் போலும் என்னும் குறிப்பு உணர்த்துகிறது."[121] மூன்று புலவர்களைத் தமிழுக்களித்த தந்தையின் பெயரோடு இணைத்து இப்புலவர் பெயர் விளங்கியமைச் சிறப்பிற்குரியது. இவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(குறுந்.332)

**மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்**

"ஈழ நாட்டிலிருந்து வந்து மதுரையில் தங்கியவர் இவர். பூதன் என்பது இவருடைய தந்தையின் பெயர்"[122] என்கிறார் உ.வே.சாமிநாதையர். இப்புலவரது பெயர் தேவனார். இவர் (இலங்கை) ஈழத்திலிருந்து மதுரை வந்தமையால் இப்பெயர் பெற்றுள்ளமைப் புலப்படுகிறது. அகநானூறு 88-ஆம் பாடலில் 'ஈழத்துப் பூதன் தேவனார்' எனப் பெயரிடப்பட்டுள்ளது. இதனால் அண்டை நாட்டுப் புலமையோரும் பண்டைத் தமிழுக்குத் தொண்டு செய்தமைப்பெறப்படுகிறது. இவர் ஐந்து பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.366, குறுந்.189, 360, அகநா 88, 307)

**மதுரை வேளாசான்**

"வேள்-யாகம் செய்யுந் தொழிலின் ஆசிரியன்"[123] என்பதால் இப்பெயர் காரணப்பெயராய் விளங்குகிறது. ஆசான் என்பது ஆசிரியன் எனப் பொருள்படுவதால் இதில் வல்லவராகவும் திகழ்ந்துள்ளார் என்பது புலனாகிறது. வேந்தர்களுக்கிடையே அந்தணன் தூது செல்வதற்குரியவன் என்பதையும் இத்தூதின் பயனாகப் போர் நிறுத்தம் ஏற்பட்டதையும் இவரது பாடல் உணர்த்துகிறது. இப்புலவர் ஒரு பாடலை மட்டும் பாடியுள்ளார்.

(புறநா.305)

**மதுரை வேளாதத்தன்**

"இவருடைய இயற்பெயர் தத்தன் என்பதாகும்"[124] ஊர்ப்பெயரடையால் இவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பது பெறப்படுகிறது. இதனால் இவர் பாண்டிய நாட்டினர் என்பது தெளிவாகிறது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.

(குறுந்.315)

**மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்**

ந.சஞ்சீவி “மருங்கூர் என்பது பாண்டிய நாட்டிலுள்ள ஓர் ஊர். திருவாடானைத் தாலுகாவில் ஒன்று காணப்படுகிறது”[125] என்கிறார். இப்புலவர் பாடலில் கொடுந்தாள் முதலையும், கொம்புடைய சுறாவும் உப்பங்கழிகளில் உலவுவதைக் குறிப்பிட்டுள்ளார். கழிமுள்ளிச்செடி, அடும்புக்கொடி, புன்னையம் கானல் என நெய்தல் நிலத் தாவரங்களும் இவரது பாடலில் இடம்பெற்றுள்ளன. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(அகநா.80)

**மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார்**

“மருங்கூர்ப் பட்டினம் என்பது பாண்டி நாட்டிலுள்ள ஓர் ஊர்”[126] என்கிறார் பின்னத்தூர் நாராயணசாமி. இப்புலவரது இயற்பெயர் சேந்தன் குமரனார். ‘சேந்தங் கண்ணனார், சேந்தம் பூதனார்’ என வேறு புலவர்களும் இருப்பதால் இவர்களிலிருந்து வேறுபடுத்தி, இவருடைய ஊர்ப்பெயரோடு இணைத்து இவர் பெயர் வழங்கியிருத்தல் புலப்படுகிறது. அகப்பாடலில் ஒன்று இவர் பாடியதாகும்.

(நற்.289)

**மருங்கூர்ப் பாகை சாத்தன் பூதனார்**

சங்ககாலப் புலவர்கள் குறிப்பில் “மருங்கூர்ப் பாகை என்பது ஓரூர். இவர் இயற்பெயர் பூதனார்”[127] என்கிறார். இதனால் பூதனார் என்பது இயற்பெயர் என்றும், இப்புலவரின் தந்தை சாத்தன் எனவும் அறியப்படுகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(அகநா.327)

**மாங்குடி மருதனார்**

மதுரைக்காஞ்சிப்புலவர், மாங்குடிக்கிழார், மாங்குடி மருதனார் என்னும் பெயர்கள் இவருக்கு உரியதெனத் தெரிகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் மீது ‘மதுரைக்காஞ்சி’ பாடியதால் அதன்பின் மதுரைக்காஞ்சிப் புலவர் என்றே பெயர் பெற்றமை விளங்குகிறது. குறுந்தொகை 302-ஆம் பாடலில் இடம்பெறும் மாங்குடிக்கிழார் என்பது இவர் வேளாண் நிலக்கிழார்

என்பதை உணர்த்துகிறது. “ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் தலைவனாக”[128] என்னும் நெடுஞ்செழியனின் வஞ்சினக்கூற்று இப்புலவரின் நன்மதிப்பை உறுதிப்படுத்துகிறது. இப்புலவர் பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி மற்றும் எட்டுத் தொகையுள் 12 பாடல்களையும் பாடியுள்ளார்.
(மதுரைக்காஞ்சி, நற்.12, 123, குறுந்.89, 164, 173, 202, புறநா.24, 26, 313, 335, 372, 396.)

**மாலைமாறன்**

மாறன் என்ற பெயரால் பாண்டிய மரபினராய் அறியப்படுகிறார். இவர் பாடலில் வேல்களை வேலியாக நடும் பழக்கம் உண்டென்பதைக் காணமுடிகிறது. “வாள் போன்ற வாயையுடைய மடல்கள் செறிந்த தாழை வேல்நாட்டும் வேலியைப்போல் பயன்தரும் கடற்கரை”[129] என்பதால், தாழை மடலை வேலோடு ஒப்பிட்டு அதைக் காவல் தரும் வேலியாக்கிய இவரது புலமை இயற்கையுடன் கூடிய பாதுகாப்பைப் போற்றுகிறது.
(குறுந்.245)

**மாறோக்கத்து காமக்கணி நப்பாலந்தனார்**

“மாறோக்கம் கொற்கையைச் சூழ்ந்ததொரு நாடு”[130] எனப்படுகிறது. கொற்கை, பாண்டிய நாட்டின் துறைமுகமாதலால் இவர் பாண்டிய நாட்டினர் என்பதும் தெளிவாகிறது. இப்புலவர் எறும்பு தேடிச் சேமித்து வைத்த தானிய உணவை, மறவர் எடுத்து உண்டதனைக் குறித்துள்ளார். இதனால் ஆறலைக்கள்வர்கள் சிற்றுயிர்களின் சிதலைகளை அழித்தும் சிறுபொருள் பெற்றமைப் புலப்படுகிறது. இப்புலவர் ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார்.
(அகநா.377)

**மாறோக்கத்து நப்பசலையார்**

இவர் பெண்பாற் புலவர். பசலையார் என்பது பெயராகவும் ‘ந’ என்பது சிறப்புப் பொருள்தரும் இடைச்சொல்லாகவும் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. பசலையின் இயல்பு பற்றி ‘நீலமணியிடைப்பட்ட பொன்போல’ என்று விளக்கிக் கூறியமையால் இப்பெயர் பெற்றிருக்கலாம்

எனும் கருத்துமுண்டு. “கொற்கையைச் சூழ்ந்த மாறோக்கம் குட நாட்டையும், முள்ளி நாட்டையும் தன் எல்லையாகக் கொண்டது. இப்பகுதியில் மாறமங்கலம் என்னும் ஊர் உள்ளது”[131] என்பதால் இவ்வூர் நெய்தல் நிலத்தையொட்டிய ஊரெனத் தெரிகிறது. இப்புலவர் எட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.304, புறநா.37,39,126,174,226, 280,283)

**முடத்திருமாறன் நிலந்தரு திருவிற் பாண்டியன்**

முடத்திருமாறன் இடைச்சங்கத்தின் இறுதியில் பாண்டிய நாட்டை அரசாட்சி புரிந்தார். இவராட்சிக் காலத்தில் கபாடபுரம் கடல்கோளால் அழிந்தபோது, மதுரையையும் கடைச்சங்கத்தையும் நிறுவியவர் இவரெனத் தெரிகிறது. இதனை “முடத்திருமாறனார் இடைச்சங்கத்தினிறுதியில் பாண்டி நாட்டை அரசாட்சி புரிந்தவர். இவர் காலத்துச் சங்கமிகுந்த கபாடபுரம் கடல் கொள்ளப்பட்டு சங்கமழிந்துபோதலும், உடனே இப்பொழுதுள்ள மதுரையிற் கடைச்சங்கத்தை நிலைநிறுத்தினவராவார்.”[132] இக்கடல் கோளினால் எண்ணிறந்த தமிழ் நூல்கள் இறந்தன. இச்செய்தியை,

**“ஏரணம் உருவம் யோகம் இசைகனக் கிரதஞ் சாலந்**
**........................................................**
**வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயருமான”**[133]

என்னும் பழம் பாடலால் அறியமுடிகின்றது. இவர் குட்டுவன் சேரனது குடமலைச் சுனையைப் புகழ்ந்துள்ளார். இது பகைமை மறந்து இயற்கையைச் சிறப்பித்த இவர் மனத்திறத்தை வெளிப்படுத்துகிறது. இவ்வரசப்புலவர் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.105, 228)

**மோசி கண்ணத்தனார்**

“இவ்வூர் மோசி கீரனார், மோசி சாத்தனார், முடமோசியார், மோசி கொற்றனார் முதலிய பல புலவர்களைத் தோற்றுவித்த புகழுடையது. மோசி என்பது பாண்டிய நாட்டில் பரமகுடி வட்டத்தில் உள்ளதோர் ஊர்”[134] என்பதால் இவர்கள் ஐவரும் ஒரூரைச் சேர்ந்தவர் என்பது ஐயமின்றித் தெளிவாகிறது. கண்ணத்தனார் என்னும்

இயற்பெயருடைய இவர் மோசி என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்பது புலப்படுகிறது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(நற்.124)

**மோசி கரையனார்**

அ.மாணிக்கம் “மோசிக்கரை என்பதும் ஓர் ஊர்”[135] என்கிறார். இதனால் இவரின் ஊராகிய மோசிக்கரையைக் கொண்டே இவர் பெயர் பெற்றிருத்தல் புலப்படும். இவர் மோசி என்னும் ஊரினராதலால் இவர் பாண்டிய நாட்டினர் என்பது தெரிகிறது. இவரது பாடலில் அந்திமாலைக் கடற்கரைக்காட்சி இயற்கை அழகோடு புனையப்பட்டுள்ளது. இவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(அகநா.260)

**மோசி கீரனார்**

இப்புலவர் மோசி என்னும் ஊரினர். கீரனார் எனப் புலவர் பலரிருப்பதால் ஊர்ப்பெயரை இணைத்து மோசி கீரனார் என வழங்கியிருத்தல் வேண்டும். இப்புலவர் ஒன்பது பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.342, குறுந் 59,84, அகநா 392, புறநா 50, 154, 155, 156, 186)

**மோசி கொற்றனார்**

மோசி என்ற ஊரைச் சார்ந்த இவர் கொற்றனார் என்னும் இயற்பெயருடையவர். இவ்வூரில் பல புலவர்கள் வாழ்ந்தமை அறியப்படுகிறது. எனினும், இவர்களுக்கிடையேயான உறவுகள் புலப்படவில்லை. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

(குறுந்.377)

**மோசி சாத்தனார்**

இப்புலவரின் இயற்பெயர் சாத்தனாரெனவும் இவர் மோசி என்னும் ஊரைச் சார்ந்தவர் எனவும் அறியப்படுகிறது. ஒரு புறப்பாடல் மட்டும் இவர் பாடியதாகும்.

(புறநா.272)

**விரியூர் நக்கனார்**

இப்புலவர் நக்கனார் என்னும் இயற்பெயருடையவர். "விரியூர் என்பது சேரநாட்டு வள்ளுவ நாட்டிலுள்ளதோர் ஊர்"[136] என்கிறார் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை. ந.சஞ்சீவி "இப்புலவரைப் பாண்டிய நாட்டுப் புலவருள் 87-ஆவது இடத்தில் குறித்துள்ளார்." விரியூரிலிருந்து மதுரை வந்து வாழ்ந்திருத்தல் பெறப்படுகிறது. இவர் ஒரு புறப்பாடலைப் பாடியுள்ளார்.

(புறநா.332)

**வெள்ளி வீதியார்**

இவர் பெண்பாற்புலவர். பின்னத்தூர் நாராயணசாமி அவர்கள், "மதுரை வெள்ளியம்பலத் தெருவில் இருந்ததனால் இப்பெயர் பெற்றார் போலும் என்கிறார்."[137] ஆதலால் இயற்பெயர் மறைந்து வாழிடத்தின் பெயரே நிலைத்துவிட்டது தெரிகிறது. இவரது பாடல்கள் பெண்மையைப் போற்றும் பாடல்களாகும். "இவர் ஔவையாருக்குக் காலத்தால் முந்தியவர் தம் சொந்த வாழ்க்கையில் தோய்ந்து அனுபவித்தவற்றை அகப்பாக்களாக வடித்துள்ளாரோ என்று கருதத்தோன்றுகிறது"[138] என்கிறார் தாயம்மாள் அறவாணன்.

> **"ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்**
> **கையி லூமன் கண்ணிற் காக்கும்**
> **வெண்ணெ யுணங்கல் போல"** **(குறுந்.58:3-5)**

என்று வீணாகும் இளைமைக் குறித்துப் பதிவுசெய்துள்ளார்.

ச.அகத்தியலிங்கம் "வெள்ளிவீதியாரின் கவிதைகள் பெண்மை உணர்விலே பிறந்து, பெண்மை உணர்விலே வளர்ந்து பேருணர்விலே சங்கமமாகி நிற்பவை என்று கூறுவது உணரத்தக்கது"[139] இப்புலவர் பதின்மூன்று அகப்பாடல்களைப் பாடியுள்ளார்.

(நற்.70, 335, 348, குறுந்.27, 44, 58, 130, 146, 149, 169, 386, அகநா.45, 362)

**வேம்பத்தூர்க் கண்ணன் கூத்தனார்**

இவ்வூருக்கு "குலசேகரச்சதுர்வேதி மங்கலமென்றும் இதனுக்கு ஒரு பெயருண்டென்று சிலாசனத்தால் தெரிகிறது."[140] உ.வே.சாமிநாதையர்,

“வேம்பற்றூர் என்பது மதுரைக்கு வடகிழக்கில் இரண்டு காதத்தில் வையை நதிக்கு வடக்கே உள்ளது. பண்டைக் காலந்தொட்டு தமிழ் அறிஞர் வாழும் இடம் இது. இப்போது வேம்பத்தூர் என வழங்கப்படுகிறது.”[141] இதனால் இவர் பாண்டிய நாட்டுப் புலவர் என்பது தெரிகிறது. இப்புலவர் ஒரு பாடலைப் பாடியுள்ளார்.
(குறுந்.362)

**வேம்பற்றூர் குமரனார்**

ஔவை சு.துரைசாமிப்பிள்ளையவர்கள், “வேம்பற்றூர் என்ற பெயருடைய ஊர்கள் சோழநாட்டிலுமுள்ளன. பாண்டியநாட்டு வேம்பற்றூர் இன்றுவரையும் நல்ல புலவர்கள் பிறந்து சிறக்கும் ஊராக இருந்து வருகிறது. சான்றோராகிய குமரனார் பாண்டிநாட்டு வேம்பற்றூரினர் எனத் துணிந்துரைப்போருமுளர். வேம்பற்றூரிற் பிறந்தது பற்றி இவர் வேம்பற்றூர்க் குமரனார் எனச் சான்றோரால் வழங்கப்படுவாராயினர்”[142] என்கிறார். இக்கருத்துகளால் இப்புலவர் பாண்டியநாட்டினர் என்பது பெறப்படுகிறது. இவர் அகப்பாடல் ஒன்றும், புறப்பாடல் ஒன்றுமாய் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.
(அகநா.157, புறநா.317)

**தொகுப்புரை**

- பாண்டிய நாட்டுப் புலவர்களைப் பாண்டியன், மாறன், வழுதி, செழியன் என்னும் குடிப்பெயர்களும், புலவர்களின் பெயரடைகளுள் இடம்பெறும் மதுரையும், பாண்டி மண்டலத்து ஊர்ப்பெயரடைகள் முதலியனவும் அடையாளப்படுத்துகின்றன.
- புலவரின் பெயரடைகளில் ஊர்ப்பெயர், குடிப்பெயர், தந்தைபெயர், தொழிற்பெயர், சிறப்புப்பெயர் இவைகளின்றி இறப்பின் நிகழ்விடக் குறிப்புகளும் பெயரடையாக விளங்கியமை அறியப்படுகிறது.
- சங்கப்பாக்களைப் பாடியவர்களில் பண்டைக்காலப் புலவர்களுள் சேர, சோழ நாட்டுப் புலவர்களைவிட பாண்டிய நாட்டுப் புலவர்களின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளன.

- தமிழின் முதல் இலக்கண நூலான தொல்காப்பியமும் உலகப் பொதுமறையாம் திருக்குறளும் பாண்டியர் அவையில் அரங்கேறியமைக் கருத்திற்கொள்ளத்தக்கது. இவ்வாறு பாண்டிய வேந்தர்களால் பழந்தமிழ் வளர்ந்ததையும்; பழந்தமிழ் வளர்ச்சியால் பாண்டிநாடு சிறப்புற்றதையும் அறியமுடிகின்றது.

- பாண்டிய நாட்டுப் புலவருள் அரசப்புலவர், அரசமகளிர், பெண்பாற் புலவர்கள், ஆண்பாற்புலவர்கள் என நூற்றிஐந்து புலவர்கள் இடம்பெறுகின்றனர்.

- பாண்டிய நாட்டுப் புலவர் பாடியனவாய்ப் பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் ஏழு பாடல்களும், தொகை நூல்களுள் அறுநூற்றி இரண்டு பாடல்களும் அறியப்பட்டுள்ளன. இவை சங்கப் பாக்களுள் பாண்டிய நாட்டுப் புலவர்களின் பெரும்பங்களிப்பை உணர்த்துகின்றன.

- சங்கப்பாக்களுள் அகப்பாக்கள் மிகுந்திருப்பதைப் போன்றே பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள்ளும் அகப்பாக்கள் மிகுந்துள்ளன. இவை உலக மக்களின் புறவாழ்வைவிட அகவாழ்வின் சிறப்பிற்கு நல்வழி காட்டுவனவாகும்.

- சங்கப் புலவர்களுள் 234 பாடல்களைப் பாடிய கபிலர் பாண்டிய நாட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது. தாம் பாடிய ஒற்றைப் பாக்களுள்ளும் நற்கருத்துக்களைத் தந்தவர்களாய் 55 புலவர்கள் அறியப்பட்டுள்ளனர்.

- முடத்திருமாறன் இடைச்சங்கத்து இறுதியில் பாண்டிய நாட்டரசனும், கடைச்சங்கத்தை நிறுவியவனும் ஆவான். இவனது காலத்தில் ஏற்பட்ட கடல்கோளில் பல அரிய தமிழ் நூல்கள் அழிந்துபட்டதும்; அதன்பின்னர் தமிழ் வளரும் அவைக்களங்கள் ஆக்கப்பட்டதும்; உலகின் முதல் மொழியாம் தமிழ்மொழிக்குப் பாண்டியர் ஆற்றிய பெரும்பங்களிப்பையும், மொழிப்பற்றையும் ஒருங்கே உணர்த்துகின்றன.

- பண்டைக் காலத்தில் ஈழமும், தமிழகமும் சிறந்த உறவு நாடுகளாக இருந்துள்ளன. நிலப்பரப்பால் அருகிலிருந்ததால் ஈழத்துப் புலவரும் பண்டைத் தமிழுக்குத் தொண்டு செய்யும் சங்கப் புலவராய் இருந்துள்ளனர்.
- சோ என்னும் அடைமொழிக்கு அரண், நகர், மதில் என்னும் பொருள் உள்ளமையால், சோகோவனார் என்னும் புலவர் பெயர் கொண்டு, நாட்டின் பாதுகாப்போடு தொடர்புடையவர் என்பது பெறப்படும்.
- பெண்ணின் அழகும் காலமும் வீணாவதை உணர்த்தி காதல் உள்ளத்தின் வேட்கையைப் பாடிய மதுரை நல்வெள்ளியார், வெள்ளிவீதியார் போன்ற பெண்பாற்புலவர்கள் பண்டைக் காலத்தில் போற்றப்பட்டுள்ளனர்.
- நூற்றிஐந்து பாண்டிய நாட்டுப் புலவர்களின் பெயர்களும், அவர்கள் பாடிய அகப்பாக்கள், புறப்பாக்கள், அகப்புறப்பாக்கள் குறித்த எண்ணிக்கையும் அட்டவணையில் இடம்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கா.கோவிந்தன், தமிழர் பண்பாடு, ப.111.
2. இரா.கிருஷ்ணமூர்த்தி, பாண்டியர் பெருவழுதி நாணயங்கள், ப.1.
3. மேலது, (முகவுரை), ப.III.
4. ஆசிரியர் குழு, தமிழக வரலாறும் பண்பாடும், ப.41.
5. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.145.
6. உ.வே.சாமிநாதையர், சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப.14.
7. மயிலை சீனி வேங்கடசாமி, தமிழர் வளர்த்த அழகுக்கலை, ப.19.
8. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.146.
9. சு.இரத்தினசாமி, சங்ககால அரசர்கள், ப.33,39.
10. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), சிறுபாண், ப.66-67.
11. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்:9, ப.10.
12. மு.ஆரோக்கியசாமி, நாமிருக்கும் நாடு, ப.53.
13. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப.38.
14. மேலது, ப.33.
15. அட்டவணை - 1, ப.1.
16. அட்டவணை - 1, ப.1-6.
17. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.6.
18. அட்டவணை - 2.
19. அட்டவணை - 1, ப.6.
20. அட்டவணை - 1, ப.1-6.
21. மேலது., ப.1-6.
22. மேலது., ப.1-6.
23. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழ்ப் புலவர் அகராதி, ப.4.
24. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.8.
25. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், (தொகுதி.1), ப.22.
26. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.54-55.
27. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், ப.22, ந.சஞ்சீவி சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை பக்.130-131.

28. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு-2, ப.280.
29. முனைவர் க.அமுதா, சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக்கொடையும், ஆய்வேடு, ப.59.
30. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.5.
31. ம.பரமகுரு, பறம்புமலை திருக்கொடுங்குன்றம், ப.33.
32. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை பாடினோர் வரலாறு, ப.38.
33. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், ப.286.
34. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.102.
35. இரா.கிருஷ்ணமூர்த்தி, பாண்டிய பெருவழுதி நாணயங்கள், ப.10.
36. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை பாடினோர் வரலாறு, ப.39.
37. மேலது, ப.8.
38. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.64.
39. ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2), ப.134.
40. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப.44.
41. ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2), ப.134.
42. நைசி.கரிகாலன், புறநானூற்று ஆய்வுகள், ப.221.
43. ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை, புறநானூறு (தொகுதி-2), ப.134.
44. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர், ப.88.
45. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை (பகுதி-4), ப.6.
46. ந.சஞ்சீவி சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப.44.
47. உ.வே.சா. குறுந்தொகை பாடினோர் வரலாறு, cxxv.
48. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.113.
49. சா.வே.சுப்பிரமணியன், தமிழ்ச் செவ்வியல் நூல்கள், நாலடியார், 128, 212.
50. சு.பாலசாரநாதன், சங்க காலப்புலவர்கள், ப.113.
51. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.36.
52. ச.மெய்யப்பன், கபிலர், ப.8.

53. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.163.
54. மேலது, பக்.163-164.
55. இரா.தெய்வம், ஓரெழுத்து ஒரு மொழி, ப.73.
56. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப.44.
57. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை பாடினோர் வரலாறு, ப.23.
58. மேலது, ப.23.
59. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.197.
60. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு-2, பக்.585-586.
61. வெ.பழநியப்பன், உ.பழநி, தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம், ப.259.
62. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் (தொகுதி.3) ப.131.
63. மேலது, ப.176.
64. மேலது, ப.177.
65. மேலது, ப.177.
66. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.217.
67. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை பாடினோர் வரலாறு, ப.26.
68. உ.வே.சா. குறுந்தொகை, பாடினோர் வரலாறு, ப.cxl.
69. அ.மாணிக்கம், அகநானூறு, வர்த்தமான் பதிப்பு தொகுதி-1, ப.28.
70. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.29.
71. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை (பகுதி-4), ப.27.
72. சு.பாலசாரநாதன், சங்க காலப்புலவர்கள், ப.164.
73. புறநா.188, நற்.15.
74. இரத்தினசாமி, சங்ககால அரசர்கள், ப.95.
75. மேலது,ப.95.
76. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.274.
77. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), அகநானூறு, 373:2-19.

78. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.273.
79. மேலது, ப.273.
80. பாக்யமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.52.
81. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.277.
82. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.3.
83. பரிமேலழகர் உரை, குறள் 785, (நட்பு அதிகாரம்) ப.243.
84. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.37.
85. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை, பகுதி5, ப.18.
86. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.40.
87. உ.வே.சா. குறுந்தொகை, பாடினோர் வரலாறு, ப.clviii.
88. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை பகுதி-5, ப.22.
89. மேலது, பகுதி-3, ப.24.
90. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு, பகுதி-2, ப.287.
91. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை தொகுதி 5, ப.71.
92. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு, பகுதி-2, ப.400.
93. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.41.
94. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை, ப.145.
95. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை பாடினோர் வரலாறு, பக்.12-13.
96. மேலது, ப.42.
97. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.321.
98. கா.கோவிந்தன், சங்கத் தமிழுப்புலவர் வரிசை, பகுதி-5, ப.164.
99. மேலது, ப.168.
100. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.18.
101. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், பக்.244-245.
102. மேலது, ப.324.

103. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.324.
104. மேலது, ப.337.
105. உ.வே.சா., குறுந்தொகை, பாடினோர் வரலாறு, ப.155.
106. மேலது, ப.155.
107. இரா.செயபால், (உ.ஆ.), அகநானூறு, 363:8.
108. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.42.
109. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.335.
110. மேலது, ப.336.
111. மேலது, ப.340.
112. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை (பகுதி-4), ப.120.
113. சு.பாலசாரநாதன், சங்க காலப்புலவர்கள், ப.342.
114. மேலது, ப.342.
115. மேலது, ப.342.
116. மேலது, ப.344.
117. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.43.
118. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.345.
119. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.42.
120. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.348.
121. மேலது, ப.347.
122. உ.வே.சா. குறுந்தொகை பாடினோர் வரலாறு, ப.clix.
123. மேலது, ப.355.
124. மேலது, ப.356.
125. ந.சஞ்சீவி, ஆராய்ச்சி அட்டவணை, ப.44.
126. பின்னத்தூர் நாராயணசாமி, நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.44.
127. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.358.
128. உரையாசியர்கள் குழு, (NCBH) புறநானூறு-1, புறநா.72:13-14.
129. உ.வே.சாமிநாதன், குறுந்தொகை பாடினோர் வரலாறு, ப.161.
130. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.317.

131. தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை, ப.20.

132. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.46.

133. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.16.

134. கா.கோவிந்தன், சங்சத்தமிழ்ப் புலவர் வரிசை பகுதி-4, ப.71.

135. அ.மாணிக்கம், அகநானூறு, தொகுதி-1, ப.47.

136. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, புறநா. (தொகுதி-2), ப.26.

137. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை, பாடினோர் வரலாறு, ப.49.

138. தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை, ப.246.

139. ச.அகத்தியலிங்கம், சாகாவரம் பெற்ற சங்கப் பாடல்கள், ப.161.

140. சு.பாலசாரநாதன், சங்ககாலப் புலவர்கள், ப.407.

141. உ.வே.சா., குறுந்தொகை பாடினோர் வரலாறு, ப.clxvii.

142. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு, (தொகுதி-2), ப.305.

## இயல் இரண்டு

## பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கைப் புனைவுகள்

### முன்னுரை

இவ்வுலகம் இயற்கையை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது. **'இயற்கை என்பது இல்லாமல் போனால்; இவ்வுலக இயக்கம் என்பது நில்லாமல் போகும்'** என்பதை பண்டைத் தமிழ்ப் புலவர் நன்கு உணர்ந்துள்ளனர். இதனை எக்காலத்திலும் வாழும் தமிழுலக மக்களின் மனதில் நிறுத்த பலவாறு முயன்றுள்ளனர். இவ்வுலகின் வாழ்வாதாரமான இயற்கை, பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள் பெரும்பங்களிப்பைப் பெற்றுப் பன்முக அறிவு பெறும் நூலகமாகத் திகழ்கிறது. மக்களை நன்னெறிப்படுத்தும் உளவியல் ஆசானாகவும் புலப்படுகிறது.

இயற்கை, புனைவு குறித்த விளக்கமும்; இயற்கைப் பாடுபொருளுக்கான இலக்கண வரைமுறைகள் குறித்த விளக்கமும்; உள்ளுறையுவமை, இறைச்சி போன்ற புலப்பாட்டு உத்திகளுள் இடம்பெறும் இயற்கையின் இன்றியமையாமையும்; மனிதனின் வாழ்வியல் தேவைக்கான காட்சிப்புலப்பாடுகளையும் இவ்வியல் ஆராய்கின்றது.

### சங்க இலக்கியத்தில் இயற்கை

"இயற்கை அரங்கு, மனித அரங்கு ஆகிய இரண்டு களங்களே கவிஞனின் தொழிற்சாலைகள் என்று ஜே.சி.ஷார்ப் என்ற அறிஞர் கூறினார். சங்ககாலப் புலவர்கள் இங்கு குறிப்பிடும் இரண்டு அரங்கங்களிலும் ஊடாடிவந்து சொல்லோவியங்களைத் தீட்டினர்"[1] என்று மு.வரதராசன் குறித்துள்ளார். இக்கூற்றிற்கு ஏற்ப சங்கப்பாக்கள் இயற்கையோடும், மனிதவாழ்வோடும் இணைந்துள்ளன. இவற்றுள் பெரும்பான்மை இவ்விரண்டும் சேர்ந்தே காணப்படுகின்றன.

'இயற்கை' என்பது இயல்பு என்னும் பொருளில் பண்டைப்பாக்களில் பல இடங்களில் சுட்டப்பட்டுள்ளது. போரில் இரண்டு வீரர்களும் வெற்றிபெறுதல் இயல்பில்லை. காற்று வானில் விரைந்து இயங்கும் இயல்பினையுடையது. கப்பலையும் அசைத்திடும் ஆற்றலுடையது. இவ்விடங்களில் இயற்கை என்பது இயல்பு என்னும்

பொருளில் காற்றின் வேகத்தையும், ஆற்றலையும் புலப்படுத்துவதாய் இடம்பெற்றுள்ளது. இதனை,

**"இருவீர் வேறல் இயற்கையும் அன்றே"[2]**
**"வான் வழங்கு இயற்கை வளிபூட்டி னையோ" (அகநா.384:10)**
**"உலகு கிளர்ந்தன்ன உருகெழு வங்கம்**
**..........................................**
**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட" (அகநா.255:4-6)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். பழந்தமிழ்ப்பாக்களில் இயற்கை, பெரும்பங்களிப்பைப் பெற்றுள்ளது. இத்தகைய நிலையிலும் இயற்கை என்பது 'தோன்றல்களாகிய பொருட்கள்' என்று பொருளுணர்த்தப்படாமல் பெரும்பாண்மையாக 'இயல்பு' எனப் பொருள் கொண்டமைக் கருத்திற் கொள்ளத்தக்கது.

மழை பொய்த்து வளமை குன்றினாலும், இயல்பல்லாதன செயற்கையாய்த் தோன்றினாலும், இவ்வியல்பு மாற்றத்திற்குக் காரணமாய் அந்நிலத்தை ஆளும் மன்னனை உலகு பழிக்கும் என்பதை,

**"மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,**
**இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்**
**காவலர் பழிக்கும் இக்கண் அகல் ஞாலம்"[3]**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பதிவுகளில் மழைக்காலமும், நிலவளமையும் இயல்பானது. இதன் பயனால் உழவையும், உழவரையும் போற்றிக்காக்கும் நீதியுடைய மன்னனால் அந்நாடு வளம்பெறும் என்பது உணர்த்தப்படுகிறது.

இவ்வாறான இயல்பு மாற்றத்திற்கு அந்நிலத்தில் வாழும் மக்கள் தான் காரணமென்பது புலப்படுகிறது. இதனால் இயல்பாய்த் தோன்றும் மழை, அதனால் வளம்பெறும் நிலவளம் முதலான நிகழ்வுகளெல்லாம் இயற்கை. மக்களால் இவ்வியல்புத் தன்மை மாற்றம் பெறுவதே செயற்கை எனப் பொருளுணரப்படுகிறது.

**தொல்காப்பியத்தில் இயற்கை**

'இயற்கை என்பது இயற்கையும், இயற்கைத்து, இயற்கையின் என்பனவாய்த் தொல்காப்பியத்தில் பல்வேறு இடங்களில் இடம்பெற்றுள்ளது. இச்சொல்லாட்சிகளும் இயல்பு என்னும் பொருளைச் சுட்டுகின்றன. இதனை,

**"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்"[4]**

என்னும் நூற்பாவிற்கு உரை எழுதிய சேனாவரையர் "தன்னியல்பு திரியாது நின்ற பொருளை அதன் இயல்பு கூறுங்கால் ஆக்கமும் காரணமும் கொடாது இற்றெனச் சொல்லுக என்று விளக்கி, நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்து, வளி உளரும், உயிர் உணரும் என எடுத்துக் காட்டியுள்ளார்."[5] இப்பதிவில் நிலம், நீர், நெருப்பு, காற்று, உயிர் என்பவை இயற்கைப் பொருள்களாகப் பெறப்படுகின்றன.

**அகராதிகளில் இயற்கைப் பொருளாழம்**

இயற்கை என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி "இலக்கணம், பான்மை, சுவாவம், வழக்கம், நிலைமை, கொள்கை, இயல்பு, ஏது, குணம், தகுதி, திராணி, முறைமை"[6] என இயற்கை என்பதைப் பலதரப்பட்ட நற்கூறுகளின் இயல்பெனச் சுட்டுகிறது. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் "இயல்பு நிலன், விசும்பு, வளி, தீ, நீர் என்னும் ஐம்பெரும்பூதத்து இயற்கை"[7] எனக் குறித்துள்ளது.

"(மனிதனால் உண்டாக்கப்படாமல்) தானாகவே காணப்படும் மலை, நீர் போன்றவற்றை அல்லது தானாகவே உண்டாகும் மழை, காற்று, இடி போன்றவற்றைப் பொதுவாகக் குறிக்கும் சொல்"[8] Nature என்று க்ரியாவின் தற்காலத் தமிழகராதி கூறுகிறது.

அடோன் அகராதி "இயல்பு, சுபாவம், (nature, natural disposition), நிலைமை (state circumstances), வழக்கம் (custom fractice), இலக்கணம் (characteristic), காடு, மலை, கடல், ஆறு முதலிய சுற்றுப்புறத் தோற்றங்கள் (environmental features like forest, mountain, sea river etc)"[9] என்பனவாய் நற்கூறுகளின் இயல்போடு சூழலியலைத் தெளிவுபடுத்தியுள்ளது.

"மனிதன் உருவாக்காத, உருவாக்க இயலாத அனைத்தும் இயற்கை"[10] என்று அன்னி மிருதலகுமாரி கூறுகிறார். மேற்கூறிய கருத்துக்களால் மனிதனின் கலைப்படைப்புகளிலிருந்து மாறுபட்டுத் தானே தோன்றும் பேராற்றலாய் இயற்கைப் புலப்படுகிறது.

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் எனும் இவற்றுள் ஏதேனுமொரு இடத்தில், காலத்தின் உதவியோடு தானே தோன்றுவது; உலக உயிர்களின் வாழ்விற்கும் வளமைக்கும் அடித்தளமாய் அமைவதுமான யாவும் இயற்கை. இவை தாவரங்கள், விலங்குகள், பறவைகள், பிற உயிர்களாகவும்; கட்புலனாகாத உயிர், வெம்மை, இசை முதலான ஆற்றல்களாகவும் அறியப்படுகின்றன.

இயல்பாய்த் தோன்றுவது இயற்கை; இயன்றதை உருவாக்குவது செயற்கை. மனிதனின் செயற்கரிய செயல்களுக்கும் மூலப்பொருளாய் இருந்து, அறிவியல் ஆக்க சக்திகளுக்கும் இயற்கை அடித்தளமாய்த் திகழ்கிறது. இது இயற்கையின்றி இவ்வுலகில் எந்நிகழ்வும் இல்லை என்பதை அறிவுறுத்துகிறது.

**சங்க இலக்கியத்தில் புனைவு**

சங்கப் பாக்களுள் 'புனைவு' என்னும் சொல்லிற்குப் 'புனைந்து' என்னும் பதம் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை இயற்கையான அழகு, வண்ணம் பூசுதல், வரைதல், புகழ்தல், உருவாக்குதல் என்னும் பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளன. இதனை,

> **"கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பு"** (முருகு.17)
> **"கடிநகர் புனைந்து..."** (அகநா.136:6)
> **"செம்பு இயற்றன்ன செஞ்சுவர் புனைந்து"** (மதுரைக்.485)
> **"இரும்பு புனைந்து இயற்றாப் பெரும் பெயர்த் தோட்டி"**
> (புறநா.150:25)
> **"நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து"** (நற்.325:3)

என்பன போன்ற சங்க இலக்கியப் பதிவுகள் உறுதிப்படுத்துகின்றன. இவ்வாறு **புனைந்து என்பது அழகு, வளமை முதலியவற்றோடு இணைத்துக் கலைநுட்பத்தோடு உருவாக்குதல் எனப் பொருள் தருகிறது.**

**தொல்காப்பியத்தில் 'புனைந்து' என்னும் சொல்**

பொருளதிகாரச் செய்யுளியலில் புனைந்து எனும் சொல் இடம் பெற்றுள்ளது. செய்யுளுக்குரிய சொல்லினால் சீரைப் புனைந்து தொடுப்பது அழகெனப்படும் என்பதை,

> **"செய்யுள் மொழியால் சீர்புனைந் தியாப்பின்**
> **அவ்வகை தானே அழகெனப் படுமே"[11]**

என்னும் நூற்பா உணர்த்துகின்றது. செய்யுளின் அழகு, அதற்குரிய மொழியினைக் கொண்டு அமையப்பெறும் சீரின் உருவாக்கத்தில் உள்ளதென்பதைப் புலப்படுத்துகிறது. இவ்வாறு சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் புனைந்து என்பதற்கு உருவாக்குதல் அல்லது படைத்தல் என்னும் பொருள் கொண்டுள்ளமைத் தெளிவாகிறது.

**அகராதிகளில் புனைவு**

புனைவு என்ற சொல்லிற்குக் கழகத் தமிழகராதி "அலங்காரம், செய்கை, அழகு, செழிப்பு, கட்டுகை, இணைப்பு, கற்பனை"[12] என்று பொருளுரைக்கிறது.

க்ரியாவின் தற்காலத் தமிழகராதி "புனைவு, புனைய, புனைந்து என்பனவற்றிற்கு (கதை, கவிதை முதலியவை) இயற்றுதல் (புதிதாக) உருவாக்குதல் (compose or write poetry etc. create) என்றுரைத்து, 'அவர் கவி புனைவதில் வல்லவர்', 'மட்பாண்டம் புனைவோர் சங்கம்'"[13] என்றும் எடுத்துக் காட்டியுள்ளது.

சதுரகராதி, "அணிதல், அலங்கரித்தல், சித்திரம் எழுதுதல், கற்பித்தல், செய்தல்"[14] என்பனவாய்ப் புனைதலுக்குப் பொருளுரைக்கிறது.

இக்கருத்துக்கள் 'கண்ணுக்கும், கருத்துக்கும் புலனாகும் கலைப்படைப்பைப் புனைவு என்றுரைத்தல் தெளிவாகிறது. எல்லா வகையாலும் புனைவு என்பதற்கு **'மனித மனதைக் கவரும் கலையாக்கம்'** எனப் பொருள் கொள்ளுதல் பொருத்தமாகிறது.

**இயற்கைப் பங்களிப்பு**

இயற்கையைப் பாடாத கவிஞர்கள் இல்லையென்பது உலகவழக்கெனில்; இயற்கை இடம்பெறாத பாடல்களில்லை என்பது சங்கத் தமிழ் இலக்கிய வழக்காகும். பெரும்பான்மையான சங்கப்பாக்களுள் இயற்கைப் பேரிடம்பெறுகிறது. பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் இயல்பு மாறாத இயற்கைப் புனைவுகள் பல பாடல்களில் அமைந்துள்ளன. சில பாடல்களுள் கற்பனை வளத்தோடும் இயற்கைப் பதிவுகள் காணப்படுகின்றன. அவை அனைவரும் காணும் நிகழ்வுகளிலிருந்து, காணாத நிகழ்வைப் புலப்படுத்தும் உவமைகளாக

அமைந்துள்ளன. இவ்வாறு "பரந்து விரிந்துள்ள இயற்கை ஒருசில பாக்களுள் அருகியும் காணப்படுதலுண்டு."[15] எனினும் அவ்வியற்கை அப்பாடலின் சிறப்புப் பொருளாக அமைகிறது.

**பிறையும் மதியும்**

கவிதைக்குரிய பாடுபொருட்களுள் இயற்கைக்குப் பெரும்பங்குண்டு. அதில் நிலவிற்குத் தனிச்சிறப்பு உண்டு. பிறை, முழுமதி போன்றவை கவிதையை மெருகேற்றுவனவாகும். நிலவின் இவ்விரு நிலைகளும் குறிஞ்சிக் கருப்பொருட்களோடு இடம்பெற்றிருப்பதை,

> **"ஐதேய்ந் தன்று பிறையு மன்று**
> **மைதீர்ந் தன்று மதியு மன்று**
> **வேயமன் றன்று மலையு மன்று**
> **பூவமன் றன்று சுனையு மன்று**
> **மெல்ல இயலும் மயிலு மன்று**
> **சொல்லத் தளரும் கிளியுமன்று" (குறி.கலி.55:9-14)**

என்னும் கபிலரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவை பெண்மையின் நலத்திற்கு உவமையாகின்றன. பிறை நுதல், மதி முகம், மலைத்தோள், சுனைக்கண், மயில் சாயல், கிளி மொழி என்னும் இயற்கைப் பாடுபொருட்ளாக எடுத்தாளப்பட்டுள்ளன. இப்பாடல் பண்டைப்பாக்களுள் இடம்பெற்றுள்ள இயற்கையின் பெரும்பங்களிப்பிற்குச் சான்றாகிறது.

**இன்னுயிர்**

இப்பாடலில் இன்னுயிர் என்னும் இயற்கை பாடுபொருள் இடம்பெற்றுள்ளது. ஊடல் தீர்க்க விளையும் தோழியிடம்; அன்புள்ளோரிடம் ஊடலும், அதன் பயனான கூடலும் சாத்தியமானது. அன்பில்லாத் தலைவனிடம் புலவியின்பமும் கிடைத்தற்கு அரியனவாகும். இந்நிலையில் என் இன்னுயிர் வருந்தி அழிவதாயினும் அவரை நான் முற்றிலுமாக ஒதுக்கிடவில்லை. மாறாகப் பிரிதற்கு அரிய தொடர்புடைய அன்னையாகவும், சில தவறாத கடமைகளைச் செய்ய வேண்டியதால் தந்தையாகவும் ஏற்றுக்கொள்கிறேன் எனத் தலைவி கூறுகிறாள். இதனை,

> **"நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்**
> **இன்னுயிர் கழியினு முரைய லவர்நமக்**
> **கன்னையுமத்தனு மல்லரோ தோழி**
> **புலவிய∴. தெவனோ வன்பிலங் கடையே" (குறுந்.93:1-4)**

என்னும் அள்ளூர் நன்முல்லையாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவை **காதலின்பத்தினும் மேலோங்கி நிற்கும் பெண்மையின் கடமையை உணர்த்துவதுடன் உருக்குலையாத குடும்ப அமைப்புமுறையை உறுதிப்படுத்துகிறது.** இவ்வாறு கட்புலனாகாத 'இன்னுயிரின்' புனைவு இப்பாடலில் இயற்கையின் இன்றியமையாப் பாடுபொருளாய்த் திகழ்கிறது.

**பண்டைக்கால இயற்கை வளம்**

சங்கப் பாக்களுள் ஒக்கூர் மாசாத்தியார் இயற்கை வளங்களோடு, இயற்கை வளங்களையே ஒப்பிட்டுள்ளார். இவ்வுவமைப் பொருட்கள் நிகழ்விடச் சூழலுக்கு உகந்த, ஒப்புமையாக அமைந்துள்ளதை,

> **"தளிர்இயல் கிள்ளை இனிதினின் எடுத்த**
> **வளராப் பிள்ளைத் தூவி அன்ன,**
> **உளர்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவில்**
> **பறைக்கண் அன்ன நிறைச்சுனை தோறும்**
> **துளிபடு மொக்குள் துள்ளுவன சால,**
> **தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய**
> **வளிசினை உதிர்த்தலின், வெறிகொள்பு தாஅய்**
> **சிரற்சிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த**
> **வண்டுஉண் நறுவீ துமித்த நேமி**
> **தண்நில மருங்கில் போழ்ந்த வழியுள்,**
> **நிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுக**
> **முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே"** **(அகநா.324:3-15)**

என்ற பாடலடிகளுள் அறியலாம். இவற்றுள் முல்லை நிலமும், மாலைப்பொழுதும் இயற்கை வளங்களோடு காணக்கிடைக்கின்றன. மழைபெய்து, வளர்ந்த இளம் பயிருக்குக் கிளிப்பிள்ளையின் புதிய சிறகும்; சேற்றில் மழைநீர்க் குமிழிகள் குதித்து மறைவதற்குச் சுனைகளுள் மழைநீர்க் குமிழிகள் குதித்து மறைவதும் ஒப்பிடப்பட்டுள்ளன. முல்லை நிலத்தில் மலர்கள் உதிர்ந்து கிடப்பதற்குச் சிச்சிலிப்பறவையின் சிறகுகளும்; தேர்ச்சக்கரச் சுவட்டின்மீது வளைந்து செல்லும் நீருக்கு, வரிசையாக ஊர்ந்துவரும் பாம்புகளும் என்பனவாய் தலைவனின் வரவை உணர்த்தும் பாடலில் பல உவமைகள் இடம்பெற்றுள்ளன.

கிளிப்பிள்ளையின் புதிய சிறகும், சுனைகளுள் மழை நீர்க்குமிழிகளும், சிச்சிலிப்பறவையின் சிறகும், பாம்புகளும் இப்பனுவலின்

சூழலியல் காட்சிகளில் இடம்பெறாமல் உவமைப் பொருட்களாய்க் காணப்படுகின்றன.

**இயற்கைப் பாடுபொருள் குறித்த தொல்காப்பிய வரைமுறைகள்**

பழந்தமிழ்ப் புலவர்கள் முதல், கரு, உரி எனும் முப்பொருளின் அடிப்படையில் பனுவல்களைப் படைத்துள்ளனர். நிகழ்விடமாகிய நிலமும், நிகழும் பொழுதும், முதற்பொருள் எனவும், நிகழ்விடச்சூழல் வனப்புகள் கருப்பொருள் எனவும், நிகழ்விற்குரிய மனிதமனத்தின் உணர்வுகளை உரிப்பொருள் எனவும் கொண்டு சங்க இலக்கியப் பனுவல்கள் அமைந்துள்ளன. முப்பொருளும் இடம்பெறும் பனுவல் சிறப்பை,

> **"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
> **நுவலுங் காலை முறைசிறந் தனவே**
> **பாடலுட் பயின்றவை நாடுங் காலை"[16]**

என்று தொல்காப்பியர் சங்க இலக்கியப் பாடுபொருளை வரையறுத்துள்ளார். இவை உரிப்பொருள் சிறப்பிற்கேற்ப ஐவகை நிலங்கள், அவற்றிற்குரிய பொழுதுகள் மற்றும் இவ்வுலக இயக்கமாய்ப் பரந்துள்ள கருப்பொருட்களைக் கொண்டு படைத்தாளப்பட்டுள்ளன. இவற்றுள்,

> **"முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
> **இயல்பென மொழிப இயல் புணர்ந் தோரே"[17]**

என்பது முதற்பொருள் குறித்தும்,

> **"தெய்வம் உணாவே, மாமரம் புள்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருஎன மொழிப"[18]**

என்பது கருப்பொருள் குறித்தும் விளக்குகிறது. இவ்விரு பொருள்களும் பண்டைப்பாக்களுள் மக்களின் வாழ்வியல் கூறுகளுக்கு வலுச்சேர்க்கும் இயற்கைப் பின்புலமாய்த் திகழ்கிறது.

**நால்வகை நிலம்**

சூழலுக்கு ஏற்ப ஒத்துப்போவது வாழ்வைத் தக்கவைத்துக் கொள்ளும் வழிமுறையாகும். மனித வாழ்வை மாற்றவல்ல இருபெரும் ஆற்றல்கள், வாழ்வாதாரச் சூழலும், மரபுவழி வந்த பன்முகத் திறன்களுமாகும். இத்தகைய நிலவியல் சூழலைத் தொல்காப்பியர்,

**"மாயோன் மேய காடுறை வுலகமும்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்"[19]**

சுட்டியுள்ளார். மக்கள் தாம் வாழும் நிலவியல் சூழலுக்கு ஏற்ப அவர்களின் வாழ்க்கை முறைகளை வகுத்துள்ளனர். இது அவ்வவ் நிலங்களின் வளமைக்கேற்ப, வாழ்வியல் ஒழுக்கங்கள், பாதுகாப்பான வாழிடம், உணவு, கலை, பண்பாடு என்று பலவாறு வளர்ச்சியடைந்துள்ளதைச் சங்கப்பாக்கள் உணர்த்துகின்றன.

நிலத்தோடு தொடர்புடைய மக்களின் தனித்திறமைகளையும், வாழ்வியல் முறைகளையும் கூறும்பொழுது அவர்கள் பிறந்த மரபுசார் நிலத்தோடு இணைத்துக் கூறுவது சங்ககாலம் முதல் சமகாலம் வரை வழக்காயுள்ளது. பெருங்குன்றூர் கிழார், இளம்புல்லூர் காவிதி எனும் புலவர்களின் பெயரடைகளோடு தலைவனின் குணங்களை விளக்குவதாய்,

**"குன்ற நாடன்" - குறுந்.38:3**
**"நன்மலை நாடன்" - ஐங்.219:3**

என்று குறிஞ்சி நிலமும்,

**"கார்செய்து என்னுழை யதுவே யாயிடைக்**
**கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய**
**பெருமர வேரடி போல" (நற்.289:6-8)**

என்று முல்லை நிலமும்,

**"………. கொற்றச் செழியன்**
**பிண்ட நெல்லின் அள்ளூரன்ன" (அகநா.46:13-14)**

என்று மருத நிலமும்,

**"திண்திமில் பரதவர் ……**
**……………………………**
**பெரிய மகிழுந் துறைவன்" (நற்.388:4-9)**

என்று நெய்தல் நிலமும்,

**"நிலங்கரி கள்ளியங் காடிறந்தோரே" (குறுந்.67:5)**
**"சுரனே சென்றனர் காதலர்" (குறுந்.140:3)**

என்று பாலை நிலமும், அவ்வவ் நிலவாழ் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளோடு இணைத்து உரைக்கப்பட்டுள்ளது. இத்தகைய புனைவை வின்சென்ட்.இலா, "மொழியின் அடிப்படையான வினைகளில் ஒன்று மனித உடலை நிலத்துடன் பிணைப்பது"[20] என்கிறார்.

ஐந்திணை ஒழுக்கத்திற்குரிய ஐவகை நிலங்களும் சங்கப்பாக்களுள் காணப்படுகின்றன. எனினும் தொல்காப்பியர் நால்வகை நிலங்களைச் சுட்டியுள்ளமைக் கருத்திற் கொள்ளத்தக்கது. இந்நிலக் கொள்கையை ஔவையாரும்,

> **"நாடா கொன்றோ; காடா கொன்றோ**
> **அவலா கொன்றோ; மிசையா கொன்றோ**
> **எவ்வழி நல்லவர் ஆடவர்**
> **அவ்வழி நல்லை வாழிய நிலனே"[21]**

என்று நாடாகிய மருதம், காடாகிய முல்லை, பள்ளமாகிய நெய்தல், மேடாகிய குறிஞ்சி என்னும் நானிலங்களையும் குறிப்பிடுகிறார். மேலும் அந்நிலங்களின் வளமை அந்நில வாழ் ஆண்களைச் சார்ந்ததெனக் கூறுகிறார். எனவே **நிலவியல் சூழலால் மக்களின் வாழ்வும், மக்களின் செயற்பாடுகளால் அந்நிலத்தின் வளமையும் ஒன்றையொன்று சார்ந்தேயுள்ளது.** இது எவ்வுயிரின் வாழ்வுக்கும் நிலமே ஆதாரம் என்பதையும், அந்நிலத்தைப் பாதுகாத்துப் பண்படுத்துவதற்கு ஏற்றவாறே மக்களின் வாழ்வு நலம்பெறும் என்பதையும் வலியுறுத்துகிறது.

**பாலை நிலம்**

பாலைத்திணைக்குரிய நிலத்தைத் தொல்காப்பியர், **'நடுவுநிலைத்திணை'** எனச் சுட்டியுள்ளார். வறட்சி மிகுந்த பருவப் புனைவே பிரிவு ஒழுக்கத்திற்கு உரிய பாலை நிலமாகச் சுட்டப்பட்டுள்ளது. இப்புனைவு பிரிவால் வருந்தும் காதலரின் அன்புள்ளமும், பிற உயிர்களின் அன்புமிகு வாழ்வும் புலப்படுமாறு அமைந்துள்ளது. இதனை வ.சுப.மாணிக்கம் "சின்னாட் செயற்கைக் கொடுஞ்சுரத்தைக் காதலோர் தம் அன்பின் நிலைக்களமாக்கினர். வறண்ட பாலைத் தடத்தை அன்புநீர் சுரக்கும் ஆயிர உள்ளங்களில் பிரிவுப் பாடல்களுக்குக் கற்பனைச் செய் ஆக்கினர் தமிழ்ப் புலனோர் உழவர்கள்"[22] என்று கூறுவதில் பாலைவழித் தடமும், பிரிவின் பயனும் ஒருங்கே எடுத்தாளப்பட்டுள்ளது. இவ்வாறான நிலத்திரிபைச் சிலப்பதிகாரம்,

> **"முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து**
> **நல்லியல் பிழந்து நடுங்கு துயரறுத்து**
> **பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"[23]**

என்று பாலையின் வழித்தடமும், கொடுஞ்சுரமும் குறித்து தெளிவுபடுத்துகிறது.

**இருவகைப் பொழுதுகள்**

உலகில் தோன்றும் உயிர்களுக்கும் அனைத்து நிகழ்வுகளுக்கும் உறுதுணையாய் விளங்குவது காலமாகும். இதனை "மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு, உகம்"[24] எனப் பலவகைப்படும் என்று இளம்பூரணனார் குறித்துள்ளார். ஐந்திணைகளுக்கும் உரிய காலப்பகுப்பைத் தொல்காப்பியர் ஓர் ஆண்டை ஆறு பெரும் பொழுதுகளாகவும், ஒரு நாளை ஆறு சிறுபொழுதுகளாகவும் இரு பிரிவுகளாய்ப் பகுத்துரைத்துள்ளார்.

இயற்கையை வளப்படுத்தும் கார்காலம், காடுகளால் சிறப்புறுவதும்; கார்காலத்தால் காடுகள் பொலிவுறுவதும் முல்லை நிலத்தின் சிறப்பியல்பாகும். ஆதலால் கார்பருவமும், இரவுப் பொழுதின் முற்கூறும் இந்நிலத்திற்கு உரியதாய்ப் பகுக்கப்பட்டுள்ளது. இதனை,

**"காரும் மாலையும் முல்லை"[25]**

என்பது உணர்த்தும்.

மலை நிலத்தின் வளமை, மக்களின் இன்ப வேட்கை இவற்றை மிகுவிக்கும் பருவமாய்க் கூதிர் காலமும், பின்பனியும், இரவுப் பொழுதின் நடுக்கூறும் (நள்ளிரவு) குறிஞ்சி நிலத்திற்குப் பகுக்கப்பட்டுள்ளது. இதனை,

**"குறிஞ்சி, கூதிர் யாமம் என்மனார் புலவர்"[26]**
**"பனியெதிர் பருவவமும் உரித்தென மொழிப"[27]**

என்ற நூற்பா உணர்த்துகிறது.

வேளாண் தொழில் புரிவோருக்கு பிறநிலங்களினும் வாழ்வியல் தேவைகள் பூர்த்தியாவதால் அனைத்துப் பருவங்களும் உற்சாகமும், மனமகிழ்வும் தருவனவாகும். இரவுப் பொழுதின் பிற்கூறும், முற்பகல் பொழுதும் நாளின் பகுப்புகளாய் மருத நிலத்திற்குக் குறிக்கப்பட்டுள்ளது. இதனை,

**"வைகறை விடியல் மருதம்"[28]**

என்பது உணர்த்தும்.

கடலில் தொழில் வயப்படும் காலந்தோறும் இரக்கத்தோடு காத்திருத்தல் நெய்தல்நிலத் திணைக்கு இயல்பாதலால் அனைத்துப் பெரும்பொழுதுகளோடும் எற்பாடாகிய பிற்பகல் குறிப்பிடப்பட்டுள்ளமைப் புலப்படுகிறது. இதனை,

**"எற்பாடு,**
**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"[29]**

என்னும் நூற்பா உணர்த்துகிறது.

இயற்கைத் தொழில் வளமற்றப் பாலைத் திணைக்குப் பின்பனிப்பருவமும், வெம்மை மிகுந்த இளவேனில், முதுவேனில் பருவங்களும், நண்பகல் பொழுதும் பகுக்கப்பட்டுள்ளன. இவை இருவகைப் பொழுதுகளின் இலக்கண வழக்காயுள்ளது. இதனை,

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[30]**
**"பின்பனி தானும் உரித்தென மொழிப"[31]**

என்பன உணர்த்தும்.

ஐந்திணை நிலங்களின் சிறப்பியல்பிற்கு ஏற்ப பருவக்காலங்கள் மாறுபடுகின்றன. இவ்வாறான வளமையும், வளர்ச்சியும், அந்நிலவாழ் மக்களின் தேவைக்கும் தேடலுக்குமானது. இருமாதங்களுக்கு ஒரு பருவமாய்க் கொண்டு ஓராண்டினைப் பெரும்பொழுதுகளாய்ப் பகுத்துள்ளனர். ஒருநாளை நான்கு மணி நேரங்களுக்கு ஒரு பொழுதாய்க் கொண்டு சிறுபொழுதுகள் பகுக்கப்பட்டுள்ளன. இவை சங்கப்பாக்களுள் பெரும்பான்மை பின்பற்றப்பட்டுள்ளதும் புலப்படுகிறது. இயற்கை வனப்பாலும், உணர்வுத் தூண்டுதலாலும் சில புனைவுகளுள் நிலமும், பொழுதும் மயங்குதலுண்டு என்பதும் அறியப்படுகிறது. இதற்கு,

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"[32]**

என்னும் நூற்பாவால் உரிப்பொருளல்லாத கருப்பொருளும், முதற்பொருளும் மயங்கவும் பெறும் என்பது தெரிகிறது. இம்மயக்கம், வரையறை மாறாத அறிவியல் போலல்லாது; கலைப்படைப்பின் உரிமையாய்ப் புலப்படுகிறது.

இவ்வாறான முப்பொருள்களும் ஒருங்கமைந்த பாடல்களை 'நாடகப் பாங்குடையன' என்பது இலக்கிய வழக்காய் விளங்குகிறது.

இதற்கு "முதற்பொருளும் கருப்பொருளும் ஆகிய அரங்கில், உரிப்பொருள் ஆகிய உணர்ச்சிச் செயற்பாடு நிகழ்கிறது. எனவே இம்மூன்றும் அமைந்த சங்கப் பாடல்களை நாடகப் பாடல்கள் என்று கூறலாம்"[33] என்னும் கருத்தும் வலுச்சேர்க்கிறது.

முன்பனித் தொடக்கத்தில் வருவேனென்ற நம் மலைநாட்டுத் தலைவன் காந்தள் நன்கு வளர்ந்துள்ள கூதிர்காலத்தில் வந்துவிட்டான். இப்பாடலில் குறிஞ்சி நிலமும், கூதிர் பொழுதும், காந்தளென்னும் கருப்பொருளோடு படைக்கப்பட்டுள்ளது. குறித்த பருவத்தின் முன்னர் வந்ததால், கூடலாகிய உரிப்பொருளின் சிறப்பு உணர்த்தப்படுகிறது. இதுபோன்ற புனைவுகள் முப்பொருள் விளக்கப் பதிவுகளாய் அமைந்துள்ளன. இதனை,

> **"............................... நம்மலை**
> **வரையா மிழியக் கோட னிடக்**
> **காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்**
> **முந்துவந் தனர்நங் காத லோரே"** **(ஐங்.223:1-5)**

என்று மகிழ்ந்துரைப்பதாய் இப்பாடலடிகள் அமைந்துள்ளன.

பழந்தமிழரின் வாழ்வு இயற்கையுடன் ஒன்றியது. பழந்தமிழ்ப் பாக்களுள் அழகியல் நோக்கோடு இயற்கை இடம்பெறவில்லை. அகம், புறம் என்னும் வாழ்வியல் கூறுகளை முதன்மைப்படுத்தி, அவர்களின் வாழ்வாதாரமாகத் திகழ்கிறது. இத்தகைய சூழலில் "இயற்கையின் வளமும், வனப்பும், ஆற்றலும், கருணையும் அவர்களைப் பெரிதும் கவர்ந்து, அன்னோர் வாழ்வில் பேரிடம் பெற்றன. அவர்கள் வாழ்வு இயற்கையில் தோன்றி இயற்கையில் வளர்ந்து இயற்கையில் இன்புற்ற வாழ்வு"[34] எனக் கூறுவது கருத்திற் கொள்ளத்தக்கது. இதனை,

> **"................................. அவர் மலை**
> **மாலைப் பெய்த மணங்கம ழுந்தியோடு**
> **காலை வந்த காந்தண் முழுமுதல்**
> **மெல்லிலை குழைய முயங்கலும்**
> **இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே"** **(குறுந்.361:2-6)**

என்னும் கபிலரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

மலைநிலத் தலைவன் நாட்டுச் செங்காந்தள் செடியொன்று பெருமழை வெள்ளத்தால் அடித்து வரப்படுகிறது. அதுகண்ட தலைவி,

தலைவனைக் கண்டதுபோல் இன்புற்றுத் தழுவி நட்டுவைக்கிறாள். அதனைத் தடுக்காத தாயைப் போற்றுகிறாள். இவ்வியற்கை இயக்கத்தைக் கார்கால நிகழ்வாய்க் காட்சிப்படுத்தாமல்; ஆற்றியிருந்த தலைவியின் உள்ளத்தைத் தேற்றும் உளவியல் பதிவாகப் படைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அக்கால மக்களின் உள்ளத்து உணர்வைத் தன்வயப்படுத்துவதாக இயற்கை இருந்துள்ளது. இதனைப் "பண்டைத் தமிழர், மனித இதயத்தின் உணர்வுகளையும் இயற்கையின் கவர்ச்சி நிறைந்த எழிலையும் நெருங்கிப் பிணைப்புடையனவாய் இனிய உறவுடையனவாய் இணைத்தனர்"[35] என்னும் கூற்றும் மெய்ப்பிக்கிறது.

**அகப்பொருள் புனைவு**

சங்கப்பாக்கள் மக்களின் தேவைகளையும், வாழ்வியல் ஒழுகலாறுகளையும் இயற்கையோடு இயைந்து விளக்குகின்றன. "இவ்வகையான காதலை இவ்வகையாகத் தான் பாடுவது என்ற கட்டுப்பாடே அகத்திணையின் சிறப்பு"[36] என்னும் வ.சுப.மாணிக்கம் அவர்களின் கருத்தினைப் போல் பாண்டிய நாட்டுப் புலவர்கள் தொல்காப்பியப் பாடுபொருள் குறித்த வரையறையைப் பெரும்பான்மைப் பின்பற்றியுள்ளனர்.

புலவர்களது எண்ணம், படைப்பு போன்றவற்றில் சில வேறுபாடுகள் இருப்பினும்; பாடல்கள் வெளிப்படுத்தும் கருத்து, பாடுபொருள் போன்றவற்றில் ஒருவிதக் கட்டுப்பாடுகளுடைய ஒற்றுமை தெரிகிறது. அகப்பாடலைத் தனியொருவனுக்குச் சொந்தமாக்காமல் ஒவ்வொரு மனிதனின் வாழ்வியல் தேவைகளுக்கும் உரிய வழிகாட்டியாய், தன்னைத்தானே நெறிப்படுத்திக்கொள்ளும் அனுபவமாய்ப் படைத்துள்ளமைத் தெரிகிறது.

> **"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்**
> **சுட்டிஒருவர்ப் பெயர்கொளப் பெறார்"[37]**

என்னும் தொல்காப்பிய நூற்பா தமிழினத்திற்குரிய பொதுமைக்கருத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளமைப் பெறப்படுகிறது.

வினைமுடித்து மீளும் தலைவனின் தேர் கானகத்துள் விரைகிறது. அக்கானகம் கார்கால மழைப்பொழிவால் செழிப்புறுகிறது. இணை மான்கள் காதலில் இன்புற்று மகிழ்கின்றன என்பதை உணர்ந்த தலைவன், இணைமானின் இன்பம் களையாதிருக்கத் தேரை மெதுவாகச் செலுத்தப் பணிக்கிறான். இவற்றுள் தலைவனின் காதல் வேட்கையினும்; அ·றிணை உயிர்களின் காதலைப் போற்றும் கனிவான உள்ளம் தெரிகிறது. இதனை,

> **"வானம் வாய்ப்பக் கவின் கானம்**
> **கமஞ்சூல் மாமழை கார்பாய்ந்து இறுத்தென,**
> **....................................... கலிமாத்**
> **தாஅத் தாள்இணை மெல்ல ஒதுங்க,**
> **இடிமறந்து ஏமதி - வலவ! குவிமுகை**
> **வாழை வான்பூ ஊருறுபு உதிர்ந்த**
> **ஒழிகுலை அன்ன திரிமருப்பு ஏற்றொரு**
> **கணைக்கால் அம்பிணைக் காமர் புணர்நிலை**
> **கடுமான் தேர்ஒலி கேட்பின்**
> **நடுநாட் கூட்டம் ஆகலும் உண்டே"  (அகநா.134:1-2,7-14)**

என்னும் சீத்தலைச் சாத்தனாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறு **எவ்வுயிரின் வாழ்க்கைக்கும் ஏற்புடையன செய்து, அக்காதலைப் போற்றும் மேன்மையான மனிதப் பண்பைப் பண்டைத் தமிழர் பெற்றிருந்தமை இத்தகைய பாக்களால் புலப்படுகிறது.**

**கருப்பொருள்**

முதற்பொருளை நிலமும் பொழுதுமென விளக்கிய தொல்காப்பியர் இவற்றை நிலைக்களமாகக் கொண்டு தோன்றிய உயிரினங்கள், அவற்றின் வாழ்வாதார வளங்கள் என்பனவற்றைக் கருப்பொருள் எனக் குறித்துள்ளார்.

இக்கருப்பொருட்களுள் உயிருள்ளவைப் புலனடிப்படையில் பகுக்கப் பட்டுள்ளன. ஓரறிவுடைய புல்லும், மரமுமாகிய தாவரங்கள், ஈரறிவுடைய சங்கு, நத்தை, சிப்பி, கிளிஞ்சல் முதலிய உடல் மூடிய ஓடுடைய நீர்வாழ் விலங்குகள், மூன்றறிவுடைய கரையான், எறும்பு, அட்டை போன்ற ஊர்வனவும், நான்கறிவுடைய நண்டு, தும்பி. வண்டுகள், சுரும்பு போன்ற நிலம் பெயரும் உயிரிகளும், ஐந்தறிவுடைய நீர், நிலவாழ் விலங்குகள், பறவைகள், மீன்கள், பாம்புகள், ஆமைகள் போன்றனவும்,

ஆறறிவுடைய மக்களோடு கிளி, யானை, குரங்கு முதலிய மனத்திறம் வாய்ந்தனவும் ஓரறிவு முதல் ஆறறிவு வரையிலானவை. இதனை,

**“புல்லும் மரனும் ஓரறி வினவே,...”[38]**
**“நந்தும் முரளும் ஈரறி வினவே,...”[39]**
**“சிதலும் எறும்பும் மூவறி வினவே,...”[40]**
**“நண்டும் தும்பியும் நான்கறி வினவே,...”[41]**
**“மாவும் புள்ளும் ஐயறி வினவே,...”[42]**
**“மக்கள் தாமே ஆறறி உயிரே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே”[43]**

என்பதனால் மேற்கூறியனவும், இவ்வறிவின் திறனொத்த மற்றனவும் முறையே தொடுதல், சுவைத்தல், நுகர்தல், பார்த்தல், கேட்டல் பகுத்து அறிதல் என்னும் புலனறிவின்பாற்பட்டவை என்பது உணரற்பாலது.

இக்கருப்பொருட்களின் ஒவ்வோரசைவும் பண்டைக்கால மக்களுக்கு, சூழலறிவோடு வாழ்வியலைப் புலப்படுத்தும் இயற்கைக் காட்சிகளாகக் காணப்படுகின்றன. எனவே பல்லுயிர்களின் புலப்பாட்டுச் செயல்யாவும் மக்களின் வாழ்வியலுக்கான புலன் ஒத்துணர்வின் அடிப்படையாய் அமைகிறது.

**ஐம்பூதத்து ஆற்றல்**

ஐவகை நிலங்களிலும் புலப்படும் இயற்கைப் பேராற்றலைத் தெய்வமென்று முதன்மைப்படுத்தியுள்ளனர். இது உலகியல் வழக்கில் ஐவகை நிலவியலோடு இணைந்து ஐம்பூதங்களின் ஆட்சி அமைந்துள்ளதை உறுதிசெய்கிறது.

நீலவானம் காடுறை சக்தியாகவும், முதல் நிலம் மலையுறை சக்தியாகவும், நந்நீர்நிலை மருதநிலம் உறையும் சக்தியாகவும், காற்று கடலுறை சக்தியாகவும், வெம்மை சுரமுறையும் சக்தியாகவும் இயற்கையின் மிகு சக்திகள் தெய்வமென்னும் கருப்பொருளாய்ப் புலப்படுகின்றன.

தொல்காப்பிய நானில விளக்க உரையில் இளம்பூரணனார் “காடுறை நிலம் என்னாது உலகம் என்றதனான் **ஐவகைப் பூதத்தானும்** ஐந்து இடம் என்பது உய்த்துணர வைத்தவாறு”[44] என்றுரைத்ததும்

உறுதிப்படுத்துகிறது. நிலமும், அந்நிலம் உறையும் தெய்வங்களுமாய் ஐம்பூதங்கள் புலப்படுகின்றன. இவ்வியற்கையை "இறைமையைப் பிரதிபலித்து நிற்பது இயற்கையைப் பிரதிபலித்து அதன் நகலாகக் கவிதையுற்றது"[45] என்னும் பிளாட்டோவின் கூற்றும் மெய்ப்பிக்கிறது என்பதை ச.அகத்தியலிங்கம் குறித்துள்ளார். இதுபோல்,

> **"சுனையெலா நீல மலரச் சுனைசூழ்**
> **சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி**
> **உறழ நனைவேங்கை ஒள்ளிணர் மலர**
> **மாயோ னொத்தஇன் னிலைத்தே"** (பரி.15:30-33)

என்னும் பாடலடிகளில் திருமாலிருஞ்சோலை மலையின் அசோகமரம், வேங்கை மரம் முதலான மரங்கள் அடர்ந்த **காடுகளின் தோற்றம் திருமாலையொத்த இறைசக்தியாய்க்** காட்சிதருகிறது.

| ஐம்பூதங்கள் | தெய்வம் | ஐவகை நிலம் |
|---|---|---|
| நீலவானம் | மாயோன் | காடு |
| முதல் நிலம் | சேயோன் | மலை |
| நந்நீர்நிலை | வேந்தன் | நாடு |
| உயிர்க்காற்று | வருணன் | கடல் |
| நெருப்பு (வெம்மை) | கொற்றவை | சுரம் |

என ஐம்பூதங்களும், ஐவகை நிலங்களின் பேராற்றலாயப் புலப்படுகிறது. இவை ஞாயிறு, திங்கள், வான்மழை, ஒளி முதலானவை வழிபாட்டுக்கு உரியதென்று இளங்கோவடிகள், இராமலிங்க அடிகளார் போன்றோர் இயற்கையை வழிபட அடித்தளமாய் அமைந்துள்ளது.

**உணவு**

உலக உயிர்களின் இயக்கத்திற்குத் தேவைப்படும் காற்றினைப் போன்றே உடலைப் பேணுவதற்கு உணவும் இன்றியமையாததாகிறது. பண்டைத் தமிழன் தத்தம் வாழிடச் சூழலுக்கு ஏற்ப இயற்கை உணவுகளை உண்டமைத் தெரிகிறது. தேன், பழங்கள் போன்ற இயற்கை உணவுகளையும்; தினை, வரகு, சாமை போன்ற சிறுதானியங்களையும்; வெண்ணெல், செந்நெல், உழுந்து, அவரை போன்றவற்றையும்;

மீன், வேட்டைப் பொருட்களான முயல், ஈயல், உடும்பு முதலியனவற்றையும் உணவாகக் கொண்டுள்ளனர்.

பத்துப்பாட்டின் அகநூல்களான குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடையில் கபிலரும், பட்டினப்பாலையில் உருந்திரங்கண்ணனாரும் உணவுகள் குறித்த குறிப்புகளைத் தந்துள்ளனர். எனினும் புறப்பாக்களான ஆற்றுப்படை நூல்களே உணவுப் பொருட்கள், சமைக்கும் முறைகளால் மதிப்புக் கூட்டப்பட்ட உணவுகள் குறித்து விவரித்துள்ளமைப் புலப்படுகிறது. ஐவகை நிலங்களில் விருந்து போற்றும் பண்பாட்டுச் சிறப்பாகப் பல்வேறு உணவுகள் குறித்த தகவல்களை அறிந்துகொள்ள முடிகிறது.

குறிஞ்சி நில மக்கள் "தினைச்சோறு"[46], "நெல்லரிசிச்சோறு"[47], "மூங்கிலரிசிச்சோறு"[48] முதலிய சோற்றுணவும், "பன்றி"[49], "உடும்பு"[50], "ஆடு"[51], "கடமான்"[52] முதலியவற்றின் ஊனுணவும், "கிழங்குகள்"[53], "தேன்"[54], "பழங்கள்"[55] போன்ற இயற்கை உணவும், "மோர்"[56] முதலிய பாலுணவும் உண்டதை அறியமுடிகின்றது. இதற்குச் சான்றாக,

> **"அருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்**
> **வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை**
> **முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை**
> **பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ**
> **வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி**
> **இன்புளிக் கலந்து மாமோ ராகக்**
> **கழைவளர் நெல்லின் அரிஉலை ஊழ்த்து**
> **வழைஅமை சாரல் கமழத் துழைஇ**
> **நறுமலர் அணிந்த நாறுஇரு முச்சிக்**
> **குறமகள் ஆக்கிய வால்அவிழ் வல்சி**
> **மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்"**
>
> **(மலைபடு.174-185)**

என்று இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் குறிப்பிடுகிறார். நன்னனின் நவிர மலையில் கிடைத்துள்ள பலாக்கொட்டை, கடமான் தசை, பன்றியின் ஊன், உடும்பின் தசை, இவைகளைப் புளிநீரும், மோரும் கலந்து உலையிட்டு ஆக்கிய உணவை, குறமகள் விருந்து படைத்தமைப் பெறப்படுகிறது. இது விருந்தினரையும் உறவோடு

போற்றிப் பசித்துன்பம் போக்குவதையும், மதிப்புக் கூட்டப்பட்ட உணவைச் சமைப்பதையும் எடுத்துக்காட்டுகிறது.

முல்லைநில மக்கள் "வரகு அரிசிச்சோறு"[57], "திணை அரிசிச்சோறு"[58], "மூங்கில் அரிசிச்சோற்றோடு"[59] "வெள்ளாட்டு இறைச்சி"[60], "சிவந்த அவரை விதைகள்"[61], "பால்"[62], "மோர்"[63] முதலியவற்றை உணவாக உண்டமை அறியப்படுகிறது. முல்லை நிலத்தவரின் வாழ்வாதாரமாய்க் கால்நடைகள் இருப்பதால் பாலும் மென்மையான மிதக்கும் பாற்சோறும் அதிக அளவிலேயே சமைக்கப்பெறும் வளமுடையதென்பதை,

**"பல்யாட்டு இனநிரை எல்லினிர் புகினே**
**பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர்" (மலைபடு.416-417)**

என்றுரைத்தல் உணர்த்துகிறது. ஆதலால் சமைக்கும் வரைக் காத்திருக்காமல் அவர்களுக்கான உணவை விருந்தினருக்குக் கொடுத்துப் பசியாற்றுவர் என்பது புலப்படுகிறது.

மருதநில மக்கள் "நெல்லரிசிச்சோறு"[64], "வெண்ணெல்லரிசிச் சோறு"[65], "பலவகை நெல்லரிசிச்சோறு"[66], "மனைவாழ் கோழியின் இறைச்சி"[67], "வாளைமீன் பொரியல்"[68], "வரால் மீன் பொரியல்"[69], "அவரைப் புளிக்கூழ்"[70], இயற்கை உணவாகிய "கரும்புச்சாறு"[71], "இளநீர்"[72], "பனை நுங்கு"[73], "பலாப்பழம்"[74], "வாழைப்பழம்"[75] முதலியனவும் உண்டு வாழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. நீர்வளமிகுந்த மருதநில மக்கள் சமைக்காது உண்ணும் பலவகையான இயற்கை உணவுகளைப் பெற்றிருந்தமை தெரிகிறது. இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"தண்டலை உழவர் தனிமனைச் சேப்பின்**
**.....................................**
**தீம்பல் தாரம் முனையின் சேம்பின்**
**முளைப்புற முதிர்கிழங்கு ஆர்குவிர்" (பெரும்பாண்.355-362)**

என்பதனால் அறியமுடிகிறது.

நெய்தல் நில மக்கள் "நெற்சோறு"[76], "செஞ்சோறு"[77], "மீனிறைச்சிப் பொறியல்"[78] இவற்றைப் பக்குவப்படுத்தி வேகவைத்து

உண்டனர். விருந்தினர்க்கும் படைத்தனர். (நறும்பிழி கள்) குற்றாத அரிசிக் கூழால் ஆகிய கள்விற்கும் கடைகளில் விலைப்பட்டியலிட்ட கொடிகள் அசைந்தன. மீனும் பிற ஊனும் பொரியலாகப் பரிமாறப்பட்டது. பனங்கள் அருந்தியதும் தெரிகிறது. இதனை,

> **"மடல்தாழை மலர்மலைந்தும்**
> **பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்**
> **.................................**
> **பாய்கரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது**
> **உவவுமடிந்து உண்டு ஆடியும்" (பட்டினப்.88-93)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. கள் பண்டமாற்றுப் பொருளாயிருந்துள்ளது. இது நெய்தல்நில மக்களால் முதல் முறையாக வணிக நோக்கில் மாற்றம் பெற்றதை அறியமுடிகின்றது. கூடவே துணை உணவாக மீன் பொரியலும், இறைச்சிப் பொரியலும் இடம்பெற்றுள்ளதும் பெறப்படுகிறது. **பல வளங்களும் நிறைந்த பட்டினம் வணிகத் துறைமுகமாகவும், பல நாட்டினர் வந்து செல்லுமிடமாகவும் விளங்கியதால் பிறநிலங்களில் இருந்துள்ள விருந்து மாறி வணிகப் புதுமையோடு உணவுகள் விற்பனையானதும் புலப்படுகிறது.**

பாலை நிலத்தவர் "புல்லரிசிச்சோறு"[79], "செவ்வரிசிச்சோறு"[80], "உடும்பு"[81], "முயல்"[82], "வாடுஊன்"[83] போன்றவை பாலைநில மக்களின் உணவாக அறியப்படுகிறது. சூழலுக்கு ஏற்ற தகவமைத்துக் கொள்ளும் திறனுடைய பாலைநில மக்களுக்குப் போதுமான உணவின்மையால் கிடைக்கும் உணவை உண்டு வாழ்ந்தமைப் பெறப்படுகிறது. இந்நிலையிலும் விருந்து போற்றியதை,

> **"இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்**
> **உளிவாய்ச் சுரையின் மளிர மிண்டி,**
> **இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி,**
> **நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்**
> **......................................**
> **தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ, நும்**
> **பைதீர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுவிர்"**
> **(பெரும்பாண்.91-105)**

என்னும் அடிகளால் **பாலைநில மக்கள் தமக்குக் கிடைத்த குறைந்த உணவிலும் விருந்து போற்றிய திறம் உரைக்கப்பட்டுள்ளது.**

ஐந்திணைவாழ் மக்களும் ஏதேனுமொரு அரிசிச்சோறு, இறைச்சி போன்றவற்றை உணவாகக் கொண்டுள்ளனர். குறிஞ்சி, முல்லை நிலங்களில் சிறுதானியங்கள் பெரும்பான்மையாகவும், மருதம், நெய்தல் நிலங்களில் மீன்கள் பெரும்பான்மையாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. கரும்புச்சாறு, இளநீர், நுங்கு போன்ற நலம்தரும் இயற்கைக் குளிர்பானங்களும் வாழை, பலாப்பழங்களும் மருதநிலத்துச் சிறப்புணவுகளாக இருந்துள்ளன.

**மனித சமுதாயத்தின் ஆதார உயிரிகள் (மா மரம் புள்)**

விலங்குகள், தாவரங்கள், பறவைகள் குறித்த செயற்பாடுகள் சங்கப் பாக்களுள் மிகுந்துள்ளன. இவை காண்பதற்கும், உணர்வதற்குமான கருத்தாளங்களை வெளிக்கொணர்கின்றன. இவ்வாறான **உலக உயிரினங்களின் வாழ்க்கைக்கு மனிதன் தேவையில்லை. மனிதனின் வாழ்க்கைக்கு இவற்றின் தேவைகள் மிகவும் அடிப்படையானவையாகும்** என்பது கருத்திற்கொள்ளத்தக்கது. இவை புல், மான், புலி இவற்றிற்கான வாழ்க்கைச் சுழற்சி போன்றதேயாகும்.

சங்கப் பாக்களுள் பாண்டிய நாட்டுப் புலவர்களால் நூற்றிநாற்பத்தொன்பது வகைத் தாவரங்களும், இருபத்தெட்டு வகைப் பறவைகளும், நாற்பத்துமூன்று வகை நீர், நிலவாழ் விலங்கினங்களும் அடையாளம் கண்டு உரைக்கப்பட்டுள்ளன. இவை நான்காம் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

பாக்கள்தோறும் இடம்பெற்றுள்ள தாவரங்கள், விலங்குகள், பறவைகளின் எண்ணிக்கை போலவே குறிஞ்சிக்கலி நாற்பத்துமூன்றில் கபிலரும் ஐவன வெண்ணெல், காந்தள், வெதிர், வளகு, வாழை, சாந்தமரம் முதலிய ஆறு வகைத் தாவரங்களையும், வேங்கை (உழுவை), கருங்குரங்கு, வருடைமான், யானை (வாரணம்) என நான்கு வகை விலங்குகளையும், தும்பி, வண்டு என்னும் ஆறுகால் பறவைகளையும் தம் ஒரே பாடலில் புனைந்துள்ளார். இதனை,

> **“வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்**
> **ஏந்து மருப்பின் இனவண்டு இமிர்பு ஊதும்**
> **சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்**
> **ஐவன வெண்நெல் அறை உரலுள் பெய்து**

**ஐயனை ஏத்துவாம் போல, அணி பெற்ற**
**மைபடு சென்னிப் பயமலை நாடு**
**தையலாய் பாடுவாய் நாம் ......**
**வெருள்பு உடன் நோக்கி வியல் அறை யூகம்**
**இருள் தூங்கு இறுவரை ஊர்பு இழிபு ஆடும்**
**வருடைமான் குழவிய வளமலை நாடு...**
**ஆடமை வெற்பன் அளித்தக் காறி போன்றே"**
**(குறி.கலி.43:1-31)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இத்தகைய இயற்கை வளங்கள் தற்காலத்தில் அரிதாகிவிட்டதை "உலகளவிலே பலநாடுகளில் பறவைகள், விலங்குகள், மரம், செடி, காடுகளின் அரிய வகைகள் அழிக்கப்பட்டு அவற்றின் சந்ததிகள் இல்லாத நிலை ஏற்பட்டுள்ளது"[84] என்னும் சூழலியல் கருத்துக்கள் நினைவு கூறத்தக்கன.

**தொழிலும் இசையும்**

மக்கள் தாம் வாழும் நிலச்சூழலுக்கு ஏற்ப இயற்கையோடு மாறுபடாத தொழில்களைச் செய்துள்ளனர். "தேனெடுத்தல்"[85], "ஆநிரை கவர்தல்"[86], "குரவை அயர்தல்"[87], "சுனைநீராடல்"[88], "தினைப்புனம் காத்தல்"[89], "வெறியாட்டு அயர்தல்"[90], "வேட்டையாடுதல்"[91], "வேளாண்தொழில் செய்தல்"[92], "கலப்பைப் பயன்பாடு"[93] போன்றவை தொகை நூல்களினும், பத்துப்பாட்டில் விரிவாக இடம்பெற்றுள்ளன. குறிஞ்சிநில மக்களின் முக்கியத் தொழிலான "தினைப்புனம் காத்தலில்"[94] தழல், தட்டை, குளிர் போன்ற கிளிகடி கருவிகளின் பயன்பாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

**"ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்**
**கிளிகடி மகளிர் விளிபடு பூசல்" (மலைபடு.328-329)**

என்பதனால் அறியப்படுகிறது.

**காடுகள் அழித்துக் கழனி செய்தல்**

விளைநிலம் உருவாக்குதல், விளைவிக்கும் பொருட்களைப் பாதுகாத்தல் போன்றவை இடம்பெற்றுள்ளன. காடுகள் அழிக்கப்பட்டு வேளாண் தொழில் செய்ததும் பெறப்படுகிறது.

**"நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெலொடு அரில்கொள்பு நீடி**

**இஞ்சி, மஞ்சள், பைங்கறி பிறவும்**
**.....................................**
**தினைவிளை சாரற் கிளிகடி பூசல்''   (மதுரை.286-291)**

என்னுமடிகள் உணர்த்தும்.

**பால் சார்ந்த தொழில்**

முல்லை நில மக்களின் அடிப்படைத் தொழில்களாக "ஆநிரை மேய்த்தல்"[95], "மோர் விற்றல்"[96], "வேளாண் தொழில்"[97], "போர்த்தொழில்"[98] போன்றவை அறியப்படுகிறது. ஆநிரை மேய்த்தல் தொழிலில் இடம்பெயர்ந்த கோவலர்கள் புல் நிறைந்த இடங்களில் தங்கியமைப் புலனாகிறது. இதனை,

**"ஆர்கலி முனைஇய கொடுங் கோற் கோவலர்**
**ஏறுடை இனநிரை வேறு புலம் பரப்பி''  (நெடுநல்.3-4)**

என்பதனால் அறியமுடிகின்றது.

முல்லை நிலத்து மக்கள் வேளாண் தொழிலில் கலப்பை என்னும் உழவுக் கருவியைப் பயன்படுத்தியமைத் தெரிகிறது. இதனை,

**"குறுஞ் சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி''**
**(பெரும்பாண்.188)**

என்னும் பாடலடி விளக்குகின்றது. இது முல்லைநில வேளாண் சிறப்பை உணர்த்துகிறது.

**வேளாண் மிகுவளம்**

மருதநிலம் நிலவளமும், நீர்வளமும் மிக்கதால் அது சார்ந்த "உழவுத்தொழில்"[99], "மீன்பிடித்தல்"[100], "துணங்கைக்கூத்து"[101] முதலியன சிறப்பிடம் பெறுகிறது. தொழிலோடு தொடர்புடைய இசையும், நிகழ்வுமாய் விளைநிலத்திற்கு நீரிரைத்தல், கடாவிடுதல் போன்ற தொழில்களால், உண்டாகும் ஓசை, எருதுகளின் மணி ஓசை போன்றவை உழவர்கள் சோராதிருக்க உதவியுள்ளன. இவை,

**"நீர்தெவ்வும் நிரைத் தொழுவர்**
**பாடுசிலம்பும் இசை, ஏற்றத்**
**தோடு வழங்கும் அகல் ஆம்பியின்**
**கயன் அகைய வயல்நிறைக்கும்**
**மென்கொடை வன்கிழாஅர்**

**அதரி கொள்பவர் பகடு பூண் தெண்மணி**
**இரும்புள் ஓப்பும் இசையே"      (மதுரை.89-95)**

என்னும் பாடலடிகளில் அமைந்துள்ளன.

மருதநிலம் மற்ற நிலங்களினும் சிறந்த வேளாண் வளங்களைப் பெற்றுள்ளது. நந்நீர் மீன்களாக வராலும், வாளையும் இடம்பெறுகின்றன. இதனை,

**"கண்புமலி பழனம் கமழத் துழைஇ,**
**வலையோர்தந்த இருஞ்சுவல் வாளை,**
**நிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்,**
**பிடிக்கை அன்ன செங்கண் வராஅல்**
**துடிக்கண் அன்ன குறையொடு விரைஇப்**
**பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்"   (மலைபடு.454-459)**

என்பதால் அறியமுடிகின்றது.

**வணிக வளாகம்**

நெய்தல்நில மக்களின் தொழில்களாக, "மீன்பிடித்தல்"[102], "உப்பு விற்றல்"[103], "கள்விற்றல்"[104] போன்ற தொழில்களும் பொழுதுபோக்கு நிகழ்வாக வண்டல் அயர்தல், புனல் ஆடுதல், வரிப்பந்து ஆடுதல், கழங்கு ஆடுதல் போன்ற செயற்தொழில்களைக் கொண்டுள்ளமைத் தெரிகிறது. இவை,

**"வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇ,**
**புனல்ஆடு மகளிர் இட்ட பொலங் குழை**
**..............................................**
**நீர்ப்பெயற்று எல்லை போகி**
**..............................................**
**பரதர் மலிந்த பல்வேறு தெருவின்"   (பெரும்பாண்.311-323)**

என்னுமடிகளில் காணப்படுகின்றன.

நெய்தல்நில மக்கள் உப்பு எடுத்தல் மற்றும் உப்பு விற்றலைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். பலநாட்டு வணிகப் பொருட்களும் வந்திருக்கும் இடமாகிய துறைமுக நகரில் பல தெருக்கள் நிலையான வணிக வளாகமாக இருந்துள்ளன. இதனை,

**"முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**
**அரம்போழ்ந்து அறுத்த கண்நேர் இலங்குவளை**
**பரதர் தந்த பல்வேறு கூலம்**
**இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்புப்**

**பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்**
**...............................................**
**வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப**
**நெய்தல் சான்ற வளம் ...” (மதுரை.315-325))**

என்னுமடிகள் உணர்த்துகின்றன.

**கவலைக்காவல்**

ஆறலைத்தலாகிய களவே பாலைநிலத்தவரின் முதன்மைத் தொழிலாகச் சுட்டப்பட்டுள்ளது. இந்நிலத்தின் வேறுசில தொழில்கள் குறித்துப் பத்துப்பாட்டு புலப்படுத்துகிறது. சுரம் சார்ந்த பாலை வழியில் மலையில் விளையும் பொருட்களையும், கடலில் விளையும் பொருட்களையும் வணிகத்திற்காக எடுத்துச் செல்வர். இவ்வழியில் பொருட்களுக்கான ‘சுங்கவரி’ செலுத்துதலுண்டு. ஆதலால் இப்பெருவழியில் காவல் புரிவதும் அறியப்படுகிறது. இதனை,

**“எல்லிடைக் கழியுநர்க்கு ஏமம் ஆக**
**............................................**
**அணர்ச்செவிக் கழுதை சாத்தொடு, வழங்கும்**
**உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்**
**வில்லுடை வைப்பின் வியன்காட்டு இயவு”**
**(பெரும்பாண்.66-81)**

**“சிலையுடைக் கையர் கவலை காப்ப” (மதுரை.311-312)**

என்பதனால் அறியமுடிகின்றது. எனவே “ஆறலைக்களவு”[105], “பெருவழிக்காவல்”[106], “புல்லரிசி எடுத்தல்”[107], “போர்த்தொழில்”[108], “இரவில் பன்றி (குழி) வேட்டை”[109], “பகலில் முயல் வேட்டை”[110] போன்ற தொழில்களும் தெரியவருகிறது.

இவ்வாறு நிலவளமைக்கு ஏற்ப பலவிதத் தொழில்களைச் சங்க காலத்து மக்கள் ஆற்றியுள்ளனர். இவை சூழல் வயப்பட்ட வாழ்வாதாரத் தேடல்களாக அமைந்துள்ளன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலங்களின் மிகை வளங்களான மிளகு, பால் பொருள், நெல், உப்பு போன்ற உணவுப் பொருட்கள் வேற்றுநிலத்தார்க்குப் பண்டமாற்று செய்யப்பட்டுள்ளது. இவ்வாறாய் மக்கள் தாம் தேடிய பொருட்களைத் தமக்காகச் சேமிக்கவும், அடித்தள வாழ்வை மேம்படுத்தவும் ஏற்பட்ட தொழிற் சார்ந்த செயல்பாடுகள் நிரந்தரத் தொழில்களாகவும், வணிகமாகவும் உருவாகியுள்ளன.

**இசைப்பயன் (யாழ்-பறை-பண்)**

தொகை நூல்களுள் வண்டு, சுரும்புகளின் இயக்கங்களும், அருவி, விலங்குகளின் நடை, பறவைகளின் ஒலி, யானைப்பிளிரும் ஓசை, மேகத்தின் பேரோசை, ஆந்தையின் அரற்றும் ஒலி முதலியன யாழிசை, இன்னியம், முழவு, ஆகுளியின் கடும் ஒலி போன்ற இசையோடு ஒப்பிடப்பட்டுள்ளன.

**"நைவளம் பழுநிய பாலை வல்லோன்**
**கைகவர் நரம்பின், இம்மென இமிரும்**
**மாதர் வண்டொடு, சுரும்பு நயந்து இறுத்த"**

**(குறி.கலி.146-148)**

**"ஒன்றுஅமர் உடுக்கை, கூழ்ஆர் இடையன்**
**..........................................**
**வில்யாழ் இசைக்கும், விரல்எறி குறிஞ்சி"**

**(பெரும்பாண்.175-183)**

**"சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர்**
**பன்றிப் பறையும்" (மலைபடு.343-344)**
**"தொண்டகச் சிறுபறைக் குரவை அயர" (முருகு.197)**

என்பன போன்ற பத்துப்பாட்டுப் பதிவுகளில் இடம்பெற்றுள்ளன. இசைக்கலைஞர்களாய்ப் பொருநர், பாணர், விறலி, பாடினி, கூத்தர் போன்றோரின் செயற்திறன்கள் இசை சார்ந்த நிகழ்வுகளாய் கூறப்பட்டுள்ளன. திணைகளுக்கான இலக்கண வரையறை பெரும்பான்மைச் சிறப்பினடிப்படையிலானது. இனிய ஓசை ஒழுங்குடைய பறையொலி போன்றவை விழாக்கால நிகழ்வுகளில் இடம்பெற்றுள்ளன. பறவை, விலங்குகளை விரட்டித் தினை, சேம்பு, மஞ்சள் முதலியன காத்தலில் தழல், தட்டை, பன்றிப்பறை போன்றவற்றின் தொழிற்சார் ஓசைகளில் இசை குறித்த பதிவுகளைக் காணமுடிகிறது.

**ஊரும், நீரும், பூவும்**

ஐந்திணைகளிலும் வாழ்ந்த மக்களின் வாழ்வாதார அமைவிடமான ஊர், முதன்மை ஆதாரமான நீர் குறித்து மூன்றாவது இயல் விளக்குகிறது. நிலவளத்தைக்கூறும் பூக்கள் நான்காவது இயலில் விளக்கப்பட்டுள்ளன.

**உரிப்பொருள்**

சங்கப் பாக்களில் மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்களை உரிப்பொருள் என்றுரைத்துள்ளது தெரிகிறது. இதனை,

> **"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் இவற்றின் நிமித்தம் என்றினை**
> **தேருங் காலைத் திணைக்கு உரிப்பொருளே"[111]**

எனத் தொல்காப்பியர் குறித்துள்ளார். இவை குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணைகளுக்கு பெரும்பான்மையும், சிறுபான்மை அனைத்துத் திணைகளுக்கும் உரியதாய்க் கொள்ளப்படுகிறது. இதனை,

> **"திணை மயக்குறுதல் கடிநிலை இலவே**
> **நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப**
> **புலன்நன் குணர்ந்த புலமை யோரே"[112]**

என்பதாலும்,

> **"எந்நில மருங்கினும் பூவும்புள்ளும்**
> **அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்**
> **வந்த நிலத்தின் பயத்த லாகும்"[113]**

என்பதாலும் இயற்கைப் பொருள்களுள் திணை மயக்குறுதலின் இயல்பு புலப்படுகிறது. **முதற்பொருள், கருப்பொருள் என்னும் இயற்கைப் பாடுபொருட்கள் நற்கருத்து விளக்கப் பதிவுகளாகவும், நந்நெறிப்படுத்தும் காட்சிகளாகவுமம் காணப்படுகின்றன.**

**உள்ளுறை உணர்த்தும் வாழ்வியல் கூறுகள்**

பழந்தமிழ்ப்பாக்களுள் தெய்வம் நீங்கிய கருப்பொருட்களில் உள்ளுறையுவமை இடம்பெறுகிறது. இது அகப்பாக்களுக்கு மட்டும் உரியதாய்க் காணப்படுகிறது. பறவைகள், விலங்குகள், தாவரங்கள் முதலானவற்றின் இயக்கச் செயல்களால் உவமிக்கப்படுகிறது. இவ்வுவமை சூழல் பொருட்தெளிவிற்கும், சுமூகமான வாழ்வைப் பெறுவதற்குமான உட்பொருளைப் புலப்படுத்துகிறது.

புலன்களை நெறிப்படுத்தும் சங்கப்பாடல்கள் கருத்துக்களையும், காட்சிகளையும் உணர்த்தும் புலப்பாட்டுத்திறன்வாய்ந்தன. உள்ளுறை உவமை என்பது ஒரு பொருளை உவமைப்படுத்தி, அதன்மூலம் மற்றொரு வாழ்வியல் பொருளை உணர்த்துவது. இதனை,

**“உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென**
**உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்”**[114]

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

**பண்படும் வாழ்வு**

கருப்பொருட்களின் செயல்களைக் காட்சிப்படுத்தும் இயற்கை நிகழ்வுகள் உள்ளுறையில் இடம்பெறுகிறது. வாயில் மறுத்த காதல் மாந்தரின் நயமான குறிப்பு மொழிகளின் புலப்பாடு உள்ளுறையாகிறது. இது காதல் இடர்பாடுகளைக் களையும் நோக்குடையது. மருதத்திணை உரிப்பொருளான ஊடலுக்குப் பரத்தமைக் காரணமாதலால் இதனைச் சாடும் பதிவுகளாய்ப் பல இயற்கைப் பதிவுகள் புலப்படுகின்றன.

காரான் என்பது மருதநிலத்தில் வாழும் எருமையாகும். இது செந்நிறக் கண்களையும் வளைந்த கொம்புகளையுடையது. இக்காரான் தன் இருப்பிடத்தைத் தானே சேறாக்கிக் கொள்கிறது. தன்னைக் கட்டியிருந்த கயிற்றையும் அறுத்துக் கொள்கிறது. யாருமறியாமல் காவல் வேலியைக் கொம்புகளால் களைந்து தாண்டுகிறது. நீர்வளமிக்க இடங்களில் புகுந்து, அங்கிருந்த மீன்களை அஞ்சி ஓடச்செய்கிறது. வள்ளைக் கொடிகளைச் சிதைத்து, வண்டூதும் குவிந்த தாமரையைத் தின்கிறது. இதனை,

**“சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா**
**னூர்மடி கங்குலி னோன்தலை பரிந்து**
**கூர்முள் வேலி கோட்டி னீக்கி**
**நீர்முதிர் பழனத்து மீனுட் னிரிய**
**வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை**
**உண்டூது பனிமலர் ஆரும் ஊர”** **(அகநா.46:1-7)**

என்னும் அள்ளூர் நன்முல்லையாரின் பாடலடிகள் விளக்குகின்றன.

இவ்வாறு தலைவன் தன் தலைவியை ஆதரவின்றி விட்டுவிட்டு, நாணமாகிய தளையையும் அறுத்துக் கொண்டு செல்கிறான். பரத்தையருக்குக் காவலாகிய விறலியைப் பாணனின் உதவியால் நீக்கிவிட்டு, தோழிகள், தாய் போன்றோர் இடம்பெயரவும் செய்கிறான். இது தலைவனொருவன் தன்பால் அன்பில்லாத, பரத்தையோடு நாணமிழந்து இன்புற்றதைக் குறிக்கிறது.

இவ்வாறு ஒருவருடைய தவறுகளையும், அதனால் விளையும் துன்பங்களையும் மறைமுகமாக உணர்த்தி, முடிவை அவரிடமே விட்டுவிடுதல் நல்ல மனமாற்றத்தை ஏற்படுத்தும் இக்குறிப்புரை தன்நெறிப்படுத்தும் உளவியலாகப் பெறப்படுகிறது.

**வராலின் உயிர்ப்போராட்டம்**

வரால் மருதநிலத்து மீன் வகைகளுள் ஒன்று. பெண் யானையின் துதிக்கை போல் பருத்த, சிவந்த கண்களையுடையது என்பதை,

**"பிடிக்கை அன்ன செங்கண் வரால்" (மலைபடுகடாம்)**

உணர்த்துகிறது. இதன் வலிமையான தோற்றம், உயிருக்குப் போராடும் குணம் முதலியவை தலைவன் தன்னலம் தொலைத்து முறைதவறியதால் பெற்ற துன்பமாகக் காணப்படுகிறது.

மருதநிலக் குளத்தில் உள்ள வரால் மீன், சிறு இரை கோத்த தூண்டிலைக் கவ்வியது போல் பாணனின் கவர்ச்சி மொழியில் மயங்கி பரத்தையோடு சேர்ந்து வாழ்கிறான். இதனால் குவளைப் பூச்சிதைவது போல் தலைவியும், வள்ளைக் கொடியைக் கலக்கியது போல் அவளது சுற்றத்தினரும் வருந்திடச் செய்கிறான். இவ்வாறு காலைப்பொழுதில் அனைவரும் காண குளம் கலங்குவது போல் உறவினர் அனைவரும் கலக்கமுறுமாறு இச்செயல் வெளிப்படுகிறது. இந்நாணமில்லா இழிசெயல் வெற்றி முரசின் ஆரவாரத்தினும் மிக்கிருந்தது எனத் தலைவி வருந்துகிறாள். இதனை,

**"பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்**
**கொடுவா யிரும்பின் கோளிரை தூற்றி**
**ஆம்பல் மெல்லடை கிழியக் குவளை**
**கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து**
**அரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கித்**
**தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது**
**கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு**
**நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர" (அகநா.36:1-8)**

என்னும் நக்கீரரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. வரால்மீன் தலைவனுக்கும், அதன் உயிர்ப்போராட்டம் அவனது தகாதசெயலால் உண்டாகும் துன்பத்திற்கும் இடனாகின்றன.

இப்பாடலில் காணப்படும் இயற்கை, அழகுவயப்பட்டதாய்ப் புனையப்படவில்லை. வழிதவறியதால் உண்டாகும் உயிர்ப் போராட்டமும், சுற்றுச்சூழல் சீர்கேடுமாய்ப் புலப்படுகிறது. இது தனிமனிதத் தவறுகள் அவன் சார்ந்த சுற்றத்தையும், சமூகத்தையும் பாதிப்புள்ளாக்குவதை உணர்த்தி, மனவலிமையோடு தன் வாழ்வை நேர் செய்யும் வாய்ப்பை வழங்குவதாகப் பெறப்படுகிறது.

**வாளையின் செருக்கு**

வாளைமீன் மருதநிலத்து நீர்நிலைகளில் வாழ்கிறது. இது தன் பாதுகாப்புச் சூழலைப் புறக்கணித்து, மழைநீரின் ஓட்டத்திற்கு ஏற்ப மகிழ்ந்து, தவறான வழியில் செல்கிறது. தன் செருக்கால் உழவனின் கோலுக்கு அஞ்சாமல் சேற்றுவயலில் புரள்கிறது என்னும் மருதநிலக்காட்சி உவமையாகிறது. இது தலைவன் தன் இல்லத்தை விட்டு வெளியேறிப் பாணன் செலுத்தும் வழியில் செல்கிறான். பிறர் கூறும் பழிமொழிகளைப் பொருட்படுத்தாமல், ஒரு பரத்தையின் இல்லத்தில் தங்கி இன்புறுகிறான் என்பதை உள்ளுறுத்துகிறது. இதனை,

> **“கல்லா யானைக் கடுந்தேர் செழியன்**
> **மடைமான் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்**
> **காலணைந்து எதிரிய ‘கணைக் கோட்டு வாளை’**
> **அள்ளலங் கழனிஉள்வாய் ஓடிப்**
> **பகடுசேறு உதைத்த புள்ளி வெண் புறத்துச்**
> **செஞ்சொல் உழவர் கோற்புடை மாதரிப்**
> **பைங்கால் செறுவின் அணைமுதற் புரளும்”** (நற்.340:2-8)

என்னும் நக்கீரரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. **எருமை, வரால், வாளை முதலியன தன் வலிமையால் தகாத ஒழுக்கத்தோடு சூழல்வளத்தை மாசுபடுத்துகிறது. இது சுயகட்டுப்பாடற்ற பழக்கத்தால் உண்டாகும் சமூகச் சீர்கேட்டைப் புலப்படுத்துகிறது. வராலின் உயிர்ப் போராட்டம் உயிர்க்கொல்லி நோய்களுக்கான விழிப்புணர்வு விளம்பரமாய்ப் புலப்படுகிறது.** இதனை வ.சுப.மாணிக்கம் “நாணில் செயல்களை நாணுடைய மொழிகளால் புலப்படுத்துவது”[115] என்று கூறுகிறார். நாணம் அழிந்தால் அது உயரிய வாழ்வைப் பாழ்படுத்தும் என்பதை இக்கருத்து உணர்த்துகிறது.

நக்கீரர், தகாத ஒழுக்கம் உயிர்க்கொல்லி நோய்களை உண்டாக்கும் என்பதைச் சங்க காலத்தே அறிந்துள்ளார். இதனை வரால்மீனின் உயிர்ப் போராட்டத்தில் புலப்படுத்தியது தெரிகிறது. இது அவரது சமூக அக்கறையுடைய மருத்துவ அறிவாகவும், தொலை நோக்குப் பார்வையின் திறனாகவும் புலப்படுகிறது.

**இயற்கை நலனழிக்கும் கல்லினியாக்கம்**

காதல் வெளிப்பட்டுத் தோன்றிய அலரால் செவிலி உரைத்த கடுஞ்சொல், விசையோடு செல்லும் கவண்கல்லின் இயக்கமாய் வெளிப்படுகிறது.

இக்கல், வேங்கையின் பூக்களைச் சிதறி, தேனடையைத் துளைத்து, மாங்கொத்துக்களை உழுக்கி, குலையுடைய வாழைமடலைக் கிழித்துப் பலாப்பழத்துள் தங்குகிறது. இப்பதிவில் இயற்கையின் மிகுந்த வளமும், அவை பயன்பாடற்று அழிவதும் உரைக்கப்பட்டுள்ளது. இதனை,

> **"இடியுமிழ் பிரங்கிய விரவு பெயல் நடுநாட்**
> **..............................................**
> **கடுவிசைக் கவண்ணயிற் கல்கை விடுதலின்**
> **..............................................**
> **பலவின் பலத்துள் தங்கும்" (குறி.கலி.41:5-16)**

என்னுமடிகளில் உணர்த்துகின்றன.

இவ்வியற்கை இயக்கங்கள் தலைவியை இற்செறித்தலால் ஏற்படும் துன்பங்களைக் குறிப்பிடுகின்றன. அவை தலைவனைக் கண்டு இன்புறாத நிலை, நீடாரல் நிகழாதமை, தோழியின் வருத்தம், நெஞ்சத்தினை வருத்தி நிற்கும் கடுஞ்சொல் என்பனவற்றைப் புலப்படுத்துகிறது. உள்ளுறைச் செயல்களுக்குக் குறிஞ்சியின் இயற்கை வளம் துணைநிற்பதை உணர்த்துகிறது.

கவண்கல்லின் இயக்கம் இயற்கை வளங்களைச் சிதைப்பது போல் கடுஞ்சொல் தலைவியின் உள்ளத்தைத் துன்புறுத்துவது உள்ளுறையாய்ச் சுட்டப்பட்டுள்ளது. இது இயற்கையோடு இயைந்த இயக்கத்தை உள்ளத்தோடு ஒப்புநோக்கும் ஒத்துணர்வாய்ப் புலப்படுகிறது.

**பொய்மைப்புலி**

புன்செய் கொல்லையில் தினைப்பயிரை விலங்குகள் அழிக்காதிருக்க, புனவர் பொய்யான பெண் புலியைச் செய்து வைத்துள்ளனர். அதன் கழற்சிக்காய்க் கண்கள் உண்மைப்புலி போல் உருக்கொள்கிறது. மிளகுக் கொடி படரும் கற்குகையில் வாழும் வலிய ஆண் புலி அப்பெண்புலியைக் கூடித் தினைப்புனத்திடையே உள்ள மன்றலில் தன்காமவருத்தத்தை நீக்குகிறது. தலைவியின் காதலுள்ளம் வருந்துவதை உணராத தலைவன், இன்ப நுகர்வின் மீதான விருப்பத்தை மட்டும் கருத்தாகக் கொண்டுள்ளான் என்பதை உள்ளுறுத்துகிறது. இதனை,

> **"................................... கறிய**
> **கண்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ**
> **புன்புலம் வித்திய புனவர் புணர்த்த**
> **மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து**
> **மன்றில் பையு டீருங்**
> **குன்ற நாடன் ..."      (ஐங்.246:1-6)**

என்பது கபிலரின் பாடலால் உணரமுடிகின்றது.

இங்குத் தலைவியானவள் என்பு தோல்போர்த்த உடம்பாகவே எண்ணப்பட்டுள்ளாள். அவளது அன்புள்ளம் புறக்கணிக்கப்பட்டுள்ளது என்பதைத் தெளிவுபடுத்தி விரைவில் மணந்துகொள்ள வலியுறுத்தப்படுகிறது. இக்கருத்தை "காமத்தால் மட்டும் நம்மை விரும்பி இக்களவின்கண் நம்மை மருவி இன்புறுகிறான்"[116] என்னும் உரையாலும் உணரமுடிகின்றது. இது காதல் உள்ளத்தைக் காயப்படுத்தும் வன்புணர்வாய்க் கருத இடம்தருகிறது.

**அலைக்கு அஞ்சும் கடற்குருகு**

சிறைப்புறமுள்ள தலைவனிடம் தலைவியின் வருத்தம் நீக்கி விரைவில் கற்புமணம் வேண்டப்படுகிறது. புன்னைமரக்கிளையிலுள்ள கருவுற்ற நாரை கடலோசைக்கு அஞ்சுவது உவமிக்கப்பட்டுள்ளது. இவ்வியற்கைப்புனைவில் நீர் வாழ்ப்பறவையான நாரை அலையோசைக்கு அஞ்சுவது இயல்பில்லாதபோதும், தன் கடுஞ்சூலால் அஞ்சுவது புலனாகிறது. இது தலைவியின் களவொழுக்கம் இயல்பான நிலையிலிருந்து மாறுபட்டுச் சூலுற்றதைப் புலப்படுத்துகிறது. இதனை,

> **“நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு**
> **உலவுத்திரை யோதம் வெரூஉம்**
> **உரவுநீர்ச் சேர்ப்பனொடு மணவா ஊங்கே”** (நற்.31:10-12)

என்னும் நக்கீரரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

நாரையின் அச்சம் காதல் கொண்ட தலைவிக்கும், கடலோசை அன்னையின் கடுஞ்சொல்லிற்கும் உள்ளுறையாய் அமைந்துள்ளன. இது இயற்கைக்கும் மனித உள்ளத்திற்குமான தொடர்பை உணர்த்துகின்றது. “புறக்காட்சிக்கும் அக உணர்வுக்கும் இடையே நடைபெறும் பரிமாற்றம் மிக நுட்பமானது, மாயம் நிறைந்தது. எனினும் புறமும் அகமும் கலக்கும் இக்காட்சி இடையறாது நடந்து வருகின்றது என்பது உண்மை”[117] என்னும் மு.வரதராசனார் கருத்தால் வலுப்பெறுகிறது.

**காந்தள் மலரக் காத்திருக்கும் தும்பி**

கபிலர் **தேனுண்ண விரும்பிய தும்பி, தேனிருக்கும் இடம் நோக்கிச் செல்லாமல் மலர் மலரும் வரைக் காத்திருப்பதைக் குறித்துள்ளார். இது காதல் மனத்தின் உறுதிப்பாட்டையும் திருமணத்திற்காகக் காத்திருத்தலையும் கூறுகிறது.** இதனை,

> **“தகையவர் கைச்செறிந்த தாள்போலக் காந்தள்**
> **முகையின்மேல் தும்பி யிருக்கும் பகையெனின்**
> **கூற்றம் வரினுந் தொலையான்றன் நட்பார்க்குத்**
> **தோற்றலை நாணாதோன் குன்று”** (குறி.கலி.43:8-13)

என்பதனால் பகைவனுக்குக் கூற்றுவனாகவும், தம்மை உறவாகக் கொண்டவருக்காகத் தோற்றலையும் நாணாத செயலாய் எண்ணி ஏற்பவன் என்பது புலப்படுகிறது. இந்நிகழ்வு சுற்றத்தாரிடம் மனநெகிழ்வை ஏற்படுத்தி விரைவில் திருமணத்திற்கான ஒப்புதலைப் பெற்றுத்தரும் காத்திருத்தலைப் புலப்படுத்துகிறது. **உணர்ச்சி வயப்பட்ட களவுக் காதலினும், உறுதியோடு கற்பு மணத்திற்கான காத்திருத்தலிலும், உறவுகளைப் பேணும் உயர்குணத்திலும் புலப்பாட்டு உத்தியின் கற்பனைப் பதிவாய்த் தந்த கபிலர் ‘முகையின்மேல்’ தும்பியிருப்பதைக் காட்சிப்படுத்தியுள்ளார்.** இது இயல்பு மாற்றமாக அமைந்துள்ள போதும், உறவுகளைப் பேணும் சமூகநலனைக் கருத்திற்கொண்டுள்ளது.

**மிகுதியான மீன் வேட்டம்**

நெய்தல் நிலத்தவர் பகலிலும், இரவிலும் மீன் வேட்டைக்குச் செல்வர். நள்ளிரவில் ஒள்ளிய விளக்கொளியில் ஈட்டியை எறிந்து மீன்களைப் பிடிப்பது வழக்கம் எனத் தெரிகிறது. அவ்வாறுப் பிடித்த மிகுதியான மீன்களைப் புன்னைமர நிழலில் குவித்து, தேன்மணமுடைய தெளிந்த கள்ளையுண்டு உறவோடு மகிழ்ந்துள்ளனர். இதனை,

**"திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ**
**நடுநாள் வேட்டம் போகி வைகறைக்**
**கடல்மீன் தந்து கானல் குலைஇ**
**ஓங்கிடும் புன்னை வரிநிழல் இருந்து**
**தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப்**
**பெரிய மகிழும் துறைவன்" (நற்.388:4-9)**

என்று மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். தலைமகன் தேரோடு வேற்று நாட்டுக்குச் சென்று மிகுந்த பொருட்களைக் கொண்டு வந்து முன்றிலே குவிப்பான். உறவுகளோடு மகிழ்ந்து உள்ளத்தால் பிரித்தறியாத தலைவியை மணந்து இன்புறுவான் என்னும் உள்ளத்து உறுதி புலப்படுமாறு உள்ளுறையாய் இடம்பெற்றுள்ளது.

**பெரும்பொருள் வேட்டம்**

வினைமுடித்து மீளும் தலைவன் தலைவியோடு இன்புற்று இருந்தான். தன்னிலை உணரும் உள்ளப்பதிவாய் மகிழ்வோடு இவ்வுள்ளுறை இடம்பெற்றுள்ளது.

நுணல், ஈயல், முயல் இவைகளையெல்லாம் வேட்டைப் பொருளாகக் கொண்டு வந்த வேட்டுவன் மனநிறைவால் கள்ளுண்டு மகிழ்கிறான் என்னும் நிகழ்வு,

**"உடும்பு கொரீ வரிநுணல் அகழ்ந்து**
**நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி**
**எல்லுமுய லெறிந்த வேட்டுவன் ……**
**…………………………………………**
**இருமடைக் கள்ளின் இன்களி செருக்கும்" (நற்.59:1-5)**

என்பதனால் அறியப்படுகிறது. இது பெரும்பொருள் ஈட்டிவரும் தலைவன் தன் மனநிறைவோடு தலைவியுடன் இன்புற்று மகிழ்வானென்பதைக் கபிலரின் பாடல் உள்ளுறுத்துகிறது.

**மணற்வீடு சிதைத்தல்**

அலைக்கும் கடலருகே கட்டப்படும் மணல்வீடு சிதைவது இயல்பானது. இதனை மரபுசார் ஆற்றலோடு ஒப்பிட்டுக் கடலை மூத்தோராகவும், மணல் வீடு செய்த சிறுவர்களை இளையோராகவும் மதுரை மருதன் இளநாகனார் குறிப்பிட்டுள்ளார்.

சிறந்த அறிவினை உடைய தலைவன், சிறியவர்களான எம்மை வருந்தச்செய்தல் முறையல்ல என்னும் பொருள் உணர்த்தப்படுகிறது. இது களவின்பத்திலேயே விருப்பமுடைய தலைவனிடம் தலைவி இற்செறிக்கப் பட்டதை உணர்த்தி அவளை மணந்துகொள்ள வேண்டுவதாய் அமைக்கப் பட்டுள்ளது. இதில் கடலலைத்தல் தலைவனின் செயலாகவும், தலைவியின் வருந்தும் காதல் மனம் சிற்றில்லாமாகவும் புலப்படுகிறது. இதனை,

**“மூத்தோர் ரன்ன வெண்டலைப் புணரி**
**இளையோ ராடும் வரிமனை சிதைக்கும்**
**தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறை”**
**(மதுரை மருதனிள நாகனார்.அகநா.90:1-3)**

என்பது உணர்த்தும். கடலின் மூப்பு, வளங்கள், உலக இயக்கத்தின் உறுதிப்பாடு எனும் பலதிறத்து நற்குணங்களை உடைய தலைவன் என்பதால் தலைவியின் வருத்தம் நீக்குவதற்கு உரியவனாகி விரைவில் மணங்கொள்ள வேண்டுமென்பது உணரக்கிடைக்கின்றது.

இயற்கை நிகழ்வு மனத்தை வளப்படுத்துவதற்கானதாகவும் அதன் மாறுபட்ட சூழல் உருவாக்கம் மனத்தைக் காயப்படுத்துவதாகவும் சுட்டப்பட்டுள்ளது. இதனால் இயற்கை பெரும்பான்மையும் உலக இயக்கத்தை நல்வழிப்படுத்துவதும், அதனைத் தவறாகப் பயன்படுத்த விளையும் உருவாக்கமே பல்வேறு சீற்றங்களுக்கும் அழிவிற்கும் காரணமாயுள்ளது என்பதும் பெறப்படுகிறது.

சங்கப்பாக்களுள் இடம்பெறும் உள்ளுறை உவமை கூற்றுக்குரியோர் அறிந்த கருப்பொருட்களாலும், சூழலுக்கு ஏற்ற அதன் நிகழ்வுகளாலும் சுட்டப்படுகிறது. **அகவாழ்வின் குறைகளை நிறைசெய்யும் நிகழ்வுச் சுட்டலாய் உவமையில் இயற்கை வெளிப்படுகிறது. இது பாடற்பொருளுக்கேற்ற சூழலாலும், மரபு சார்ந்த கருப்பொருளின்**

**செயலாலும் உய்த்துணரப்படுகிறது. இவ்வாறு நீதிக்கதைகளால் உணரும் அறக்கருத்துக்களைப் போன்றே சூழலை உணர்ந்து, தன்னெறிப்படும் இல்வாழ்விற்கான வழிகாட்டலாய் உள்ளுறை உவமையின் பயன்பாடு தெரிகிறது.**

இவ்வாறு பொருள் விளக்கப் பொதிவைப் பெற்றுள்ள உள்ளுறையை வ.சுப.மாணிக்கம் அவர்கள் "சுருங்கச் சொல்கைக்கு ஆற்றலுண்டு, கேட்பார் மனந்தீர்க்கும் கூர்மையுண்டு. ஆதலின் உள்ளுறைப் பண்பட்ட தமிழ் இலக்கியக் கருவி, தலைவனை இடித்துரைக்குங்கால் இக்கூர்ங்கருவியை இலக்கியர்கள் ஆளுவர்"[118] என்கிறார்.

இத்திறன்மிகு கருவியில் இடம்பெறும் உவமை மக்கள் வாழும் இயற்கைச்சூழலைப் புலப்படுத்துகிறது. இவ்வுள்ளுறைக் கருத்து தனிமனித ஒழுக்கத்தை நிறைசெய்ய உதவுகிறது. இதனால் உண்டாகும் நேர்படும் வாழ்வு சமூகநலனைக் கட்டமைக்கிறது.

**இறைச்சியின் இயக்கத்தில் இயற்கை**

உள்ளுறை உவமையில் கருப்பொருட்களைத் தக்க நிகழ்வுகளோடு காட்சிப்படுத்தும் உவமையாய் இயற்கை இடம்பெறுகிறது. இறைச்சிப்பொருளில் பறவை, விலங்குகளின் அன்புறு நிகழ்வுகளைச் சுட்டுவதாய் இயற்கை காணப்படுகிறது. இறைச்சி என்பது கருப்பொருட்களுள் பறவை, விலங்குகள் அவற்றின் அன்புறு நிகழ்வுகளைச் சுட்டும் எனவும், அவ்வாறான பதிவுகளில் இடம்பெறும் 'கடுவன்', 'முதுமகள்' போன்றவை உயர்திணையைக் குறிக்காமல் அஃறிணையைச் சார்ந்தே வருமென்பதும் தெரிகிறது. இதனை,

> **"இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்**
> **இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா**
> **நிலத்துவழி மருங்கில் தோன்ற லான"[119]**

என்பதனால் அறியமுடிகின்றது. இது அஃறிணை உயிர்களின் இயக்கமாய், நிலங்களுக்கேற்ற கருப்பொருளாய்ப் புலப்படுகிறது.

**சங்கப்பாக்களில் இறைச்சி**

இறைச்சி என்னும் சொல் சங்கப்பாக்களுள் இரண்டிடங்களில்இடம்பெற்றுள்ளது.

**"........................................... மாலை நீ**
**இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதே செய்தாய்மன்**
**வீழுநர்க்கு இறைச்சியாய் விரல் கவர்பு இசைக்கும் கோல்"[120]**

என்னுமடிகளுள் இன்புற்றவருக்கு வேண்டியதெல்லாம் செய்யும் மாலைப்பொழுதாகவும், இன்பம் தரும் தலைவியின் காதலாகவும் யாழிசையாகவும் இறைச்சி புலப்படுகிறது. இதனையே "இறைச்சி என்பது விரும்புவார்க்கு நேயமாகிய அன்புணர்ச்சியைத் தருவதையே சுட்டும்"[121] என்று தமிழண்ணல் குறித்துள்ளார்.

தொல்காப்பியத்தில் இறைச்சி என்பது உரிப்பொருளின் புறத்தே தோன்றும். இவ்வாறு தோன்றும் இறைச்சிப் பொருளில் பறவை, விலங்குகளின் செயல்களோடும், தலைவனது நாடு நகர் குறித்த அடைமொழியாக வரும் பாடல்களில் சிறப்பை மட்டுமே உணர்த்தி நிற்கும் என்பதும் இளம்பூரணர் உரையால் அறியப்படுகிறது. **பொருள்தேடிப் பிரிந்த தலைவன் உறுதியாகத் திரும்பிவிடுவான். சென்றவிடத்திலுள்ள பறவை, விலங்குகளின் அன்புறு நிகழ்வுகள் அவனைத் தம்பால் கொண்டுவரும் என்றும் வலியுறுத்தும் புலன் ஒத்த உணர்ச்சிகளின் வெளிப்பாட்டுப் புனைவுகள் இறைச்சியாகும்.** இதனை,

**"இறைச்சி தானே உரிப்புறத்ததுவே"[122]**
**"இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே"[123]**
**"அன்புறு தகுந இறைச்சியுள் சுட்டலும்**
**வன்புறை ஆகும் வருந்திய பொழுதே"[124]**

என்னும் நூற்பாக்கள் உணர்த்துகின்றன. பொருள் தேடிப் பிரிந்த தலைவனுக்கு இடைச்சுரத்தில் அவன் காணும் பறவை, விலங்குகளின் மிகுதியான அன்புப் புலப்பாடுகள், தம் காதலியை நினைவுறுத்துவதும், விரைவில் வீடு திரும்பத் தூண்டுவதுமாய் இறைச்சிப் பொருள்கொள்ளக் கிடைக்கின்றது. இதனைத் தமிழண்ணல், "தமிழர்கள் மிகத் தொன்மையான காலத்தில் இயற்கையுடன் இயற்கையாய் ஒன்றி வாழ்ந்ததை (இறைச்சி) இக்கோட்பாடு காட்டுகிறது"[125] என்றும், "இறைச்சி என்பது ஓரறிவு முதல் பறவை, விலங்குகளைச் சிறப்பாகக் குறித்தது"[126] என்றும் பொருள் உணர்த்தியுள்ளமையால் அறியமுடிகின்றது.

**இறைச்சியில் பறவை விலங்குகளின் அன்புடைய நிகழ்வுகள் சுட்டப்படுகின்றன. இது தலைவிக்குப் பிரிவுத்துயரை மிகுவிப்பதாகவும், தலைவனுக்குத் தம் காதல் உணர்வைத் தூண்டுவதாகவும் அமைந்துள்ளன. இவ்வாறு கருப்பொருட்களின் உயிரோட்டமான இயக்கங்கள் இறைச்சிப் பொருளில் இடம்பெற்றுள்ளன.**

**சிறுவெண் காக்கை**

நக்கீரர் இதனைக் கழியோடு தொடர்புபடுத்தி உரைத்துள்ளார். இதனால் இச்சிறுவெண்காக்கை நெய்தல் நிலத்தில் வாழுமென்பது அறியப்படுகிறது. இதன் அன்புறு நிகழ்வாய் சிறிய வெண்காக்கையொன்று குளிர்ந்த கழியில் துழாவி செவ்விறாலைப் பிடிக்கிறது. அதைத் தானுண்ணாமல் தன்பெடைக்கு ஊட்டுகிறது. இதனை,

> **"சேயிறா வெறிந்த சிறுவெண் காக்கை**
> **பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்**
> **தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉர் சுரக்குஞ்**
> **சிறுவீ ஞாழல் துறை" (நற்.31:2-5)**

என்னும் கபிலரின் பாடல் உணர்த்தும்.

சிறுவெண் காக்கையின் அன்புடைக்காதல், தலைவியின் காதலை மிகுவித்து வருத்துவதாய் இடம்பெற்றுள்ளது. இது தலைவியைப் பிரிந்துள்ள தலைவன் தன்னையழைத்து இன்புறவில்லை என்னும் ஏக்கத்தை வெளிப்படுத்தும் இயற்கைப் பதிவாய்ப் புலப்படுகிறது.

**இரங்கும் மனத்திறம்**

பாலை நிலத்து நிகழ்வுகள் அன்பின் வெளிப்பாடாகவே அமைந்துள்ளன. அந்நிலவாழ் விலங்கின் அன்புறு உள்ளத்தைப்படைத்து, அது தன் காதலுள்ளத்தால் இரங்குவதை மருதனிளநாகனாரின்

> **"................................... புன்கால்**
> **சிறியிலை வேம்பின் பெரிய கொன்று**
> **கடாஅக் செருக்கிய கடுஞ்சினை முன்பில்**
> **களிறுநின்று இறந்த நீரல் ஈரத்துப்**
> **பால்வீ தோல்முலை அகடுநிலஞ் சேர்த்திப்**
> **பசியட முடங்கிய பைங்கண் செந்நாய்**
> **மாயா வேட்டம் போஇய கணவன்**
> **பொய்யா மரபில் பிணவுநினைத்து இரங்கும்" (நற்.103:1-8)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. பாலை நிலத்திலிருந்த வேம்பின் கிளைகளும் யானையால் முறித்துப் போடப்பட்ட நிழலில்லா வெம்மை சுட்டப்படுகிறது. இத்தகைய நிலத்தில் பெண்செந்நாயின் பசிக்கு உணவுதேடிச் சென்ற ஆண்செந்நாய் தன் வருத்தத்தினும் தன் இணையின் பிரிவாலான வருத்தத்தை நினைத்துத் தவிக்கிறது. இது தலைவியைப் பிரிந்து பொருள்தேடித் தலைவன் செல்கிறான். அங்குப் பொருட்தேடலில் ஏற்படும் வருத்தத்தினும் அவளது நினைவாலேயே மிகவும் வருந்துகிறான். இது உள்ளத்தின் உணர்வு வெளிப்பாடாகப் புலப்படுகிறது. இப்பாடலின் கருப்பொருளான செந்நாய் பெரும்பான்மை பாலைத்திணைக்கும் சிறுபான்மை குறிஞ்சித்திணைக்குமுரியது. கூட்டமாகச் சென்று புத்திக்கூர்மையாய் மிகப்பெரிய விலங்குகளையும் வேட்டையாடும் வலிமையுடையது. இவ்வாறு உடலாலும், உள்ளத்தாலும் வலிமையுடைய விலங்கின் இரக்கக்குணம் இதன் சிறப்பை உணர்த்துகிறது. இதனை,

**“ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாயேற்றை**
**மறிபுடை மான்பிணை கொள்ளாது கழியும்”[127]**

என்பதாலும்,

**“குருளைப் பன்றி கொள்ளாது கழியும்”[128]**

என்பதாலும் அறியமுடிகிறது. செந்நாய் குட்டி ஈன்ற தன் இணையின் கடும்பசி போக்க வேட்டைக்கச் செல்கிறது. அங்குக் குட்டிகளோடு இருக்கும் விலங்குகளைக் கொல்லத் தயங்குகிறது. இப்பதிவில் உணவுக்கான வேட்டையிலும் குட்டிகளின் பாதுகாப்பை விரும்பும் உயர்ந்த பண்பைப் புலவர் சுட்டியுள்ளார்.

**கன்முகை வேங்கை மலர்**

குறிஞ்சி நிலக் கருப்பொருட்களுள் மரங்கள் பேரிடம் பெருகின்றன. வேங்கை, சாந்தம், அகில் போன்ற மரப்பதிவுகள் இடம்பெற்றுள்ளன. வேங்கை மரம் வேங்கைப்புலியோடு ஒப்புநோக்கிப் பல பதிவுகளில் இடம்பெற்றுள்ளன. கற்பாறையில் தோன்றிய வேங்கை மரம் தானும் பருவமுற்று மலரும் நாட்டினன். எனினும் ஈரமற்ற உள்ளத்தினனாக தலைவன்மீது அன்பு கொண்டுவிட்டதால் எமக்குரிய மனையாள் என்னும் உரிமை பெற்றுவாழ விழைகிறோம் என்று வற்புறுத்தும் இறைச்சியின் பொருளாய் இயற்கை நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. இதனை,

“மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
..........................................
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரு
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே” (ஐங்.276:4-6)

என்னும் கபிலனின் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதில் தலைவியின் பேரன்பைப் புலப்படுத்தி இல்லறவாழ்வின் பெரும்பயனைப் பெறுவதாய் இறைச்சி இடம்பெற்றுள்ளது.

மந்தியினும் கடுவனே பொறுப்பற்ற குறும்புடையதாகச் சுட்டப்படுகிறது. இளந்தளிர்களை விரும்பியுண்ணும் கடுவன் குளிர்ச்சியும், நறுமணமும் கொண்ட மலையில் வளரும் நறவங்கொடியைக் கொண்டு உயர்ந்த மலையில் படியும் இளமழையை அடிக்கும் நாடன் எனக் குறித்துள்ளது. இது கூடிமகிழுந்து வாழும் இல்லற வாழ்வை எண்ணாமல் களவு வாழ்க்கையை மேற்கொண்டு வருந்த வேண்டாம் என்னும் குறிப்பாய் இறைச்சியில் இயற்கையின் இயக்கங்கள் காணப்படுகின்றன.

**பிடியுண்ணத் தளிர்தரும் களிறு**

யானையின் வாழ்க்கைமுறை பலநிலைகளில் மனிதப்பண்புகளோடு ஒத்துள்ளது. ஆதலால் பழந்தமிழ்ப்பாக்களுள் யானை பேரிடம் பெறுகிறது. பிடி மீது களிறு கொண்டுள்ள அன்பை மதுரை மருதனிளநாகனாரின்,

“புன் தலை மடப்பிடி உணீஇயர், அம்குழை
நெடு நிலை யாஅம் ஒற்றி நனை கவுள்
படி ஞிமிறு கடியும் களிரே” (அகநா.59:7-8)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

யானைகளின் விருப்பமான உணவில் யாமரத்தளிர்களும் உண்டு. உயரத்திலுள்ள இளம் தளிர்களைப் பெண் யானை உண்பதற்கு ஏற்றவாறு ஆண் யானை மரத்தின் கிளைகளை வளைத்துத்தருகிறது. இந்நிகழ்வைக் காணும் தலைவன் தலைவிமீது கொண்டுள்ள காதலால் விரைந்து வருவான் என்னும் அன்புறு நிகழ்வைச் சுட்டும் இறைச்சிப் பதிவாக அமைந்துள்ளது.

பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள் இடம்பெற்றுள்ள இயற்கைப் புனைவுகள் யாவும் வாழ்வியல் பொருளின் நற்கூறுகளை உணர்த்துவன.

அகப்பொருளுக்கான நல்வாழ்வை நயமாகச் சுட்டுவன. இவ்வாறான உள்ளுறை, இறைச்சியின் பயன்பாட்டையும், சிறப்பையும் இரா.இளங்குமரனார் "உள்ளுறையும், இறைச்சியும் பழந்தமிழர் ஆழங்கால் பட்ட ஆய்வு வழியே கண்டெடுத்த வயிரக் கட்டியும் பவளப்பாறையும்"[129] என்றுரைத்துள்ளது பொருந்துகிறது.

**கட்புலனாகும் காட்சிகள்**

சங்கப்பாடல்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் புலனாகும் பல்வேறு இயற்கைக் காட்சிகளாகக் காணப்படுகின்றன. படைப்போரின் கலையார்வம், புலப்பாட்டுத்திறன், பொருள் மாறாத வெளிக்கொணர்வு எனப் பல நிலைகளில் காலங்கள் கடந்தும் மாறாக் காட்சிகளாகப் பல பாடல்கள் புலப்படுகின்றன. இவை ஓவியத்தினும் சிறந்த பொருளை உணர்த்துகின்றன. எழுத்தினும் சிறந்த காட்சிகளைப் புலப்படுத்துகின்றன. சங்கப்பாக்களுள் இடம்பெறும் இத்தகைய காட்சிகளின் நிலைத்த தன்மைக்குப் பெருந்துணையாய்த் திகழ்வது இயற்கைப் பொருட்களும் அதன் இயக்கங்களுமேயாகும். இவ்வியற்கை இயக்கங்கள் மனித மனத்தை ஆள்வதோடு, வாழ்வைச் செம்மைப்படுத்தும் கருத்தாக்கச் செயல்களாகவும் காட்சி தருகின்றன.

**மயிலின் ஆடலரங்கு**

குறிஞ்சிக் கருப்பொருட்களில் மயில், கிளி, யானை, குரங்கு இவற்றின் உருவம், திறன், செயற்பாடுகளால் காணுந்தோறும் மகிழ்வைத் தருவனவாகும். இவைகளுள் யானை, குரங்கு, கிளி முதலியன ஆறறிவின் கிளைப்பிறப்பாய் நல்லிணக்கத்தோடு மனதை ஆளும் இயல்புடையன. இவை பல பாடல்களுள் இயற்கையின் இயக்கம், இசை, ஓவியம், நுண்கலைகள் போன்ற பல்வேறு காட்சிகள் இணைந்து இயல்பு மாறாத இயற்கைப் புனைவுகளாய் அமைந்துள்ளன. சில கற்பனை வளத்தால் சற்று மாறுபட்டபோதும் உண்மை நிலையினின்று மாறுபடாத புனைவுகளாய் காணக்கிடைக்கின்றன. கபிலரின் பாடலில் உருவாக்கப்படாத இயற்கை அரங்கும், பயிற்றுவிக்கப்படாத இசையுமாய் மயிலின் தளர்நடை கற்குந்தோறும் புலப்படும் காட்சியாய்ப் படைக்கப்பட்டுள்ளது. இதனை,

**"பழமிளகு உக்க பாறை நெடுஞ்சுனை**
**முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்**
**புள்ளறி பிரசமொடு ஈண்டில் பலவின்**
**நெகிழ்ந்துரு நறும்பழம் விளைந்த தேறல்**
**நீர்செத்து அயின்ற தோகை வியல்ஊர்ச்**
**சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி**
**அரிக்கூட்டு இன்னியம் கறங்க ஆடுமகள்**
**......................................**
**கயிறுஊர் பாணியின் தளரும் சாரல்"** (குறி.பா.187-194)

என்னும் அடிகளால் அறியமுடிகின்றது.

நிகழ்வுக் களமான குறிஞ்சியின் கருப்பொருளாய் மிளகு பழுத்துப் பாறையில் உதிர்ந்துள்ளது. அருகிலுள்ள சுனை நீரில் அது கலக்கிறது. நன்கு பழுத்துக் கனிந்த மாம்பழமும், நழுவிய மாம்பழத்தால் சிதைவுற்ற தேனடையிலிருந்து தேனும் வந்து கலக்கிறது. இவ்வாறாய் **"பல்சுவை கலந்த சுனைநீரைப் பருகித் தாகம் தணிந்த மயிலொன்று தள்ளாடி மென்னடை பயில்கிறது. இந்நடைக் கழைக்கூத்தில் விறலியின் நடை போன்றுள்ளது"** என்றுரைத்து அக்காட்சியை அப்படியே உணர்த்துகிறார். இது காதல் கொண்ட தலைவியின் வருந்தும் மனத்தைப் புலப்படுத்துகிறது.

**இசையரங்கம்**

களவுக் காலத்தில் தலைவனின் வரவு தடைபட்டதால் தலைவி வருந்துகிறாள். தோழியிடம் அவன் நாட்டின் வளமையைக்கூறி, அறத்தொடு நிற்க வேண்டுவதாய் தளர்நடை மயிலின் இசையரங்கம் புலனாகிறது. இதனை,

**"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்**
**கோடை யிவ்வளி குழலிசை யாகப்**
**பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை**
**தோடமை முழவின் துறைகுர லாகக்**
**கணக்கலை இருக்கும் கருங்குரல் தூம்பொடு**
**மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக**
**இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து**
**மந்தி நல்லவை மருள்வன நோக்கக்**
**கழைவளர் அடுக்கத் தியலியா டும் மயில்**
**விழவுக்கள விறலியில் தோன்றும் நாடன்"** (அகநா.82:1-10)

என்னும் கபிலரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. **மலைமூங்கிலில் அமர்ந்து அசைந்தாடும் மயிலை விழாக்கால விறலியோடு ஒப்பிடும்**

**புலவர், ஆடலுக்குத் தேவையான குழலிசை, முழவொலி, பெருவங்கியம், யாழிசை போன்றவற்றை இயற்கை அரங்கிலே பெறுகிறார். இந்நிகழ்வைக் கண்டு மகிழும் கலை ஆர்வலர்களாய் மந்திகளைப் படைத்துள்ளார்.**

இவ்வாறு இயல்புமாறாத இன்னிசை ஆடலரங்கு இயற்கையிலிருந்து படைத்தாளப்பட்டுள்ளது. வண்டுகள் துளைத்த மூங்கிலில், காற்றின் குழலிசையும்; மலையிலிருந்து விழும் அருவியோசையில், முழவினிசையும்; கலைமான் கூட்டத்தின் குரலொலியில் பெருவங்கியமும்; மலைப்பூஞ்சாரலில் மதுவுண்டு மகிழும் வண்டுகளின் சிறகசைவில் யாழிசையும் என்பனவாய் இன்னிசை அரங்காகப் புலப்படுகிறது.

இவ்வாறு கபிலர் கண்டுணர்ந்த மனமகிழ்வை இப்பாடலில் இயல்பு மாறாமல் கற்போனுக்குப் புலப்படுத்துதல் பெறப்படுகிறது. இச்சொல்லோவியத்தின் திறத்தை ச.மெய்யப்பன் “கபிலர் காட்டும் கவிதை ஓவியங்கள் எவ்வளவு கற்பனை மெருகுடன் தீட்டப்பட்டு ஒளி வீசிய போதிலும் உண்மை இயல்பினின்றும் சிறிதளவுகூடப் பிறழ்ந்து காணப்படவில்லை”[130] என்பதும் சாலப்பொருந்துகிறது. இத்தகைய ஆடலரங்கு பிற்காலத் தமிழ் இலக்கியங்களிலும் தொடர்ந்து பதிவுசெய்யப்பட்டுள்ளதை,

> **“அருவிய முருகிய மார்ப்பப் பைங்கிளி**
> **பருகிய தமிழிசை பாடப் பொன்மயில்**
> **அருகிய சிறைவிரித் தாடப் பூஞ்சினை**
> **மருவிய குரங்கினம் மருண்டு நோக்குமால்”[131]**

என மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனாரும், இராவண காவியத்தில் புலவர் குழந்தையும் பதிவு செய்துள்ளமைக்கு இச்சங்கப்பாக்கள் வித்தாகவுள்ளன. **சங்கப் பாக்களின் பாடுபொருளும் இயற்கை வளமும் அதன் பின்வரும் பதிவுகளில் குறைந்து தெரிகிறது. இது புலவர்கள் புலப்படுத்தும் ‘அருகிவரும் இயற்கையின் நிலையை’ உணர்த்துகிறது.**

இயற்கையின் இயக்கத்தில் பல்வேறு இசை நுட்பங்களை உணர்த்திய கபிலரைப் போலவே செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் மயிலின் அகவலை ஊதுகொம்பின் இசையொலிக்கு ஒப்பிடுகிறார். இதனை,

**“பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
கானமஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
அயிர் யாற்றடைகரை வயிரின் நரலும்”**[132]

என்பது உணர்த்தும்.

**தாய்மையைப் போற்றிய களிறு**

நம் காட்டின் பெரிய விலங்கு யானை. காதல், வீரம், கூடிவாழும் குடும்ப உறவுமுறை, இசையின்பம், இறைத்தொண்டு என்று யானையின் பல திறன்கள் சங்கப்பாக்களால் அறியப்படுகின்றன. இத்தகு சிறந்த குணங்களால் இது மனிதனின் கிளைப்பிறப்பாகவும் சுட்டப்படுகிறது.

கபிலரின் பாடலில் **களிறும், சூலுற்ற பிடியுமாய் இரண்டு யானைகளைக் காணமுடிகின்றது. பிடியின் பசி வருத்தம் நீக்க நினைத்த களிறு, பக்கத்துப் புனத்திலிருந்த கரும்பைக் கொண்டு வந்து உண்ணத் தருகிறது.** இதனை,

**“ஒடுங்கா எழில் வேழம் வீழ்பிடிக் குற்ற
கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கட் கரும்பின் கழைவாங்கும்” (குறி.கலி.40:25-27)**

என்னுமடிகள் தெரிவிக்கின்றன. இது தாய்மையைப் போற்றிய ஆணின் கடமையையும், மாறாத காதலையும் உணர்த்துகிறது. யானையின் பேரன்பை “ஆண்மையும் பெருமிதமும் உடைய களிறு தன் பிடிமீது கொண்டிருக்கும் அன்பிற்கு எல்லையே இல்லை”[133] என்று ச.மெய்யப்பன் கூறுகிறார். இது தலைவன் திருமணம் செய்து கொள்ள வருவதை உணர்த்தும் வாழ்வியல் நெறியாகப் பெறப்படுகிறது.

**பண்ணிசையால் பசிமறந்த யானை**

‘யானைப் பசிக்குச் சோளப்பொறி’ என்பதும் ‘யானை புக்கப் புலம்போல’ என்பதும் அதன் மிகுதியான உணவைச் சுட்டும் மொழிகளாகும். இத்தகைய பெரும்பசியுடைய யானை, கானவன் கள்ளுண்டு மகிழ்ந்திருந்த வேளையில் தினைப்புனத்துள் புகுந்தது. இதையறியாத கொடிச்சி குறிஞ்சிப் பண்ணிசைத்து மகிழ்கிறாள். பசியால் உணவுண்ணச் சென்ற யானை இந்த இசையால் மனங்கவரப்பட்டு நின்ற நிலையிலேயே உறங்கியது என்பதனை மதுரை இளம்பாளாசிரியன் சேந்தன் கூத்தனாரின்

**“பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்**
**குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது**
**படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென**
**மறம்புகல் மழகளி றுறங்கும்”** **(அகநா.102:6-9)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது. இதனை வேங்கடராமர் “தினைப்புனக் காவலையும் மறந்து அவள் பாடும் தேனினுமினிய பாடலைக் கேட்டு அப்பாடல் இன்பத்தால் பசியையுமறந்து நிற்கின்றது வலியயானை”[134] என்பது போல் **பசியை மறந்து இசையில் மயங்கிய யானை தன்னிலையுணராது சிற்பமாகக் காட்சி தருகிறது.** இவ்வாறு களவு வெளிப்பட்டதால் தடைபட்ட காதல் வேட்கையைப் புலப்படுத்தி விரைவில் திருமணம் செய்துகொள்ள வலியுறுத்தப்படுகிறது.

**திருமகள் ஓவியம்**

பழந்தமிழர் இறையச்சத்தில் இயற்கையான மரங்கள், ஐம்பெரும்பூதத்து இயற்கை என்பனவற்றை வழிபட்டனர். சிவன், திருமால், முருகன் எனக் கண்டும் வணங்கியுள்ளனர். அவ்வாறே கபிலர் தாம் கண்ட இயற்கைக் காட்சியைத் திருமகள் உருவமாகப் பதிவுசெய்துள்ளதைக் காணமுடிகிறது.

செங்குத்தான இருபாறைகள் எதிரெதிரே தோற்றமளிக்கின்றன. இருபுறமிருந்தும் அருவிநீர் கொட்டுகிறது. பாறைகளுக்கு இடையே ஓங்கி வளர்ந்த வேங்கை மரங்கள் பூத்துள்ளன. அம்மரங்களில் அருவி நீர் சொரிவதை,

**“எதிரெதி ரோங்கிய மால்வரை யடுக்கத்**
**ததிரிசை யருவிதன் அஞ்சினை மிசைவீழ்**
**முதிரிணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை**
**வாநுதல் எழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப்**
**புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்**
**திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல்வெற்ப”**
**(குறி.கலி.44:2-7)**

என்னும் பாடலடிகளால் அறியப்படுகிறது. இதனைக் கபிலர் தம் கற்பனையோடு இணைத்து, **இருமலைகளை யானையாகவும்; மலர்களோடு கொட்டுமருவியை, யானை பூவோடு சொரியும் நன்னீராகவும்; மையத்தில் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளையும் காட்சிப்படுத்துகிறார்.** இது இயற்கையோடு இயைந்த கற்பனையாய்க் காணப்பட்ட போதும் இதில்

மாறுபாடில்லாதத் திருமகளின் காட்சியைக் காணமுடிகிறது. இயற்கைப்படைப்பில் ஓங்கிய இருமலைகளும் தலைவன் தலைவியின் இரு சுற்றத்தாராகவும், இரு அருவிகள் வீழ்தல் இருவீட்டாரின் சிறப்புச் செய்தலாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. அடுக்கத்தில் சிறப்பிடம் பெறும் வேங்கைமரம் போல் தலைவி நின் இல்லத்தில் வந்து இன்புற வேண்டுமெனப் புலப்படுத்தி விரைந்து மணம் முடித்துக் கொள்ளத் தூண்டுகிறது. இக்காலத்தும் இல்லங்கள் தோறும் வீற்றிருக்கும் திருமகளின் ஓவியத்திற்கான திறவுகோலாகக் கபிலரின் இப்பாடல் காட்சி பெறப்படுகிறது.

**தந்தத்தின் வலிமை**

"ஒரு டன் எடையுள்ள மரத்துண்டை எளிதாகத் தூக்கவும், தும்பிக்கையை உயர்த்தி மோப்ப சக்தியை உள்வாங்கிக் கொள்ளவும், மரக்கிளையை வளைக்கவும், முறுக்கவும் தும்பிக்கை உதவுகிறது"[135] என்பதால் துதிக்கையின் பெரும்பயன்பாடு அறியப்படுகிறது. இவ்வாறு யானையின் வலிமைக்குத் துணைநிற்பது அதன் துதிக்கையும், தந்தமுமாகும். ஆண் யானையின் மேல்தாடையிலுள்ள இரு வெட்டுப்பற்கள் தந்தமாகும். இது மனிதர்களின் பேராசையால் யானையின் உயிரையும் மாய்க்கிறது.

**நெடிய மூங்கிலில் பூத்துள்ள மூங்கிலரிசியை உண்ண விரும்பிய யானை துதிக்கையால் எட்டுகிறது. அது முடியாமல் போக, துதிக்கையைக் கீழிறக்காமல் மீண்டும் முயற்சிக்க ஏதுவாய்த் தந்தத்தால் தாங்கி நிற்கிறது.** இதனை,

> **"நெற்கொள் நெடுவெதர்க்கு அணந்த யானை**
> **முத்துஆர் மருப்பின் இறங்குகை கடுப்ப**
> **........................................**
> **எல்பட வருதியர்..."  (குறி.பா.35-39)**

என்னுமடிகளால் அறியமுடிகின்றது. இது காதலின் உறுதிப்பாட்டைப் புலப்படுத்துகிறது.

"யானையின் உறுப்புகளில் தும்பிக்கையே முதன்மையானது. மூக்கும் மேலுதடும் இணைந்து ஒரு இலட்சத்து ஐம்பதினாயிரம் தசைநார்கள் உள்ளோட நாற்பதாயிரம் தசை வளையங்களில்

உருப்பெற்றுள்ளது யானையின் தும்பிக்கையென்று 1849 ஆம் ஆண்டு உடலியல் அறிஞர் **'குவியர்'** தெரிவித்த செய்தி கவனத்தில் கொள்ளத்தக்கது. ஆற்றல் மிகுந்த தசை நார்களால் வாய்க்கப்பட்ட யானைத் தும்பிக்கையின் எடை 140 கிலோவாகும்."[136] இதனைப் புத்திக்கூர்மையால் தந்தத்தில் தாங்கி, முயற்சியில் தளராத யானையொன்றைப் புலவர் காட்சிப்படுத்தியுள்ளார். இக்காட்சி **தளரும் முயற்சியினும், விடாமுயற்சி எளிதில் வெற்றியைப் பெற்றுத்தரும் என்னும் சமூகநலன் விளையும் கருத்தைப் புலப்படுத்துகிறது.**

**நேயமில்லா நெருஞ்சிமுள்**

பண்டை இலக்கியங்களுள் மலர்கள் தனியிடம் பெறுகின்றன. திணை மலர்கள், மூவேந்தரின் அடையாள மலர்கள், போருக்கான மலர்கள், காதலின் பேரின்ப நிகழ்வான மணநிகழ்விடங்களில் மலரும் வேங்கை மலர்கள் போன்ற பல்வேறு மலர்களும்,

> **"மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்**
> **வண்ண வண்ணத்த மலர்"**   **(குறி.பா.113-114)**

என்பனவாய்க் காணக் கிடைக்கின்றன. இவைகளுள் மங்கல நிறமோடு காணப்படும் நெருஞ்சி மலர், குறிஞ்சி மலர்த் தொகுப்பில் இடம்பெறாத போதும் சில இடங்களில் சிறப்புறு பதிவாய்க் காணப்படுகிறது.

அள்ளூர் நன்முல்லையார் தம் பாடலில் நெருஞ்சி மலரில் அழகைக் கண்டு மகிழ்ந்த நாம் அதனுள்ளுள்ள வருத்தும் முள்ளைக் காணவில்லை. அது புதிதாய்த் தோன்றியதல்ல பூவினுள்ளே பொதிந்துள்ளதாகும் என்று வாயில் மறுத்தலில் தலைவனைச் சாடுகிறார். கண்ணுக்கு இனியதாய்க் காணப்படும் நெருஞ்சி மலர் பின்னாளில் உள்ளத்தையும், உடலையும் வருத்தக்கூடிய முள்ளாகத் தோற்றம் பெறுகிறது. இக்காட்சியை,

> **"நோம்என் நெஞ்சே நோம்என் நெஞ்சே**
> **புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
> **கட்குஇன் புதுமலர் முள்பயந் தாஅங்கு"**   **(குறுந்.202:1-3)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு ஊடலில் கண்ட நெருஞ்சி மலரை, மதுரை வேளாதத்தன் வரைவிடைவைத்த பிரிவின் ஆற்றுதலாய்த் தலைவன் சென்ற திசையை நோக்கிக் கூடலுக்கான

எதிர்பார்ப்பில் கொண்டு சேர்க்கிறார். கதிரவன் கிழக்குத் திசையிலிருப்பின் நெருஞ்சிமலர் கிழக்கை நோக்கியும், உச்சியிலிருப்பின் மேல்நோக்கியும், மேற்கு நோக்கிச் சென்றபோது மேற்குதிசை நோக்கியும் காணப்படும் என்று அதன் இயக்கத்தோடு காட்சிப்படுத்தியுள்ளார். இதனை,

**"எழுதரு மதியங் கடல்கண் டாஅங்**
**கொழுகுவெள் ளருவி யோங் குமலை நாடன்**
**ஞாயி றனையன் தோழி**
**நெருஞ்சி யனையவென் பெரும்பணைத் தோளே"**
(குறுந்.315:1-4)

என்று சுட்டியுள்ளதும் தெரிகிறது. நெருஞ்சிப்பூக்கள் சூரியனையே எதிர்நோக்கி இருத்தல் இன்றைய சூரியகாந்திப் பூவையொத்த இனவகைத் தாவரங்களுள் சிறிய தாவர இனமாகக் கருத இடனாகிறது. இதனைப் "பொழுது வணங்கி என்றும் வழங்குவர்"[137] என்பது உணரத்தக்கது. இங்ஙனம் ஒரே நெருஞ்சிமலர் புலவர்தம் புலப்படு கருத்திற்கு ஏற்ப ஊடலுக்கும், கூடலுக்குமாய்க் காட்சிதருகிறது. இதனையே வ.சுப.மாணிக்கம் "புலவன் தான் புலப்படுத்த எண்ணும் கருத்தோட்டத்திற்குத்தக இயற்கையைச் சரிபடுத்திக் கொள்வான்"[138] என்பது பொருந்துகிறது. **வெளிர் மஞ்சள் நிறத்தில் ஐந்து சிற்றிதழ்களையும் மலரையொத்த வடிவில் முள்ளோடும் காட்சி தரும் ஒற்றை நெருஞ்சி மலர் புலவனின் பாடுபொருளுக்கு ஏற்ப நெஞ்சை வருத்துவதாகவும், நேயத்தைப் புலப்படுத்துவதாகவும் காணக்கிடைக்கிறது.** இச்சிறு தாவரம் மழைக்காலத்தில் தளைத்து வழியெங்கும் காணப்படுகிறது. தற்காலத்தில் இதன் மருத்துவக் குணமும் கண்டறியப்பட்டுள்ளது.

**மதியும் விண்மீன்களும்**

உலகில் தோன்றும் ஒவ்வொரு உயிரும் தன்னினத்தை வளப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளது. இதுவே அச்சம் தரும் பாலைவழிப் பதிவுகளிலும் தாய்மையைப் போற்றக் காரணமாகிறது. பாலை வழியில் காணும் காட்டுப்பூனைக் குடும்பத்தைக் காட்சிப்படுத்தும் ஓவியமாக மதுரை மருதன் இளநாகனார்,

"எழுதியன்ன கொடிபடு வெருகின்
பூளை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை
மதிசூழ் மீனின் தாய்வழிப் படூஉம்" (அகநா.297:13-15)

என்று புனைந்துள்ளார். **பூனையின் தோற்றம் அதனுடலில் அழகிய கொடிகளை வரைந்தது போன்றும்; அதன்பின் செல்லும் குட்டிகளில் வளர்ந்துள்ள வெண்ணிறப் பஞ்சுப்பொதி போன்ற மயிர்கள் பூளைப்பூவைப் போன்றும் காணப்படுகிறது. இதனை நிலவைச் சூழ்ந்திருக்கும் விண்மீன்களோடு ஒப்புநோக்கிக் காணத்தருகிறார். இக்காட்சியை எழுத்தோவியமாகத் தீட்டி, வானத்தையும் வசப்படுத்தி, வெருகையும் உடன் செல்லும் குட்டிகளையும் உயிர்பெறும் ஓவியமாய்ப் படைத்துள்ளார்.** இது அச்சம் தரும் வழியைப் புலப்படுத்தும் அழகோவியமாய்க் காட்சிதருகிறது.

**நாரைக்குடும்பம்**

சங்கப்பாக்களுள் பல மனித வாழ்க்கைச் சிறந்திட வழிகாட்டும் சான்றுகளாய்த் திகழ்கின்றன. தலைவன் தலைவியின் உள்ள ஒற்றுமை, தாயன்பு, பிள்ளைகளைப் பேணுதல் என்று நாரைகளின் வழியே நற்கருத்துகளை நிறைத்து குறும்படமாகப் படைத்துள்ளார். நெய்தல் நிலத்தில் புன்னை மரம் பூத்துள்ளது. அதன் உச்சியில் கூடமைத்து நாரைக் குடும்பத்தோடு வாழ்கிறது. நீண்ட கால்களையுடைய நாரை, தன் பெடையோடு சேர்ந்து கடலில் இரை தேடுகிறது. அவ்விரை தன் குஞ்சுகளுக்கு ஊட்டி உண்பிப்பதற்கு ஏற்ற சிறுமீன்களாய் அமைகிறது. இதனை,

"................... வீயுகப்
புன்னை பூத்த தண்நிழல் உயர்கரைப்
பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கிரை தேருந் தடந்தாள் நாரை
ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்" (நற்.91:1-7)

என்று பிசிராந்தையாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. **இக்காட்சிகள் தலைவன், தலைவிக்கான குடும்பப் பொறுப்பினையும், பிள்ளைகளைப் பேணுவதில் இருவருக்கும் உள்ள விருப்பத்தினை மையப்படுத்தியுள்ளது. இக்கருத்துணர்த்தும் நாரைக் குடும்பம் குறும்பட நகலாய்ப் பெறப்படுகிறது.**

இன்றைய இல்லற வாழ்க்கைமுறை பல வரம்புகளைக் கடந்து, குடும்பநல வழக்குகளாகக் குவிந்துள்ள நிலையில் இத்தகைய பாடற்காட்சிகள் கற்போர் மனத்தைப் பண்படுத்துவதாகப் புலப்படுகின்றது. இதன் உயிர்க்கொல்லா இரக்கக்குணத்தை,

**“கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினம்**
**திரையுறப் பொன்றிய புலவும் னல்லதை**
**இரையுயிர் செகுத்துண்ணாத் துறை”[139]**

என்று அம்மூவனார் சுட்டியுள்ளார். இவ்வாறான “சிறுமீனிரையை வெறுத்த நாரை நெய்தல் மலர்களோடு நெல்லையும் உண்பதைப் பெரும்பாக்கன் என்னும் புலவர் சுட்டியுள்ளார்.”[140] இவ்வாறு நாரையின் நற்குணங்களைச் சுட்டிய புலவர்கள் மனித வாழ்வை மேன்மையுறச் செய்யும் மாதிரிக் காட்சிகளாய்ப் புலப்படுத்தியுள்ளமைக் கருத்திற்கொள்ளத்தக்கது.

**உயிரின் வலி**

அன்புடைய உயிரிரண்டில் ஒன்று பிரிந்தால், மற்றதன் வாழ்வு உயிரின் வலியை உணரும் கொடுமையுடையது. பிள்ளைகளுக்காகவே வாழ்தலை வாழ்வின் பயனெனக்கொள்ளும் யானையும், கொக்கும் சங்கப்பாக்களின் நிலையான காட்சிகளாய்க் காணப்படுகின்றன.

பெரிய களிற்றைப் புலி கொன்றதும் பெருந்துயருற்ற பெண் யானை உடலும் உள்ளமும் தளர்ந்து வருந்துகிறது. ஆற்றுவதற்கு அரிய நிலையிலும் தன் பிள்ளையைத் தான் வளர்க்க வேண்டிய கடமையுணர்ந்து கன்றை அணைத்துக் கொள்கிறது. **இக்காட்சி ஆறாத் துயரிலும் தன் பிள்ளைக்கு ஆதரவாய் வாழும் பெண் யானையையும் அதன் துதிக்கை அணைப்பில் ஆறுதல் பெறும் கன்றினையும் எடுத்துக் காட்டுகிறது.** இதனை,

**“பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி**
**..............................................**
**அடுப்புண் ணுறுநரின் வருந்தி வைகும்”** (நற்.47:1-5)

என்னும் நல்வெள்ளியாரின் அடிகளால் அறியப்படுகிறது. “கலை இயற்கையைப் பிரதிபலித்து நிற்கிறது”[141] என்னும் தொடரின் வாழ்வியல் பயனை வலியுறுத்துகிறது.

நக்கீரர் பிள்ளைப்பாசத்தின் வாழ்வியற்கடமையை உண்ணாத கொக்கின் துயரக்குரலால் புலப்படுத்துகிறார். வேட்டைச் சிறுவர்களின் வலையில் மாட்டிய ஆண் கொக்கைப் பிரிந்த பெண் கொக்குத் தன் பிள்ளையை ஆறுதலாய்த் தழுவிக் கொள்கிறது, தன் ஆற்றாத உள்ளத்தைத் துயரக் குரலால் உணர்த்துகிறது. இதனை,

**"குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை**
**இருஞ்சேற் றள்ளல் நாட்புலம் போகிய**
**கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்**
**நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென**
**அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது**
**பைதற் பிள்ளை தழீஇ, ஒய்யென**
**அங்கட் பெண்ணை அன்புற நரலும்"** **(அகநா.290:1-7)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

இனிய இணையைப் பிரிந்த, மிகுதியான துன்பத்தை வெல்லக்கூடிய மருந்து, தம் உறவான சந்ததிகளை வளர்க்க வேண்டிய கடமை என்பதை உணர்த்துகிறது.

"சங்க இலக்கியம் இயற்கையை மகிழ்ச்சியூட்டும் பின்புலமாகவோ, உவமை, உருவகம் முதலிய புலப்பாட்டுறுப்புகளாகவோ மட்டும் கண்டு கொண்டு இன்புற்றதாகத் தோன்றவில்லை. அதனினும் உயர்ந்து நிற்கும் ஒத்துணர்வுப் பின்புலமாகக் (Sympathetic Background) கருதியே தன்னுள் அமைத்துக் கொண்டுள்ளது. இது நாகரீக வளர்ச்சியின் முதிர்வைக் குறிக்கும் எனத் தனிநாயகம் அடிகள் கூறுவது எண்ணத்தக்கது."[142] பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள் பலவாறு நிறைந்துள்ள இயற்கை **அழகியல் நோக்கிலோ, உள்ளுறை உவமை, இறைச்சி போன்றவற்றின் பாடுபொருட்களாகவோ அமையவில்லை. கற்குந்தோறும் புலனாகும் காட்சிப்பதிவுகள், அக்கால இயற்கை வளங்களைக் கண்டுகொள்ள உதவுவதோடு, அந்நிகழ்வுகளை உய்த்துணர்ந்த மக்கள் அதைவிட உயர்ந்து விளங்கும் பண்போடும், நாகரிகத்தோடும் தம் நல்வாழ்வை அமைத்துக் கொள்வதை விரும்பி இயற்கையைப் பதிவுசெய்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.**

தொகுப்புரை

- பண்டைத் தமிழ்ப் பாக்களுள் இயற்கை என்பது இயல்பு என்னும் பொருண்மையில் பெரும்பான்மையாக இடம்பெற்றுள்ளது. **செயற்கைக்கு மாறுபட்ட அனைத்துத் தோன்றல்களும் இயற்கை** என்னும் பொருளிளான இலக்கிய, இலக்கணப் பதிவுகள் பெறப்பட்டுள்ளன.
- தொல்காப்பியத்தில் இயற்கை என்பது இயல்புமாறாத தோன்றல்கள் என்று, தானே தோற்றம்பெறும் அனைத்துப் பொருட்களையும் குறிக்கிறது.
- பலதரப்பட்ட பண்புகளின் இயல்பு, ஐம்பெரும்பூதத்து இயற்கை, தானாக உண்டாகும் மழை, இடி, காற்று போன்றவை. காடு, மலை, கடல், ஆறு என்னும் சுற்றுப்புறத் தோன்றல்கள் என்று இயற்கை என்பதில் உலகின் அனைத்துத் தோன்றல்களும் உள்ளடங்கியுள்ளதை அகராதிகள் தெளிவுபடுத்துகின்றன.
- உலகின் வாழ்வாதாரமாகிய நீர், நிலம், நெருப்பு, ஆகாயம், காற்று என்பனவற்றுள் ஏதேனுமொரு இடத்தை நிலைக்களமாகவும், காலத்தை உந்து சக்தியாகவும் கொண்டு இயற்கைத் தோற்றம் பெறுகிறது. இவை கண்ணுக்குப் புலனாகாத இன்னுயிர், காற்றின் இயக்கம் முதலான ஆற்றல்களாகத் தோற்றம் பெற்றுள்ளன.
- புனைவு என்பது அழகு செய்தல், புதிதாக உருவாக்குதல் அல்லது படைத்தல் என்னும் செயல்களாலானது. இதனை **மனித மனத்தைக் கவரும் கலையாக்கம்** எனப் பொருள் கொள்ளுதல் பொருத்தமாகிறது.
- பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கைப் பெரும் பங்களிப்பைப் பெற்றுள்ளது. பெண்மையின் நலன் பாராட்டும் கபிலரின் பாவடிகளில் பிறை நுதல், மதி முகம், மலைத்தோல், சுனைக்கண், மயில் சாயல், கிளி மொழி என்னும் உவமைகளாய் இயற்கைப் பாடுபொருட்கள் நிறைந்துள்ளன. இவ்வாறு இயற்கை மக்களின் மனதாள்வது புலப்படுகிறது.

- **இன்னுயிர்** என்னும் இயற்கைப் பாடுபொருள், இல்லற வாழ்க்கைச் சிறப்பையும், பரத்தமையைக் கடிதலையும், அன்பற்ற தலைவனிடம் இன்பம் காணாது; தாய், தந்தையர் போலெண்ணி உறவு பேணுதலையும் உணர்த்தும். **ஒற்றை இயற்கைப் பதிவாய்ச் சிறப்புற்றுள்ளது.**

- முதற்பொருளும், கருப்பொருளும் வாழ்வியலை வலுப்படுத்தும் உரிப்பொருளுக்கு மிகுந்த ஆதரவாகத் திகழ்கின்றன. கார்கால நிகழ்வும், கருப்பொருள் புனைவுமாகத் தலைவன் நாட்டுச் செங்காந்தள் சிறுகொடியும்; அகவும் மயில், பார்ப்பொடு நடுங்கும் நரைமுகஊகம் போன்றவை பிரிவாற்றுதலில் தமிழுலக மக்களைத் தன்னெறிப்படுத்தி உளநலம் பேணுவது உணரர்பாலது.

- இளம்பயிர், சேற்றில் குதித்து மறையும் மழைநீர்க்குமிழி, முல்லை நிலத்தில் உதிர்ந்துள்ள மலர்கள், கார் காலத்தில் தேர்ச்சக்கரச் சுவட்டின் மீது ஊர்ந்து செல்லும் நீர் முதலானவை முறையே கிளிப்பிள்ளையின் புதிய சிறகு, சுனைகளுள் மழைநீர்க்குமிழி, சிச்சிலிப் பறவையின் சிறகு, ஊறும் பாம்புகள் எனப் பல உவமைகளும் கருப்பொருட்களும் இடம்பெற்றுள்ளன. ஒக்கூர் மாசாத்தியாரின் இப்பாடல் பண்டைக்கால இயற்கை வளத்தையும், இயற்கையோடு ஒன்றிய மக்களின் வாழ்வையும் புலப்படுத்துகிறது. இது தலைவனின் வரவை உணர்த்தும் கார்காலப் பதிவாய்க் காணப்படுகிறது.

- இணைமானுக்காகத் தேரை மெதுவாகச் செலுத்தும் பாடலில், எவ்வுயிரின் காதலுக்கும் ஏற்புடையன செய்து; காதலைப் போற்றும் மேன்மையான மனிதப் பண்பைப் பண்டைத் தமிழர் பெற்றிருந்தமைப் பெறப்படுகிறது. இவ்வாறான புலன் உணர்வுச் செயற்பாடுகள் ஒவ்வொரு மனிதனின் உணர்ச்சி நெறிப்பட்ட அனுபவங்களுக்குத் துணை நிற்பதாய்ப் படைக்கப்பட்டுள்ளன.

- ஒரு மனிதனின் வாழ்வை உறுதிப்படுத்துவதில் வாழிடச் சூழலுக்கு முக்கியப் பங்குண்டு என்பதை உணர்ந்த பெருங்குன்றூர் கிழார், இளம்புல்லூர்காவிதி போன்ற பெயரடைகளும், குன்றநாடன், பெரிய மகிழுந்துறைவன் என்னும் புனைவுகளும் மக்களை அவர்கள் வாழும் நிலத்தின் இயல்போடு இணைத்தமை உணரற்பாலது.
- கருநீல ஆகாயம், காடுறை சக்தியாய் மாயோனாகவும்; முதல் நிலம், மலையுறை சக்தியாய்ச் சேயோனாகவும்; நந்நீர்நிலை, உலகாதாரமாக வேந்தனாகவும்; காற்று, உயிர்வாழ் சக்தியாய் வருணனாகவும்; வெம்மை, பனி உறையாமலும், உருகாமலும் உலகுகாக்கும் கொற்றவையாகவும்; ஐந்திணைகளுக்கும் தெய்வமாய் இயற்கையின் ஆதாரமாகிய ஐம்பூதங்களும் பெறப்படுகின்றன.
- ஐந்திணைவாழ் மக்களும் ஏதேனுமொரு அரிசிச்சோறு, இறைச்சி போன்றவற்றை உணவாகக் கொண்டுள்ளனர். குறிஞ்சி, முல்லை நிலங்களில் சிறுதானியங்கள் பெரும்பான்மையாகவும், மருதம், நெய்தல், நிலங்களில் மீன்கள் பெரும்பான்மையாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. கரும்புச்சாறு, இளநீர், நுங்கு போன்ற நலம்தரும் இயற்கைக் குளிர்பானங்களும்; வாழை, பலாப்பழங்களும் மருதநிலத்துச் சிறப்புணவுகளாகப் பெறப்படுகின்றன.
- குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலங்களின் மிகைவளங்களான மிளகு, இறந்துபட்ட யானைத் தந்தம், பால்பொருட்கள், நெல், உப்பு, மீன் போன்றவை வேற்று நிலத்தார்க்குப் பண்டமாற்று செய்யப்பட்டுள்ளது. இது மிளகு, முத்து என வேற்று நாடுகளுக்கான வணிகமாகவும் நெய்தல் நிலத்தில் வளர்ந்துள்ளது.
- உள்ளுறையுவமைகளுள் எருது, வரால், வாளை போன்றவற்றின் செருக்கும், அஞ்சாத தறுக்கண்மையும், தன்னலம் தொலைத்துப் பரத்தமை விரும்பும் தலைவனைத் தன்னெறிப்படுத்தும் பண்பட்ட வாழ்வுத் தேடலாய் அமைந்துள்ளன.

- தலைவன் ஈட்டிவரும் மிகுந்த பொருள் வேட்டமும், மீன் வேட்டமும் ஆணின் வாழ்வியற் கடமைகளையும் சுற்றத்தோடு கூடிவாழும் சமூகப் பயன்பாட்டையும் உணர்த்துகின்றன.
- பொய்மைப்புலி, வண்டூது தாமரை போன்றவை மனத்தில் அன்பில்லாமல் இன்பம் விரும்புவோருக்கானத் தகுந்த உள்ளுறை உவமையாய்ச் சுட்டப்பட்டுள்ளமைப் பெறப்படுகிறது.
- கவண் கல்லின் இயக்கம், அலையோசை போன்றவை அலரால் உண்டாகும் துன்பங்களைப் புலப்படுத்தும் அச்சப் பதிவுகளாய் அமைந்துள்ளன.
- பறவை, விலங்குகளின் அன்புறு நிகழ்வுகளைச் சுட்டும் இறைச்சிப் பதிவுகள் காதலரின் பிரிவுக் காலத்து அன்பை மிகுவிக்கிறது.
- காதல் தலைவியின் மனத்தளர்வைப் புலப்படுத்தும் மயிலின் ஆடலரங்கும்; அறத்தோடு நிற்க வேண்டுவதாய் இசையரங்கும் இயற்கையிலிருந்து மாறாத இந்நிகழ்வுகள் கபிலரால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.
- தாய்மையைப் போற்றும் களிறு, பசிமறந்து இசைக்கு மயங்கிய யானை முதலானவை யானை குறித்த பன்முக அறிதலை வெளிப்படுத்துகின்றன.
- காதலின் உறுதியைப் புலப்படுத்தி யானையின் துதிக்கையைத் தாங்கிநிற்கும் வலிமையான தந்தம் தளரும் முயற்சியினும் விடாமுயற்சி எளிதில் வெற்றியைப் பெற்றுத்தரும் என்னும் சமூகநலன் விளையும் கருத்தைப் புலப்படுத்துகிறது.
- நெருஞ்சிமுள் நேயமில்லாத தலைவனின் மனத்தைப் புலப்படுத்துகிறது.
- மதியும், விண்மீன்களுமாய் காட்டுப்பூனையும், அதன் குட்டிகளும் உவமிக்கப்பட்டுள்ளன. இவை கோட்டோவியமாய் பூனையின் உடலிலுள்ள கோடுகளும், பூளைப்பூவாய் குட்டிகளின் மயிர்ப்பொதிவும் கட்புலனாகும்படி காணப்படுகின்றன.

- நாரைகள், தன் இளம்பிள்ளைகளுக்காக இணைந்து இரைதேடுகின்றன என்னும் இப்புனைவு பெற்றோரின் கடமையையும் பொறுப்பையும் ஒருங்கிணைந்து உணர்த்துகின்றன.
- இணைகளின் இழப்பால் ஏற்படும் உயிரின் வலியை உணரச் செய்யும் யானை, கொக்கு முதலானவை சந்ததிகளின் வாழ்வைக் கருத்தில் கொண்டுள்ள வாழ்வியல் நற்கூறுகளின் நகல்களாய்க் காணப்படுகின்றன. இயற்கையின் அழகியல் பதிவாய் இல்லாமல் மனித மனத்தையும், நல்வாழ்வையும் மேம்படுத்தும் உளவியல் சார்ந்த இயற்கைப் புனைவுகளாகப் புலப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. மு.வரதராசன் பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.21.
2. உரையாசிரியர் குழு, புறநானூறு-1, புறநா.45:6.
3. மேலது., புறநா.35:27-29.
4. சேனாவரையர் (உ.ஆ.), தொல்காப்பியம், சொல்.கிளவி.நூற்.19.
5. மேலது., (உ.வி.), ப.19.
6. கழகத் தமிழகராதி, ப.111.
7. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்-1, ப.235.
8. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.142.
9. அடோன் அகராதி, ப.69.
10. அன்னி மிருதலகுமாரி தா.ம.க, பரிபாடலில் இயற்கை, ப.18.
11. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.செய்.நூற்.537.
12. கழகத் தமிழகராதி, ப.693.
13. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.755.
14. சதுரகராதி, ப.213.
15. குறுந்.93:2.
16. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.3.
17. மேலது., நூற்.4.
18. மேலது., நூற்.20.
19. மேலது., நூற்.5.
20. வின்சென்ட்.இலா., தமிழ் நிலமும் இனமும், ப.1.
21. பேராசிரியர் குழு, புறநானூறு-1, புறநா.187:1-4.
22. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.புறத்.நூற்.75.
23. ச.வே.சுப்பிரமணியன், தமிழ் செவ்வியல் நூல்கள், சிலப்பதிகாரம், காடுகாண்காதை, 64-66.
24. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், (உ.வி.), ப.5.
25. மேலது., நூற்.6.
26. மேலது., நூற்.7.
27. மேலது., நூற்.8.
28. மேலது., நூற்.9.
29. மேலது., நூற்.10.

30. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.11.
31. மேலது., நூற்.12.
32. மேலது., நூற்.15.
33. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.23.
34. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, குறுந்தொகைச் சொற்பொழிவு, ப.88.
35. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.21.
36. வ.சுப.மாணிக்கம், சங்கநெறி, ப.3.
37. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.11.
38. மேலது., மரபு, நூற்.572.
39. மேலது., நூற்.573.
40. மேலது., நூற்.574.
41. மேலது., நூற்.575.
42. மேலது., நூற்.576.
43. மேலது., நூற்.577.
44. மேலது., அகத். உரைவிளக்கம், ப.9.
45. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.52.
46. மலைபடு. 168-169.
47. மேலது., 434-437.
48. மேலது., 180-184.
49. மேலது, 243-249.
50. மேலது., 177.
51. பெரும்பாண். 143.
52. மலைபடு. 175-176.
53. மேலது., 152-157, 425.
54. தேன் - முருகு.195 (குறி.பா.155, மலைபடு.152-157, 171-172)
55. மலைபடு. 282.
56. மலைபடு. 179.
57. பெரும்பாண். 193-196.
58. மேலது, 167-168.

59. மலைபடு. 434-436.
60. மேலது, 440-445.
61. பெரும்பாண். 193-196.
62. மேலது., 167-168.
63. மேலது., 163.
64. மலைபடு. 435-436.
65. பெரும்பாண். 255.
66. மேலது., 245-246.
67. மேலது., 256.
68. மலைபடு. 455-458.
69. மேலது., 456-458.
70. மேலது., 436.
71. பெரும்பாண். 262.
72. மேலது., 357.
73. மேலது., 360.
74. மேலது., 356.
75. மேலது., 358-359.
76. மேலது., 344-345.
77. பொருநர். 183.
78. பட்.பா. 176-182.
79. பெரும்பாண். 94-105.
80. மேலது., 130-133.
81. மேலது., 130-133.
82. மேலது., 111-116.
83. மேலது., 94-105.
84. வி.பாலு, சுற்றுச்சூழல் கல்வியின் பல்நோக்குத் தன்மை, ப.13.
85. அகநா.2.
86. பெரும்பாண்.137-142.
87. முருகு.194-197.
88. குறி.பா.54-57.
89. மதுரை.291.

90. குறி.பா. 3-7.
91. மதுரை.294-295.
92. மலைபடு.286-291.
93. பெரும்பாண்.188.
94. மலைபடு. 328-329.
95. நெடுநல். 3-8.
96. பெரும்பாண். 160-163.
97. மதுரை. 271-272.
98. நெடுநல். 168-188.
99. பட். 204-205.
100. மதுரை. 254.
101. பெரும்பாண். 232-236.
102. மேலது., 268-274.
103. மேலது., 64-65.
104. மேலது., 339.
105. மேலது., 40.
106. மேலது., **81.**
107. மேலது., 94.
108. மேலது., 118-121.
109. மேலது., 106-117.
110. மேலது., 106-117.
111. இளம்பூரணனார், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.16.
112. மேலது., நூற்.14
113. மேலது., நூற்.21.
114. இளம்பூரணனார், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.51.
115. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.282.
116. பொ.வே.சோமசுந்தரனார், (உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.327.
117. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.33.
118. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.282.
119. சேனாவரையருரை, தொல்காப்பியம், சொல்.பெயரி.நூற்.196.
120. அ.விசுவநாதன், (உ.ஆ.), நெய்.கலி.148:8-9.

121. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு (இலக்கியக்கொள்கைகள்), ப.79.
122. இளம்பூரணனார், தொல்காப்பியம், பொருள், பொருளி.நூற்.225.
123. மேலது, நூற்.226.
124. மேலது., நூற்.227.
125. தமிழண்ணல், தொல்காப்பியத்தில் இலக்கியக் கொள்கை, ப.93.
126. மேலது, ப.91.
127. பொ.வே.சோமசுந்தரனார், (உ.ஆ.), ஐங்குறுநூறு, 354.
128. உ.வே.சா., (உ.ஆ.), குறுந்தொகை, 397.
129. இரா.இளங்குமரனார், பொருளதிகார வாழ்வியல் விளக்கம், ப.114.
130. ச.மெய்யப்பன், கபிலர், ப.100.
131. புலவர் குழந்தை, இராவண காவியம், குறிஞ்சிநிலப் புனைவு,
132. இரா.செயபால், (உ.ஆ.), அகநாநூறு, அகநா.177:9-11.
133. ச.மெய்யப்பன், கபிலர், ப.104.
134. செ.வேங்கடராமன், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப.7.
135. கோவை சதாசிவம், உயிர்புதையல், ப.74.
136. மேலது, ப.74.
137. சிங்காரவடிவேலன், சங்க இலக்கிய உவமைகள், ப.174.
138. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.282.
139. நெய்தற்கலி, 131:31-33.
140. உ.வே.சா., (உ.ஆ.), குறுந்தொகை, குறுந்.296:2-4.
141. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.95.
142. அ.அ.மணவாளன் இலக்கிய ஒப்பாய்வு, (சங்க இலக்கியம்) ப.54.

## இயல் - மூன்று

## நிலப்புனைவுகளின் வகைப்பாடுகளும் காலப்புனைவுகளும்

### முன்னுரை

புவியின் இயக்கம் மூலாதாரத் தோன்றல்கள், உயிர்த் தோன்றல்கள், வாழ்வாதார வளங்கள் என்னும் மூவகைப் பகுப்புகளைத் தன்னுள் கொண்டுள்ளது. இவை பழந்தமிழ்ப் பாக்களுள் முதற்பொருள், கருப்பொருள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

நிலமும் பொழுதும் எந்நிகழ்வுக்கும் அடித்தளமானவை. பிரித்துணரமுடியாத தொடர்புடையவை. இவ்வாறான நிலப்புனைவும் காலப்புனைவும் பண்டைக்கால இயற்கையைக் காட்சிப்படுத்துவதோடு; பாண்டிய நாட்டுப் புலவர்களால் எவ்வாறெல்லாம் வகைப்படுத்தப்பட்டுள்ளன எனவும், அவற்றின் அன்றைய சமூகப் பயன்பாடு குறித்தும், இன்றைய நிலையில் நிலச்சூழலைப் பாதுகாக்க வேண்டிய கடமை குறித்தும் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

### நிலமும் பொழுதும்

உலக உயிர்களின் மூலாதாரமாய்த் திகழும் நிலமானது மலை, காடு, சமவெளி, கடல், பாலை எனும் வகைப்பாடுகளை உடையது. பண்டைத் தமிழர் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், வளம்குன்றிய நெடுவழிப் பாலை என்று நிலங்களின் தனித்தன்மை புலப்படும்படி வகைப்படுத்தியுள்ளனர். இவை அந்தந்த நிலச்சூழலில் வாழும் மக்களின் வாழ்வியல் தனித்துவத்திற்குப் பொருத்தப்பாடு உடையதாய்ச் சிறுபொழுது, பெரும்பொழுது எனும் காலப்பகுப்பையும் ஒருங்கிணைத்து முதற்பொருளாய்க் கண்டறியப்பெற்றுள்ளது.

**இயற்கைப் புனைவு வகைகள்**

**மூலாதாரத் தோன்றல்கள் (முதற்பொருள்)**   **உயிர்த் தோன்றல்கள்**   **வாழ்வாதார வளங்கள் (கருப்பொருள்கள்)**




உலக நிகழ்வுகளுக்கு நிலமும் பொழுதும் மூல ஆதாரமாய்த் திகழ்கின்றன. இவை இவ்வியலில் விரித்துரைக்கப்படுகின்றன.

### தொன்மைத் தமிழக நிலவியல்

பண்டைத் தமிழகத்தின் பரந்துபட்ட நிலப்பகுப்பு, தொல்காப்பியப் பாயிரத்தில் வடவேங்கடம் முதல் தென்குமரி வரை எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி என்னும் மன்னன் தமிழகம் முழுவதையும் ஆளவேண்டும் எனப் புலவரின் வாழ்த்துரையில் சுட்டப்பட்டிருப்பதை,

> **“வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்**
> **தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்**
> **குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்**
> **குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்”[1]**

என்ற பாடல் தெளிவுபடுத்துகின்றது. இந்நிலவியல் விளக்கங்கள் **வடக்கில் இமயத்தையும், தெற்கில் குமரிக் கோட்டையும் குறித்து; கிழக்கிலும் மேற்கிலும் நீரெல்லைகளைப் புலப்படுத்துகின்றன.**

**"தென்குமரி வட பெருங்கல்**
**குணகுட கட லாவெல்லை"** (மதுரை.70-71)

என்னுமடிகளும், "குறுங்கோழியூர் கிழாரின் புறநானூற்று அடிகளும்"[2] இதே எல்லைகளைச் சுட்டுகின்றன.

**இலக்கண, இலக்கியங்களில் நிலவியல்**

**'காடுறை உலகம்'**
**'மைவரை உலகம்'**
**'தீம்புனல் உலகம்'**
**'பெருமணல் உலகம்'**

என்னும் தொல்காப்பிய அடிகளில் நானிலம் சுட்டப்பட்டுள்ளது. வேளாண் சமுதாயம் மக்களுக்கு நிலையான இருப்பிடத்தையும், ஆணிற்குத் தலைமைப் பொறுப்பையும் வழங்கியது. ஆடவர் தம் பொறுப்புகளை உணர்ந்து நற்குணங்களைப் பேணுவதால் அவரவர் வாழும் நிலமும் செழிப்படையும் என்பதைச் சுட்டுமிடங்களில் "நிலனே! நீ ஒன்றில் நாடேயாக; ஒன்றில் காடேயாக; ஒன்றில் பள்ளமேயாக; ஒன்றில் மேடேயாக"[3] என்று நிலத்தின் இயல்பை நானில வகைப்பாடுகளோடு குறித்துள்ளார். இது நிலத்துக்கும் அந்நிலத்தோடு தொடர்புடைய மக்களுக்குமான உறவைச்சுட்டி, எந்நிலையிலும் தான்வாழும் நிலத்தைப் பாதுகாக்க வேண்டிய தன்னுணர்வைத் தூண்டுகிறது. இவ்விடத்தும் வளமை குன்றிய பாலை நிலம் குறிப்பிடப்படவில்லை.

**பாலைநிலப் புனைவுகள்**

பழந்தமிழகத்தில் நிரந்தரப் பாலைவனங்கள் காணப்படவில்லை. பழந்தமிழ்ப் பாக்களுள் வளமை குன்றிய நெடுவழிப் பாலைநிலம் அகவாழ்விற்கும், புறவாழ்விற்குமான போராட்டக் களமாய்க் காணப்படுகிறது. இதனை,

**"நடுவுநிலைத் திணை"**[4]
**"வாகை தானே பாலையது புறனே"**[5]

என்னுமடிகளில் தொல்காப்பியர் குறித்துள்ளார்.

**அகப்பொருள் விளக்கத்தில் பாடல்**

**"அன்பின் வழியது உயிர்நிலை"[6]**

என்னும் குறட்பாவிற்கு ஏற்ப அகப்புற வாழ்வின் சிறப்புகளை உணர்த்தும் ஐவகை நிலங்களும் அது சார்ந்த மற்ற பகுதிகளுமாய் ஒருங்கே பத்து வகை நிலங்களை நம்பியகப்பொருள் சுட்டுகிறது. இதனை,

**"வரையே சுரமே புறவே பழனம்**
**திரையே அவையவை சேர்ந்திடும் இடனே**
**எனஈர் ஐவகைத்து அணையியல் நிலமே"[7]**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. தமிழ்நெறி விளக்கமும் பாலைநிலத்தை வெம்பரல் என்று குறிப்பிடுவதை ஸ்ரீகுமார் எடுத்தாண்டுள்ளார். "பொருப்பு, வெம்பரல், புறவு, பழனம், வாரி"[8] என்று ஐந்திணை நிலங்களைச் சுட்டும் போதும் மலைக்கும் காட்டிற்கும் இடையிட்ட நிலமாகப் பாலை நிலத்தை இரு இலக்கணிகளும் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**காப்பியச் சிலம்பில் பாலைநிலம்**

நானிலத்தில், காடும் மலையும் தன் இயல்பிலிருந்து மாறுபட்டு, வளங்களை இழந்து, அஞ்சத்தக்க தோற்றத்தோடு பாலைநிலம் உருப்பெற்றது என்பதை இளங்கோவடிகள் குறித்துள்ளார். இந்நிலத்தில் கானல்நீரைப் பதிவுசெய்த பண்டைப் புலவர்கள் மணற்காற்றைப் பதிவு செய்யவில்லை. பழந்தமிழகத்தில் மணற்பரந்த பாலைவனம் புலப்படவில்லை. நீராதாரம் மிகக்குறைந்த, வளமிழந்த நிலமாய் அச்சத்தையும் அயர்வையும் தரக்கூடிய பதிவுகள் உள்ளன. இந்நெடுவழிப் பாலை தன்னைக் கடக்க விளைவோரின் கடமையை உணர்த்தி, மனஉறுதிப்பாட்டை மிகுவிக்கும் நிலமாக அகப்பாக்களுள் புலப்படுகின்றது.

ஐவகை நிலங்களில் அதனதன் தனித்திறம், தோற்றப்பொலிவு, பயன்பாடு என்னும் இவ்வகைப்பாடுகளுள் பெரும்பாலான சொல்லடைகள் புலப்படுகின்றன. இவை நிலச் சூழல்வனப்பைச் சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் திறத்தோடு கிடைக்கின்றன.

**பாண்டிய நாட்டுப் புலவர்கள் நிலச்சூழலின் அழகியலை மட்டும் தனித்துப் பாடவில்லை. தம் உள்ளத்து உணர்வுகளையும் தனித்துச்**

**சுட்டவில்லை. மாறாக மனிதம் மேம்படும் வாழ்வியல் கருத்துக்களை மக்களின் வாழ்வாதாரச் சூழலோடும், தாம் கண்டு உணர்ந்த பருவக்கால நிகழ்வுகளோடும் இணைத்து நிலவியல் கூறுகளைப் படைத்துள்ளனர்.** இவற்றில் நிலத்தின் தன்மை, இடவமைவுச்சூழல், தட்பவெப்பம், நீர்நிலைகள், தாவர வளரிடம், விலங்குகள், பறவைகளின் வசிப்பிடம், மக்களின் வாழிடம், பயன்பாட்டுக் களங்கள், விளைநிலங்கள் போன்றவற்றை வெளிப்படுத்தும் நிலப்பதிவுகளும் காணப்படுகின்றன.

"திணை இலக்கியமாவது நிலமும் பொழுதும் இயற்கையைப் பின்னணியாகக் கொண்ட மனித வாழ்வினை விளக்குவதாகும். நிலச்சாயல், மனிதச்சாயல் போன்றவை ஓவியமாகப் படிந்துகிடக்கும் உணர்வையும், புனைதிறனையும் நாடக வடிவமைப்பினையும் பெற்றது"[9] என்று இயற்கையோடு இயைந்த சங்க இலக்கியப் பதிவை விளக்கும் ஸ்ரீகுமார், நிலச்சாயலுக்கும் மனிதனின் வாழ்வியலுக்குமான தொடர்பைக் குறிப்பிடுகிறார்.

இது மனிதனின் வாழ்வைத் தீர்மானிக்கும் காரணிகளுள் சூழலும் மரபும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்னும் உளவியல் அறிஞர்களின் கருத்தோடு ஒப்புநோக்கத்தக்கது.

**மலைநிலத்து வகைப்பாடுகள்**

உயிரினங்களின் வாழ்வாதாரமாய்த் திகழும் நிலத்தை, தொல்காப்பியர் முதற்பொருள் என்கிறார். இம்மலைநிலம் அருவிப்பெரும்பயனால் முல்லை, மருதம், நெய்தல் போன்ற நிலங்களுக்கும் வளப்பத்தைத் தருகிறது. இதனால் தாய்மை நிலமாகத் தோன்றுகிறது. இத்தகைய பண்புகளால், மற்ற நிலங்களினும் இம்மலைநிலம் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் பெரும்பங்களிப்பைப் பெறுவதற்குக் குறிஞ்சிக் கபிலரும் காரணம் என்பது குறிப்பிடத்தக்கது.

மலைநிலப் பதிவுகள் எட்டுத்தொகை நூல்களைவிடப் பத்துப்பாட்டு நூல்களுள் விரிவாக அமைந்துள்ளன. இதனை ச.போ.சீனிவாசன் "குறிஞ்சிப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய மூன்று நெடும்பாட்டுகளும் மலைநிலத்தின் இயல்பினை மிக நீட்டி

வருணித்துள்ள பாங்கு தனித்தன்மை வாய்ந்ததாகும்”[10] என்கிறார். இம்மூன்று பாட்டுகளும் பாண்டிய நாட்டுப் புலவர் பாடியதென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மலைநிலம், உயிரினங்களின் வாழ்க்கைச் செயல்பாடுகளுக்கும், பல்லுயிர் இணைவிற்கும் அடித்தளமானது. இந்நிலம் **அடுக்கம், அறை, அளை, அருவி, ஆறு, இருக்கை, இறும்பு, கட்சி, கல், காடு, கான், கானம், குறும்பொறை, குன்று, சாரல், சிமையம், சிலம்பு, சுனை, சென்னி, சோலை, பாறை, துறுகல், புறவு, பொருப்பு, புனம், மலை, வரை, வெற்பு** என்னும் பல்வேறு பெயர்களில் இடம்பெற்றுள்ளது. இதற்கு,

> **“நெடுமலை அடுக்கத்து”** (மலைபடு.141)
> **“கான மஞ்ஞை யறைமீன் முட்டை”** (குறுந்.38:1)
> **“இல் புக்கன்ன, கல் அளை”** (மலைபடு.255)
> **“அருவி வேங்கைப் பெருமலை நாடு”** (குறுந்.96:1)
> **“கலிமழை கெழீஇய கான்யாறு”** (குறுந்.264:1)
> **“மஞ்ஞை ஆலும் மரம்பயில் இறும்பு”** (பெரும்பாண்.495)
> **“கலவ மஞ்ஞை கட்சி”** (மலைபடு.235)
> **“பெருங்கல் விடர் அளை”** (முருகு.314)
> **“காடு காத்து உறையும் கானவர்”** (மலைபடு.279)
> **“கான்பொழில் தழீஇய அடைகரை”** (மதுரை.337)
> **“கழைவளர் சாரல்”** (நற்.386:5)

என்னும் கபிலர், அள்ளூர் நன்முள்ளையார், கடியலூர் உருத்திரங்கண்ணனார், தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் முதலான புலவர்களின் பாடலடிகள் சான்றுகளாகின்றன.

இவ்வகைப்பாடுகள் குறிஞ்சி நிலத்தோடு தொடர்புடைய மக்களின் வாழ்வியல் முறைகளை எடுத்துரைக்கின்றன. இவை பின்வரும் தலைப்புகளில் விளக்கப்பட்டுள்ளன.

மலைநிலமும் அதனைச் சார்ந்த பகுதிகளும் சிறிய துறுகல் முதல் உச்சிமலை வரை சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இவ்வாறான நிலவமைப்புகளை விளக்க முயன்ற புலவர்கள், கற்போர்தம் மனக்கண்ணால் கண்டும்; நிலம் சார்ந்த ஒலிகளைக் கேட்டும்; உணரும் வகையில் உவமைகளையும் கையாண்டுள்ளனர். யானையை உவமித்துச் சிறு மலை நிலப்புனைவை மிகத் தெளிவாகக் காட்டியுள்ளனர்.

**யானைக்கல்**

யானை தனித்துப் படுத்திருப்பது போன்ற அளவிலான தோற்றமுடைய குண்டுக்கற்கள் துறுகல் என்பதாய்க் குன்றுகள் சூழ வாழ்ந்த மக்களின் இருப்பிடங்களுக்கு அருகிலும் அமைந்துள்ளன. வாழை விளையக்கூடிய வளமுடைய நிலங்களுக்கருகிலும் மற்றும் மலை நிலங்கள் தோறும் ஆங்காங்கு இருந்துள்ளன. இதனை, “மலைகளிலும் மலையைச் சார்ந்த நிலங்களிலும் ஆங்காங்கே குண்டுக்கற்கள் இருக்கும். அவற்றைத் துறுகல் என்பர்”[11] என்பது உணர்த்தும்.

பெரும்மழையால் தலைவன் நாட்டிலுள்ள துறுகல் பொலிவோடு காணப்படுகிறது. தலைவனின் பிரிவாற்றாமையால் நான் பசலையடைந்துள்ளேன் என்கிறாள் தலைவி. இதனை விளக்கும் கபிலர், நன்கு கழுவப்பெற்ற யானையைக் குண்டுக் கல்லோடு ஒப்பிட்டுள்ளார். இதேபோன்று மதுரை மருதன் இளநாகனார், கழுவப்படாமல் புழுதிபடிந்திருக்கும் யானையோடு மழையற்ற வறண்ட நிலத்திலிருக்கும் குண்டுக்கல்லை ஒப்பிட்டுள்ளார்.

இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் யானையின் முகத்தில் வேல்பாய்ந்து நிற்பதைப் போல வாழையின் வளைந்த பூ துறுகல்லில் சாய்ந்துள்ளதைச் சுட்டுகிறார். இது மலைநிலத் துறுகல்லின் அருகில் வாழை விளையும்படியான நிலவளமும் நீர்வளமும் இருப்பதை அறியச் செய்கிறது. இவை,

> **“மாசறக் கழீஇய யானை போலப்**
> **பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்”** (குறுந்.13:1-2)
>
> **“மழை கழூஉ மறந்த மாயிருந் துறுகல்”** (குறுந்.279:5)
>
> **“ஊழ்மலர் ஒழிமுகை உயர்முகம் தோயத்**
> **துறுகல் சுற்றிய சோலைவாழை”** (மலைபடு.130-131)
>
> **“புலவுச் சேர் துறுகல் ஏறி அவர் நாட்டுப்**
> **பூக்கெழு குன்றம் நோக்கி நின்று”** (ஐங்.குறி.210:1-2)

என்னும் கபிலர் மதுரை மருதன் இளநாகனார், இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் போன்றோரின் பாடலடிகளால் அறியப்படுகின்றன.

**பயன்படு களம்**

குறிஞ்சிநில மக்கள் கூடி மகிழும் இடம், தாம் சேகரித்த தினை, மூங்கில் நெல் போன்ற தானியங்களை உலர்த்தும் இடம், அவற்றைக் கல்லுரலில் இட்டுத் தூய்மை செய்வதற்கான இடம், வெறியாட்டு நிகழ்த்தும் இடம் என இப்பாறைநிலம் பலவிதப் பயன்பாடுகளோடு பதிவுசெய்யப்பட்டுள்ளன.

'அறை', 'வியலறை', 'அகலறை' என்னும் பதிவுகள் அகன்ற பரப்புடைய பாறை நிலத்தைக் குறிக்கின்றன. இவை பின்வரும் தலைப்புகளில் விளக்கப்பட்டுள்ளன.

**அறை உரல்**

குறிஞ்சிநில மகளிர் இப்பாறையில் உள்ள கற்குழிகளை இயற்கை உரல்களாகக் கொண்டுள்ளனர். இறந்த யானைத் தந்தங்கள், சந்தன மரத்துண்டுகளில் செய்யப்பட்ட உலக்கைகளால் நெல்லிடித்து, சேம்பின் இலைகளைச் சுளகாக்கித் தூய்மை செய்துள்ளனர். இதனை,

> **"................................ களிற்றுக்**
> **கோடு உலக்கையாக, நல்சேம்பின் இலைசுளகா**
> **ஆடுகழை நெல்லை அறை வரலுள்பெய்து..." (குறி.கலி.41:1-3)**
> **"ஐவன வெண்நெல் அறைஉரலுள் பெய்து" (குறி.கலி.43:4)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**வியலறை**

"அகன்ற பரப்புடைய இப்பாறையின் சூழல் வளமுடையது. வேங்கை, சுரபுன்னை, நாவல் முதலான மரங்களடர்ந்துள்ளன. இதனை,

> **"கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ**
> **யிருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்**
> **நன்மலை நாடன் ..." (ஐங்.219:1-3)**
> **"வறன்உறல் அறியாத வழைஅமை நறுஞ்சாரல்**
> **விறல் மலை வியல் அறை" (குறி.கலி.53:1-2)**

என்னும் கபிலரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய பரந்துபட்ட பாறைத்தளம், குறிஞ்சிநில மக்களின் வெறியாட்டுக் களமாகவும் பயன்பட்டதை,

> **"வெறிக்களம் கடுக்கும் வியல்அறை தோறும்" (மலைபடு.150)**

என்னுமடியால் அறியமுடிகின்றது.

**அகலறை**

பாறைத்தளம் மழையால் கழுவப்பெற்றும், கதிரவனின் ஒளியால் காய்ந்தும் தூய்மையாகக் காணப்படுகிறது. இந்நிலத்திலுள்ள நாவல் மரம் அரிதாகக் கிடைக்கும் நாவல் பழங்களைத் தருகிறது. இதனை,

> **"வான்கண் கழீஇய அகல்அறை" (குறி.பா.98)**
> **"விடியல் வெங்கதிர் காயும் வேய்அமல் அகல்அறை"**
> **(குறி.கலி.43:4)**
>
> **"காலம் அன்றியும் மரம்பயன் கொடுத்தலின்**
> **காலின் உதிர்ந்தன கருங்கனி நாவல்" (மலைபடு.133-135)**

என்னும் இப்பதிவுகளைக் கபிலர், இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனாரின் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

**தாவரங்களின் வளரிடம்**

இயற்கையாகப் பலவகைத் தாவரங்கள், மலைகளிலும் அதன் அடிவாரக் காடுகளிலும் அதிகம் வளர்கின்றன. இங்கு வளரும் மரங்களும், மூலிகைகளும் உலகின் உயிர்ச் சக்தியான காற்றைத் தூய்மை செய்வதில் முதன்மை பெறுகின்றன. மலையடிவாரம் முதல் மலையுச்சிவரை உள்ள **அடுக்கடுக்கான மலைகள்** என்னும் பொருளில் **அடுக்கம், சாரல், சிலம்பு** எனும் நிலப்பகுதிகள், தாவரங்கள் வளரும் இடங்களாகச் சுட்டப்பட்டுள்ளன.

**அடுக்கம்**

அடுக்கம் என்பது மலையெங்கும் பல மடிப்புகளாகத் தோற்றம் தருகிறது. இந்நிலப்பகுதியில் மூங்கில், காந்தள் முதலான தாவரங்கள் வளர்ந்துள்ளன. மூங்கிலின் ஒத்த அசைவும், காந்தள் மலரின் நறுமணமும் புலப்படுமாறு, நுட்பமான அடைமொழிகளோடு படைத்தாளப்பட்டுள்ளன. குரங்குகள் ஏறியறியாத மிக உயர்ந்த மரங்களும், தேர்ச்சக்கரம் போன்ற பெரிய தேனடைகளும் இந்நிலத்தின் வளமையைக் காட்டுகின்றன. இவற்றை,

> **"கழைவளர் அடுக்கம்" (அகநா.82:9)**
> **"ஆடுகழை அடுக்கம்" (ஐங்.220:2)**
> **"அடுக்க நாறலர் காந்தள்" (குறி.கலி.59:3)**
> **"மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்து" (முருகு.42)**

**"நேர்கொள் நெடுவரை நேமியின் தொடுத்த**
**சூர்புகல் அடுக்கத்துப் பிரசம்"** **(மலைபடு.238-239)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறான இயற்கை அரணாகவும், வளமையான நிலமாகவும் விளங்கும் மலையடுக்குகளை "மடிப்பு மடிப்பான மேற்குமலைத் தொடர்களைப் பார்க்கிற போதெல்லாம் அம்மாவின் அடிவயிற்றுச் சுருக்கங்கள் நினைவிற்கு வருகிறது"[12] என்னும் கருத்தாளம் இப்பக்க மலையின் தோற்றத்தைத் தாய்மையோடு ஒப்பிடுகிறது.

**சாரல்**

இந்நிலம் தானியப் பயிர்கள் வளர்வதற்கேற்ற மண் வளத்தைப் பெற்றுள்ளது. இந்நிலத்தில் தினை, காந்தள், பலா, சுரபுன்னை, மூங்கில் போன்ற பலவகைத் தாவரங்கள் வளர்ந்துள்ளன. இவ்வாறு பயன்தரும் தாவரங்களின் வளரிடமாக, மலைவாழ் மக்களின் விழாக்களமாகக் காட்சிதருகிறது. இது நிலத்தின் செழுமையையும், இயற்கையோடு இயைந்த மக்களின் வாழ்வியல் பயன்பாட்டையும் விளக்குகிறது. இதனை,

**"கழை வளர் சாரல்"** **(நற்.386:5)**
**"தினை விளை சாரல்"** **(மது.291)**
**"சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்"** **(ஐங்.214:1)**
**"வழை அமை சாரல்"** **(மலைபடு.181)**
**"மணஇல் கமழும் மாமலைச் சாரல்"** **(மலைபடு.151)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது. இங்கு நெல்லியும் விளைந்துள்ளதை, **"கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி"**[13] என்று சிறுபாணாற்றுப்படை குறித்துள்ளது.

**சிலம்பு**

இம்மலைப்பகுதிகள் அருவிநீர் வளத்தோடு நெருக்கமான மரங்கள் அடர்ந்த நிலமாகக் காணப்படுகின்றன. தலைமக்களின் பண்பு நலன்களும் நிலத்தோடு தொடர்புடையதாக மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவரால் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது வாழும் சூழலுக்கும் மக்களின் வாழ்க்கைக்குமான தொடர்பைப் புலப்படுத்துகிறது. இப்பதிவுகளில் முருகனின் சிறப்புச் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"நளியிருஞ் சிலம்பின் நன்மலை நாடன்" (நற்.304:4)
"இலங்கு வெள்ளருவியொடு சிலம்பகத்து இரட்ட" (மது.299)
"நளிமலைச் சிலம்பில் நல்நகர்" (முருகு.238)

என்னுமடிகள் உணர்த்தும்.

**உயிரோட்டம் தரும் நீர்நிலைகள்**

பலவித உயிரினத் தொகுதிகளின் உறைவிடமான கற்பூமி மலையருவியால் உயிரோட்டம் பெறுகிறது. அருவிநீர் சுனைகள், பள்ளத்தாக்குகள், ஆறுகள், ஓடைகள் என இயற்கைவழித் தடங்களையும் வளப்பம் பெறச் செய்கிறது. **இரவில் பெய்த, பெருமழையாலான மலையருவியின் உற்பத்தி, 'வாள்இலங்கு அருவி' என்றும், அதன் நிறம் 'வெள்ளருவி' என்றும், அதிவேகம் 'கடுவரலருவி' என்றும், சீரான வேகம் 'பாடின் அருவி' என்றும் அடைமொழியோடு புலப்படுகிறது.** இதனை,

"............................... பானாள்
பெருமலை மீமிசை முற்றின ஆயின்
வாள்இலங்கு அருவி தாஅய்" (அகநா.278:5-7)

"இலங்கு வெள் அருவியொடு சிலம்பகத்து இரட்ட" (மது.295)

"நெடுவரைப் படப்பை நம்மூர்க்
....................................
கடுவர லருவி காணினும் அழுமே" (ஐங்.25:3-5)

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை" (அகநா.82:1-10)

என்னும் கபிலரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. **அருவிநீரின் கடுமையான வேகம் வரைவு நீட்டிப்பால் வருந்தும் தலைவிக்கு மனத்துயரை மிகுவிப்பதாகவும், சீரான அருவியின் ஓசை இயற்கையரங்கின் இன்னிசையாகவும் புலவர்களின் மனதாள்வது புலப்படுகிறது.**

**உ.வே.சாமிநாதன் "குறிஞ்சி நிலத்துக்கு வளப்பத்தைத் தருவது அருவி. யாமத்தில் பெய்யும் மழையினால் காலையில் அருவியில் பெருவெள்ளம் பெருகிக் குறிஞ்சி நிலத்தார்க்கு இன்பத்தை உண்டாக்கும்"[14] என்கிறார். இது அருவிநீர் பாயும் இடங்களில் எல்லாம் நிலவளத்தையும், மக்களின் மனவளத்தையும் பேணுவதற்குச் சான்றாகிறது.**

**பறவை விலங்குகளின் வாழிடங்கள்**

பழந்தமிழர் பல்லுயிர்த் தொகுதிகளின் வாழ்க்கையை உற்றுநோக்கி உணர்ந்தனர். இவ்வுணர்திறன் மக்களின் வாழ்வாதாரத் தேவைக்கான உணவு, உறைவிடத் தேடல்களைச் செம்மையாக்கிக் கொள்வதில் பயன்பட்டுள்ளது. மலைநிலத்து மயில், குரங்குகளின் வாழிடமாக **'இறும்பு', 'கட்சி'** எனும் குறுங்காடுகளையுடைய நிலப்பகுதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை பன்றி, கரடி, யானை, புலி, ஆளி, முள்ளம்பன்றி முதலான விலங்குகளின் வாழிடங்களாகச் சுட்டப்பட்டுள்ளன.

'பெருங்கல் விடரளை' என்பது அருவியின் உட்புறக்குகை எனவும், 'கங்குல் அளைச்செறி' என்பது இருள்நிறைந்தகுகை எனவும், 'சேய் அளை' என்பது இருள்நிறைந்த சுரங்கம் போன்ற நீண்ட குகையாகவும் படைத்தாளப்பட்டுள்ளன. இவ்வாறு குகைகளின் தோற்றமும், தனித்தன்மையும் புலப்படும்படி விலங்குகளின் இருப்பிடங்கள் சுட்டப்பட்டுள்ளன. இவற்றை,

> **"மஞ்ஞை ஆலும் மரம்பயில் இறும்பின்**
> **கலைபாய்ந்து உதிர்ந்த மலர்வீழ் புறவு" (பெரும்பாண்.495-496)**
>
> **"கலவ மஞ்ஞை கட்சி" (மலைபடு.235)**
>
> **"……………… கேழலொடு**
> **பெருங்கல் விடரளைச் செறிய" (முருகு.311-314)**
>
> **"……………… கங்குல்**
> **அளைச்செறி உழுவையும், ஆளியும், உழியமும்"(குறி.பா.251-252)**
>
> **"சேய்அளைப் பள்ளி எஃகுஉற முள்ளின்**
> **எய்தெற இழுக்கிய கானவர் அழுகை" (மலைபடு.300-301)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. மலைநிலத்தின் இவ்வமைப்பை ச.வே.சுப்பிரமணியன் "இல்லம் போன்ற குகை"[15] என்கிறார்.

**குறிஞ்சி நில மக்களின் வாழிடங்கள்**

குறிஞ்சிநில மக்கள் வாழும் 'இருக்கை', 'குரம்பை', 'படப்பை' என்பன இயற்கையோடு இயைந்த வாழிடங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. குன்றுகள் சூழ அமைத்துக் கொண்ட இருப்பிடம், தினைத்தாளால் வேயப்பட்ட குரம்பை, மரங்களால் ஆன பரண்கள், தென்னை ஓலையால்

வேயப்பட்ட படப்பை எனப்பல பதிவுகள் காணப்படுகின்றன. அறுவடை செய்த தினைத்தாளும், வாடிய தென்னை ஓலையும் கொண்டு பயன்பாடுடைய இருப்பிடங்களை உருவாக்கிய பழந்தமிழர் **'வீட்டுத் தோட்டத்து முன்றிலில்'** மஞ்சளை வளர்த்தது அறியப்படுகிறது. இதனை,

> **"குன்றுசூழ் இருக்கை நாடுகிழவோனே"  (மலைபடு.583)**
> **"குன்று கெழு நாடன்"  (குறுந்.87:3)**
> **"பகல் மகிழ் தூங்கும் தூங்கா இருக்கை" (பெரும்பாண்.146)**
> **"இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை"  (குறி.பா.153)**
> **"...................... எம் படப்பைக்**
> **கொடுந்தேன் இழைத்த கோடுயர் நெடுவரை" (அகநா.18:13-14)**
> **"வண் தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த**
> **மஞ்சள் முன்றில் மணம் நாறு படப்பை" (பெரும்பாண்.353-354)**
> **"குன்றக் கூகை குழறினு முன்றில்"  (குறுந்.153:1)**

என்னும் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறு நிலவியல் சூழலுக்கும் தனித்தன்மைக்கும் ஏற்ப பல்வேறு பயன்களை வழங்கும் மலைநிலத்தை "அழகு மிளிரும் தோற்றப் பொலிவோடு காட்சி தரும் இந்த மலைத்தொடர்கள்தான் மருதநிலங்களைச் செழிப்பாக்கி மனிதர்களுக்குச் சோறும் நீரும் தருகிற அட்சயபாத்திரம்"[16] என்ற கருத்தால் அனைத்து நிலவாழ் மக்களுக்கும் தேவையான வளங்கள் மலைநிலத்தின் பெருங்கொடையாகப் பெறப்படுகிறது.

**மலை நிலத்து விளைநிலங்கள்**

மலைவாழ் பழந்தமிழர் தேன், மா, பலா, வாழை முதலான பழங்களையும், கிழங்குகள், தானியங்கள் முதலானவற்றையும் உணவாகக் கொண்டுள்ளனர். விவசாயம் செய்ய நிலங்களைப் பண்படுத்தி தோரைநெல், செந்நெல், வெண்ணெல், கடுகு, இஞ்சி, மஞ்சள், மிளகு, அவரை போன்றவற்றை விளைவித்துள்ளனர். இவ்வாறு இந்நில மக்களின் பொழுதாக்கச் செயல்களால் உருவான விளைநிலங்கள் **'சாரல்'**, **'புலம்'**, **'புனம்'** என்று அழைக்கப்பட்டுள்ளன. இந்நிலங்களை,

> **"நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
> **குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
> **ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி**

**இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும்**
**பல்வேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி**
**தினைவிளை சாரல் கிளிகடி பூசல்**
**மணிப்பூ அவரை .......'' (மதுரை.286-292)**
**''இலங்கு ஏந்து மருப்பின் இனம்பிரி ஒருத்தல்**
**விலங்கல் மீமிசைப் பணவைக் கானவர்**
**புலம்புக்கு உண்ணும் ......'' (மதுரை.297-299)**
**''பெரும்புனங் கவரும் சிறுகிளி ...'' (நற்.368:1)**

என்னுமடிகளால் அறியலாம். அக்காலத்தில் மலைப் பள்ளத்தாக்குகளில் உள்ள அகில், சந்தனம் முதலிய மரங்களை அழித்து; விளைநிலங்களை உருவாக்கி உணவுப்பொருட்களை உற்பத்தி செய்தமைத் தெரிகிறது.

**உச்சிமலைகள்**

சிமையம், மீமிசை, சென்னி, நனந்தலை என்னும் பதிவுகள் மலையுச்சியைக் குறிப்பிடுகின்றன. இமயம் போன்ற உயரமான மலைநிலம் சிமையம் எனச் சுட்டப்பட்டுள்ளது. இது உலகத் தோன்றலின் உயரமான நிலமாகத் தேனடைகளோடு குறிப்பிடப்பட்டுள்ளது. உச்சிமலைப் பதிவுகளை,

**''கல் வீழ்அருவி கடற் படர்ந்தாங்கு**
**பல்வேறு வகையின் பணிந்த மன்னன்**
**இமையவர் உறையும் சிமையச் செவ்வரை''**
**(பெரும்பாண்.427-430)**
**''....................... உயர்சிமைய**
**மலை நாறிய வியன்ஞாலத்து'' (மது.3-4)**
**''வான் தோய் மீமிசை'' (மலைபடு.322)**
**''சென்னிப் பயமலை நாடன்'' (குறி.கலி.43:6)**
**''ஞாயிறு தெறாஅ மாசு நனந்தலை'' (மலைபடு.272)**

முதலான பாடலடிகள் உணர்த்துகின்றன. இந்நிலப்புனைவுகள் குறிஞ்சி நிலத்துத் தலைமக்களின் வல்லமை, கொடைத்தன்மை முதலான நற்குணங்களை விளக்கும் வாழ்வியல் நெறி சார்ந்த இயற்கைப் பின்புலமாய் ஆளப்பட்டுள்ளன.

இந்நிலம் மைவரை உலகம், மிசை, வரை, பொருப்பு, குறிஞ்சி என்றெல்லாம் வழங்கப்பெறுகிறது. எழில் சூழ்ந்த மலைகள், அதனைச் சார்ந்த பல்வேறு மரங்கள், பல வடிவங்களைக் கொண்ட குன்றுகள், பல

விளைபொருட்களைப் பெற்றுள்ள சாரல்களும் இணைந்து தோற்றம் தருகிறது. இவை மன்னன் மற்றும் வள்ளல்களின் நிலவளமை, கொடைச்சிறப்பு, விருந்து போற்றுதலைப் புறப்பாக்கள் சுட்டுகின்றன. தலைவன் தலைவியின் பண்பு நலன்களை விளக்குவதற்கும்; காதல் புலப்பாட்டிற்கும்; பொருத்தமான அகப்பாக்களின் பொதுமரபாகவும் இந்நிலப்புனைவுகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

நிலவளம், நந்நீராதாரம், உயிர்க்காற்று, வான்மழை, சூரியவெப்பம் முதலானவை உலக இயக்கத்தின் ஆதார சக்திகள். இவை சமச்சீரற்ற நிலையில் உலகை அச்சுறுத்துகின்றன. நன்மை செய்யும் நந்நீரில் வாழும் சிறுமீன்கள், தவளைகள், தட்டாண்பூச்சிகள் முதலான பல மண்ணுயிர்களும் மறைந்து, கொசுக்களும், நுண்ணுயிரிகளும் உயிர்க்கொல்லியாய் உலவுகின்றன. இவை அனைத்திற்கும் முதல்நிலத் தீர்வாய் மலைநிலத்தின் மூலிகைத் தாவரங்கள் பேணப்படுவதும், மண்ணுயிர்கள் காக்கப்படுவதும் அவசியம் என்பது உணரற்பாலது.

**குறிஞ்சிநிலப் பொழுதுகள்**

நிலமும் காலமும் உலகிலுள்ள உயிர்களுக்கான தேவைகளையும், தேடல்களையும் தோற்றுவிக்கின்றன. எந்நிகழ்விற்கும் முதலாகவும், முனைப்பாகவும் இருப்பவை இவ்விரண்டுமாகும். பண்டைத்தமிழர் காலத்தைப் **பொழுது** என்றுரைத்தனர். இவை நாளின் பகுப்புகளாகவும், ஆண்டின் பகுப்புகளாகவும் சிறுபொழுதுகள் பெரும்பொழுதுகள் என இரு கூறுகளாய் இயங்கியுள்ளன.

ஐவகை நிலங்களும், அந்நிலம்வாழ் மக்களின் உரிப்பொருட்சிறப்பிற்கேற்ற பொழுதுகளும் தொல்காப்பியரால் வகைப்படுத்தப்பட்டுள்ளன. குறிஞ்சி நிலத்திற்கு உரிய பொழுதுகளாய்;

> **“.............................. குறிஞ்சி**
> **கூதிர் யாமம் என்மனார் புலவர்”[17]**

> **“பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப”[18]**

என்னும் நூற்பாக்கள் மலைநிலத்தின் சிறுபொழுதாக யாமத்தையும், பெரும்பொழுதாகக் கூதிர்ப் பருவத்தையும், முன்பனிப்பருவத்தையும் குறித்துள்ளன. இப்பொழுதுகளோடு பாண்டியநாட்டுப் புலவர் தம்

குறிஞ்சிப்பாக்களில் வைகறை, காலை, பகல், மாலை என்னும் சிறுபொழுதுகளும், எந்நிலத்தையும் வளப்படுத்தும் கார்காலமும் சுட்டப்பட்டுள்ளன.

**கூதிர்பருவம்**

கார்காலத்தைத் தொடர்ந்து வரும் ஐப்பசி, கார்த்திகை மாதங்கள் குளிர்ச்சி பொருந்திய வாடைக்காற்றுடன் கூடிய கூதிர்பருவமாகும். இவை இந்நிலக் காதலர்க்குரிய பருவமாய் அமைந்துள்ளது. இக்காலத்தில் தலைவன் உடனிருப்பதைத் தலைவியர் விரும்புவர் என்பதை,

> **"......................... விரை பெயல்**
> **அரும்பனி அளைஇய கூதிர்ப்**
> **பெருந்தண் வாடையின் முந்து வந்தனனே" (ஐங்.252:3-5)**

என்னுமடிகளில் கூதிர்ப்பருவத்து வாடைக்காற்று வீசும் முன்னரே தலைவன் வந்துவிட்டதைக் குறிப்பிட்டுள்ளது. கார்காலப் பெருமழையின் பின் எஞ்சியவை பிசிர்களாக மேகம் தூவும். இவற்றைச் "சில்பெயல்"[19] என்பது தெரிகிறது. இது குளிர்ச்சி பொருந்திய சூழலுக்குக் காரணமாகிறது.

**முன்பனிப்பருவம்**

பனிப்பொழிவுகள் குறித்தும், நள்ளிரவில் குளிர்ந்த வாடைக்காற்று தரும் துன்பம் குறித்தும் பல பதிவுகள் உள்ளன. பனியின் குளிருக்கு அருமருந்தாகத் தலைவனின்றி வேறொன்றுமில்லை என்னும், பதிவுகள் உள்ளன. இப்பருவம் குறிஞ்சிநிலக் காதலர்க்கு இனியகாலமாகப் புலப்படுகிறது. பிரிவில் வருந்தும் தலைவியருக்கு இப்பருவம் ஆற்றுவித்தலுக்கு அரிய பருவமாக உள்ளது. இப்பனிக்காலக் கொடுமையை **அரும்பனி யச்சிரம், கடும்பனி யச்சிரம்** என்னும் அடைமொழிகள் உணர்த்துகின்றன. இதனை,

> **"பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்**
> **ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்**
> **அரும்பனி யச்சிரந் தீர்க்கும்**
> **மருந்துபிறி தில்லை யவர் மணந்த மார்மே" (குறுந்.68:1-4)**

> **"தண்வரல் வாடை தூக்கும்**
> **கடும்பனி யச்சிர நடுங்கஞ குறவே" (குறுந்.76:5-7)**

என்னும் அள்ளூர் நன்முல்லையார், கிள்ளி மங்கலங்கிழாரின் பாடலடிகளால் அறியமுடிகின்றது.

**கார், கோடைக்காலம்**

கார்பருவம் புவியைப் பொலிவுறச் செய்யும். இங்கு உள்ளத்தை மகிழ்வுறச் செய்யும் நிகழ்வோடு ஒப்பிட்டு உரைக்கப்பட்டுள்ளது. வறண்ட நிலமும், வறுமையுற்ற நாடும், உழவுத் தொழிலின்மையால் கிடப்பிலிருந்த கலப்பையும் கூறப்பட்டுள்ளன. குளங்களில் நீரின்மையால், குன்றுகளில் பறவைகள் இல்லாதது கோடைப்பருவ நீட்சியாய்த் தெரிகிறது. இந்நிலையில் ஒரே இரவில் பெய்த பெருமழையால் நீர்நிறைந்த குளங்களைக் கண்டு ஊரார் மகிழ்வது போன்றது; தன்னை மணம் செய்வதற்காகத் தலைவன் வருவது என்பதை,

> **“நாடு வறம்கூர, நாஞ்சில் துஞ்ச,**
> **கோடை நீடிய பைது அறு காலை**
> **..........................................**
> **பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை**
> **பல்லோர் உவந்த உவகை எல்லாம்**
> **என்னுள் பெய்தந்தற்றே”  (அகநா.42:5-12)**

என்னுமடிகளால் கபிலர் குறிப்பிட்டுள்ளார். இம்மழை குறிஞ்சி நிலத்தை வறட்சியிலிருந்து மீட்டு வளமை உணர்த்தும் உவமையாகவும் கோடை மற்றும் கார்பருவப் பதிவுகளாகவும் இடம்பெற்றுள்ளன.

எந்நிலமும் வளம்பெறுவதற்குக் கார்கால மழையின் தேவை இன்றியமையாதது என்பதும் உணரற்பாலது. அந்தந்த நிலங்களின் சிறப்புறு பொழுதுகளோடு, பாடற்பொருளுக்குத் தேவைப்படும் பொழுதுகளும் புனைவுகளாய் இடம்பெற்றுள்ளன.

**யாமம் பொழுது**

பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் கங்குல், நடுநாள், இரவு எனும் பல பெயர்களில் யாமப்பொழுது குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பொழுதை, பாம்பு இரைதேடும் பொழுதாக மதுரைக்கொல்லன் வெண்ணாகனார் குறித்துள்ளார். முடத்திருமாறன் நள்ளிரவின் காரிருளைப் பதிவு செய்துள்ளார். இதனை,

**"அரவிரை தேரும் ஆரிருள் நடுநாள்"** **(நற்.285:1)**
**"கனையிருள் நடுநாள்"** **(நற்.228:13)**

என்பன உணர்த்தும்.

நள்ளிரவைக் குறிக்கும் இக்காலப்புனைவு இரவுக்குறி விரும்புவதையும், விலக்குவதையும் குறித்த பதிவுகளாய் கபிலரின் பாக்களில் இடம்பெற்றுள்ளன. பகலில் மட்டுமின்றி இரவிலும் வருக எனும் தலைவியும், இரவில் நீ வராததால் நம் உறவுமாறாது, நள்ளிரவில் பெய்த பெருமழை மறுநாளும் மலை முழைஞ்சுகளில் ஒலிப்பது போல் நினைவில் நாளும் வளரும் எனும் தலைவியும் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

இரவுக்குறி மறுப்பது விரைவில் மணந்துகொள்ளத் தூண்டுவதாய் அமைந்துள்ளது. இதனை,

**"கங்குல் வருதலும் உரியை"** **(அகநா.2:15)**
**"காம மொழிவ தாயினும் யாமத்துக்**
**கருவி மாமழை வீழ்ந்தென வருவி**
**விடரகத் தியம்பும் நாடவெம்**
**தொடர்புந் தேயுமோ நின்வயி னானே"** **(குறுந்.42:1-4)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

யாமப்பொழுதோடு வைகறை, பகல், மாலை முதலான சிறுபொழுதுகளும் இடம்பெற்றுள்ளன. இவை பெருமழைப்பொழிவு, பகல்நேர வெம்மை, விரைந்து வரும் மாலைப்பொழுது, அந்தணர் அயர்வுற்றிருத்தல் முதலான நிகழ்வுகளை விளக்குகின்றன. இதனை,

**"பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை"** **(அகநா.42:10)**
**"கடும்பகல் வருதல் வேண்டும்"** **(அகநா.182:13)**
**"ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்"** **(குறுந்.58:3)**
**"துனைஇய மாலை துன்னுதல்..."** **(குறி.பா.230)**
**"அந்தி அந்தணர் அயர"** **(குறி.பா.225)**

என்னும் கபிலர், வெள்ளிவீதியாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்புனைவுகள் குறிஞ்சிநில மக்களின் வாழ்வையும், அந்நிலத்தின் பருவக்காலச் சூழலையும் புலப்படுத்துகிறது.

**கானக நிலம்**

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும். இக்காடுகள், அமைவிடச் சூழலின் வளமையைச் சுட்டும் இயற்கையின்

விளைநிலமாகும். எண்ணற்ற தாவரங்களும், விலங்குகளும், பறவைகளும் வாழும் இக்காடுகள் பல்லுயிர்ப் பெருக்கத்தின் தாய்மடியாகத் திகழ்கின்றன. உலக இயக்கத்தின் ஆதாரமாக விளங்கும் உயிர்க்காற்றும், நீரும் இக்காடுகளின் கொடையாதலால், காடுறை உலகம் எனத் தொல்காப்பியர் உலக இயக்கத்தின் உறைவிடமாகக் காடுகளைச் சுட்டியுள்ளமைப் புலனாகிறது.

**முல்லைநில வகைப்பாடுகள்**

கானகத்தின் பல்வேறு கூறுகளை எடுத்துக்காட்டும் பதிவுகளாய் அகன்ற பரப்பு, காட்டுவளம், ஆரவாரக்களம், போர் நிலம், விளைநிலம், மேய்ச்சல் நிலம், பறவை விலங்குகளின் வாழிடம், மக்களின் வாழிடம் போன்ற நிலப்புனைவுகளைத் தன்னுள் கொண்டுள்ளது.

**அகன்ற நிலம்**

இந்நிலமானது புறவு, வியன்புனம், தலை இறும்பு, கானம், சீறூர், வரைப்பு என்னும் பெயர்ப் பதிவுகளைக் கொண்டுள்ளது. போர் முடித்து மீளும் தலைவன் தேர்ப்பாகனிடம் தம் பயணத்திற்குப் பயன்படும் குதிரையின் பெருமையைக் கூறுமிடத்து அகம்பன் மாலாதனார்,

> **“இருநிலங் குறையக் கொட்டிப் பரிந்தின்று**
> **ஆதிபோகிய அசைவில் நோன்தாள்**
> **மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி”** (நற்.81:1-3)

என்கிறார். இக்குதிரை நீண்ட தூரம் களைப்பின்றி அகன்ற நிலம் குழிவிழும்படி விரைந்து செல்லக்கூடியது தெரிகிறது.

இந்நிலத்தை “மலைகளை அடுத்துள்ள காடுகள், செழுமைக்கும் அதனால் ஏற்பட்ட போர்களுக்கும் இலக்கான பகுதிகளாகும்”[20] என்பதால் முல்லையின் அகன்ற நிலங்கள் போர்க்களமானதும் புலனாகிறது. முல்லையரும்புகள் முதிர்ந்தன; குளிர்ந்த கார்காலத்திற்கேற்ற அகன்ற முல்லை நிலங்களின் அழகும் கூடின; கார்கால வரவின் பின்னும் காதற்தலைவன் வரவில்லை எனும் கூற்றில்,

> **“ஓங்குமலை வியன்புனம்”** (நற்.98:3)
> **“முகைமுற் றினவே முல்லை முல்லையொடு**
> **தகைமுற் றினவே தண்கார் வியன்புனம்”** (குறுந்.188:1-2)

எனக் கானகத்து அகன்ற நிலத்தின் செழுமையும், தன்மையும் 'புல்ஆர்', 'தண்கார்' என அடைமொழி கொடுத்துப் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் முதலானோரின் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

**காட்டுவளம்**

'காட்டின் வளமே நாட்டின் வளம்' என்பதற்கேற்ப பண்டைப்பாக்களில் காடுகள் மக்களின் தேவைக்கேற்ற வளமையோடு காணப்படுகின்றன. நிலங்களின் தன்மைக்கு ஏற்ப மரங்களின் வளர்ச்சியும், வனப்பும் இருந்துள்ளன. காயா, கொன்றை, குருந்தமரம், உழுந்து, முல்லைக்கொடி, கவலைக்கிழங்கு போன்ற பல்வகைத் தாவரங்கள் இந்நில வளமையைச் சுட்டுவனவாகும். கார்கால மழையால் செழிப்படைந்த காடுகள் மலர்களாலும் அழகு பெறுவதை,

**"தலைப்பெயல் தலைஇய தண் நறுங்கானம்" (முருகு.9)**

என்னும் பாடலடி விளக்குகின்றது.

மழைப்பொழிவால் நீர்நிறைந்த பள்ளங்களில் உள்ள தேரைகள், ஒன்று சேர்ந்த பலவாத்திய ஒலிகளைப் போல ஒலியெழுப்பின. பிடவ மலர்கள் உதிர்ந்த நிலம் அழகு பெற்றது. பாம்பின்படம் போன்று மேல் நோக்கிய காந்தள் பூவின் மொட்டுகள் மணத்தோடு இதழ்விரித்தது. இணைமான்கள் இனிதே தங்கின. இவ்வாறெல்லாம் முல்லை நிலம் வளப்பத்தோடும் வனப்போடும் காணக்கிடைப்பதை,

**"படுமழை பொழிந்த பயன்மிகு புறவின்**
**..............................................**
**காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி" (அகநா.154:1-10)**

என்னும் பொதும்பில் புல்லாளங்கண்ணியாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**புறவு**

தாவர வளரிடம், விளைச்சல் நிலம், முல்லை நிலம் முதலானவை **புறவு** என்னும் சொல்லால் ஆளப்பட்டள்ளது. இது பெரும்பான்மையாக தாவரங்களின் வளரிடங்களாகவும், விளைநிலங்களாகவும் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

**"........................................ முல்லை**
**நுண்முகை யவிழ்ந்த புறவு" (நற்.59:9-10)**
**"முல்லைஅம் புறவில்" (அகநா.384:5)**
**"................... மலர்வீழ் புறவு" (பெரும்.496)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகிறது. இப்பதிவுகள் கபிலர், ஒக்கூர் மாசாத்தியாரின் பாக்களில் இடம்பெற்றுள்ளன.

**"அவிழ் தளவின் அகன் தோன்றி**
**நகு முல்லை, உகு தேறுவீ**
**பொன் கொன்றை மணிக் காயா**
**நல்புறவு............"**[21]

என்ற அடிகளுள் முடத்தாமக்கண்ணியாரின் கருத்தும் முல்லைநிலத் தாவரங்களின் வளரிடத்தைப் புறவெனக் குறிக்கிறது.

**விளைச்சல் நிலம்**

சிறுதினை, எள், வரகு முதலான தானியங்கள் வளர்ந்த நிலத்தில் நௌவி மான்கள் காணப்படுகின்றன. கொன்றை மரநிழலில் பாய்விரித்ததைப் போன்ற பரவிய பாறைகள் இருக்கின்றன. பசும் பயிர்களின் மேல் முசுண்டை, முல்லை போன்ற மலர்கள் உதிர்ந்தும், அருகிலுள்ள சிறு பள்ளங்களில் நெய்தல் மலரும், தொய்யில் கொடியும் காணப்படுகின்றன. இவை வெறியாட்டுக்களம் உருவாக்கிய வல்லவனை நினைவுறுத்தியது என முல்லையின் விளைநிலம் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**"வண்டுசூழ் வட்டியள் திரிதரும்**
**தண்டலை உழவர் தனிமட மகளே" (நற்.97:8-9)**
**"சிறுதினை கொய்ய கவ்வை கறுப்பக்**
**கருங்கால் வரகின் இருங்குரல் புலர**
**..........................................**
**முல்லை சான்ற புறவு..." (மதுரை.271-285)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றுள் பாண்டியன் மாறன்வழுதி முல்லை நிலத்தின் உழவுத்தொழிலைக் குறிப்பிட்டுள்ளார்.

**வன்புலம்**

முல்லை நிலத்தின் திடத்தன்மைப் புலப்படும்படி **வன்புலம்** என்னும் பல பதிவுகள் இடம்பெற்றுள்ளன. இப்பதிவுகள் முல்லை நிலத்தில் உள்ள விளைச்சல் நிலம், அறுவடைக்காலப் பயன்பாட்டுக் களம் என்பனவாய் காணப்படுகிறது. இதனை,

"வன்புலக் காட்டு நாட்டதுவே" (நற்.59:6)
"அரிபுகு பொழுதின் இரியல் போகி
வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன
வளர்களம் பிள்ளை தழீஇ குறுங்கால்
கறை அணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புலம் இறந்த பின்றை" (பெரும்பாண்.205-206

என்பதனால் அறியப்படுகிறது. மென்புலம் என்ற பகுப்பும் தமிழில் உண்டு.

**சீறூர்**

இவர்கள் வசிக்கும் ஊர்களில், சிறுகுடில்கள் மரங்களாலும், வரகின் தாள்களாலும் வேயப்பட்டிருந்தன. கதவுகள் மூங்கிலால் அமைக்கப்பட்டிருந்தன. அதனைச் சுற்றி முள்வேலியும் அமைந்திருந்தது என்பதனை,

"குளகு அரையாத்த குறுங்கால் குரம்பை
செற்றை வாயில், செறிகழிக் கதவின்
..............................................
இடுமுள் வேலி......" (பெரும்பாண்.148-154)
"பருவ வானத்துப் பாமழை கடுப்பக்
கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்" (பெரும்பாண்.190-191)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**குறுங்காட்டில் விலங்கினங்கள்**

காடுகள் பல்லுயிர்ப் பெருக்கத்தின் சிறப்பிடமாகும். இங்குப் புலிகளுக்கு அஞ்சிப் பிணைமான்கள் ஓடுகின்றன. அவற்றைக் கலைமான்கள் ஓசையெழுப்பி அழைக்கின்றன. இவ்வாறு பல விலங்குகள் வாழும் தலை இறும்பில் மரைவிடை என்னும் மானினம் வில்லின் ஒலிக்கு அஞ்சி ஓடுவது குறிப்பிடப்பட்டுள்ளது. இது குறுமரங்களும் புல்வெளிகளும் நிறைந்த குறுங்காட்டைப் புலப்படுத்துகிறது. இதனை,

"புலியுற வெறுத்ததன் வீழ்பிணை உள்ளி
கலைநின்று விளிக்கும் கானம்ஊழ் இறந்து
சிலைஒலி வெரீஇய செங்கண் மலைவிடை
தலை இறும்பு" (மலைப்படு.404-407)

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அடர்ந்த காடுகளும், செடிகளும், புதர்களும், புல்வெளிகளுமாய் முல்லை நிலம் காணப்படுகிறது. கால்நடைகளுக்கு மேய்ச்சல் நிலமாகவும், கோவலர்க்குப் புன்செய் விளைநிலமாகவும், பறவைகளும், விலங்குகளும் வாழும் தகைமையோடும்

அமைந்துள்ளது. சோலைமரங்களும் அதன் மலர்களால் பொலிவுறும் நிலப்பதிவுகளும் எடுத்தாளப்பட்டுள்ளன.

ஒரு நாட்டின் நிலப்பரப்பில் 33 விழுக்காடு காடுகளாக இருந்தால் அந்நாடு வளம்பெற்ற நாடாகும். “இந்தியாவின் மொத்த நிலப்பரப்பு 32,87.263 ச.கிலோ மீட்டராகும். இதில் இருபது விழுக்காடளவு வனப்பரப்பு (6,57,526 ச.கி.மீ.) இருந்துள்ளது.”[22] இப்பரப்பளவு, மக்கள் மரங்களை வெட்டி அழிப்பதாலும்; இயற்கைச் சீற்றங்களான புயல், காட்டுத்தீ முதலான நிகழ்வுகளாலும் மேலும் குறைந்துள்ளது.

இருக்கும் காடுகளைப் பாதுகாப்பது, வளமற்ற நிலங்களிலும் வளரக்கூடிய போங்கம், உதியம், வேம்பு முதலான மரங்களை நட்டு வளர்ப்பது முதலான செயல்கள் தேவையானதாகும். இது வனங்களின் பல்லுயிர்த் தொகுதிகளைப் பாதுகாப்பதோடு, புவியின் வெப்பநிலையைச் சமன்செய்யவும் உதவும்.

**கானகத்தில் கார்காலம்**

முதற்பொருளில் நிலத்தின் வளப்பத்தையும், மாறுபடும் தோற்றப் பொலிவையும் நிகழ்த்துவது பொழுதுகளேயாகும். கார்காலத்திற்கு “மாரிக்காலம்”[23] என்று கழகத் தமிழ் அகராதி பொருளுரைக்கிறது. “வாடை வீசலு மிந்திரலோப மயில் சேகய மகிழ்தலும், வெண்காந்தள், கொன்றை, கூதளம், வேங்கை, காக்கணம், முல்லை, கடம்பு, காயா, குருந்தியை மலர்தலும், அன்னக்கிளி, குயில் வருந்துதலும், தாமரை, முதனீர் மலரேங்கலுமாம்”[24] என் தமிழ்மொழி அகராதி விளக்குகிறது.

**கார் - இரும்பனி வாடை**

காடுகளின் வளமைக்கு மழையும், மழைப்பொழிவிற்குக் காடுகளும் உறுதுணையாகின்றன. கீழக்காற்று வீசுவதால், அலைகளிலிருந்து நீராவி பிசிர் போன்ற வெண்மேகமாய் ஆகாயத்தில் செறிவுறுகிறது. இச்சூல் கொண்ட கரியமேகம் மிக்க மழையைப் பொழிகிறது. கார்காலத்தின் இறுதியில் தொடங்கும் முன்பனிக் காலத்தில் முதிர்ந்த உழுந்தின்இலைகள் சிதையும்படி வாடைக்காற்று வீசுகிறது என்பதனை,

**“கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்**
**திரைப்பிதிர் கடுப்ப முகடுகந் தேறி**
**நிரைத்துநிறை கொண்ட** *கமஞ்சூன் மாமழை*
**அழிதுளி கழிப்பிய அழிபெயற் கடைநாள்**
*இரும்பனிப் பருவத்த* **மயிர்காய் உழுந்தின்**
**அகலிலை அகல வீசி அகலாது**
**அல்கலும் அலைக்கும்** *நல்கா வாடை”* **(நற்.89:1-7)**

என விளக்கும் இப்பாடலடிகள் மழையின் உருவாக்கத்தைத் தெளிவுபடுத்தும். இதனை இளம்புள்ளூர்க்காவிதியாரால், **கமஞ்சூன் மாமழை, இரும்பனிப் பருவம், நல்காவாடை** எனச் சூழலைத் தெளிவுபடுத்துமாறு பெரும்பொழுதுகள் புனையப்பட்டுள்ளன. இதனை, “கார்பருவத்தினிறுதியில் வீசி வருத்துகின்ற வாடையெனக் கூட்டுக”[25] என விளக்கப்பட்டுள்ளது.

**வருத்தும் கார்காலம்**

தலைவி பிரிந்த தலைவனையெண்ணிக் காதலுறுதியோடு காத்திருக்கிறாள். கடல்நீரை முகந்த மேகம், கடும் இடியோடு பொழியும் பெருமழை அவளுக்குத் துன்பம் தருகிறது. காட்டில் கோவலர் கொளுத்திய, மரவேரடி வெந்தனலால் தகிப்பதைப் போல் இன்ப வேட்கையால் அவள் வருந்துகிறாள். இதனை, மருங்கூர்ப்பட்டினத்துச் சேந்தன்குமரனார்,

**“நளிகடல் முகந்து செறிதக இருளிக்**
**..............................................**
**பெருமர வேரடி போல**
**அருளிலேன் அம்ம அளியேன் யானே” (நற்.299:4-9)**

என்றுரைத்துள்ளார்.

மிகுந்த மழையால் கானம் செழித்து, தண்ணிய நறுமணத்தோடு காணப்படுகிறது. முல்லைக்கொடி தம் தொகுத்த முகைகளைப் பற்களாக்கி நகைக்கிறது எனத் தம் கற்பனைத் திறத்தை ஒக்கூர் மாசாத்தியார் காட்சிப்படுத்துகிறார். இதனை,

**“படுமழை பொழிந்த தண்ணறும் புறவு” (நற்.361:4)**
**“பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்**
**தொகுமுகை யிலங்கெயி றாக**
**நகுமே தோழி நறுந்தண் காரே” (குறுந்.126:3-5)**

என்று முல்லை நிலத்தின் நறுமணமும், கார்காலத்தின் செழுமையும் சுட்டப்பட்டுள்ளன.

**முதல்மழை**

**தலைப்பெயல், புதுப்பெயல்** என்று கார்காலப் புதுவரவும், **பாமழை, மாமழை** என்று மழையின் அளவும் பதிவாகியுள்ளன. இதனை,

> **"பொய்யா வானம் *புதுப்பெயல்* பொழிந்தென"** **(நெடுநல்.2)**
> **"பருவ வானத்துப் *பாமழை*"** **(பெரும்.190)**
> **"கார்கோள் முகந்த கமம்சூல் *மாமழை*,**
> **வான்போழ் விசும்பில் வள்உறை சிதறித்**
> ***தலைப்பெயல்* தலைஇய தண்நறுங் கானம்"** **(முருகு.7-9)**

எனும் நக்கீரரின் பாக்களினடிகள் புலப்படுத்துகின்றன. முல்லைத் திணைக் கூற்றுகளில் "பெரும்பாலானவை வினைவயிற் பிரிவு, பருவங்கண்டு அழிதல், பருவ வரவின்கண் ஆற்றாமை, பருவங்கண்டு வேறுபடல், பிரிவிடை வருந்துதல், பிரிவிடை ஆற்றுவித்தல், பிரிவிடை வற்புறுத்தல் வரைவிடை ஆற்றாமை எனும் பொருண்மைகள் பற்றியனவாக வினைவயிற் பிரிவோடு தொடர்புடைய கூற்றுகளாகவே இடம்பெற்றுள்ளன."[26] இப்புனைவுகளுக்கு முல்லையும், கார்பருவமும் பொருத்தமுற அமைந்துள்ளன.

**மாலைப்பொழுது**

பகலை மாய்த்திட்ட அந்திப்பொழுதில் பெய்யும் மழையும், குவிந்து கொள்ளும் நெய்தல் மலரும் இடம்பெற்றுள்ளன. கையறுமாலை, புன்கண்மாலை, சிறுபுன்மாலை, அருளில்மாலை என்பன தனிமைத்துயர் தரும் கருத்தாளமிக்கப் பதிவுகளாகக் காணப்படுகின்றன. இதனை,

> **"பகல்மாய் அந்திப் படுசுடர்"** **(அகநா.48:23)**
> **"மாலை மணிஇதழ் கூம்ப"** **(அகநா.150:10)**
> **"புன்கண் மாலையும் புலம்புதந் துறுத்தே"** **(நற்.89:11)**
> **"பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை"** **(நற்.54:5)**
> **"சிறுபுன்மாலை யுண்மை, அறிவேன்"** **(குறுந்352:5-6)**

முதலான பாடலடிகள் தெளிவிக்கின்றன. முல்லை நிலத்தில் ஆற்றியிருத்தலுக்கு உரியதாய் கார்காலமும், மாலைப்பொழுதும் பதிவுகள் பெற்றுள்ளன. இது அக்கால முல்லைநில மாந்தரின் வாழ்வியலையும், காடுகளின் வளப்பத்தையும் விளக்கும் புனைவுகளாய் இடம்பெற்றுள்ளன.

இவை தங்கால் முடக்கொற்றனார், குறுவழுதியார், இளம்புல்லூர்க்காவிதி, மதுரைச் சேந்தன்கண்ணனார், கடியலூர் உருத்திரங்கண்ணனார் முதலான பாண்டியநாட்டுப் புலவர் பாக்களில் இடம்பெற்றுள்ளன.

முல்லைநிலம் காடுகளின் பண்பை விளக்கும் பதிவுகளாகவும்; இக்காடுகளால் பெறும் நிலவியல் பயன்பாட்டையும் காட்சிப்படுத்துகிறது. நிலத்தின் கடினத்தன்மை வன்புலம் எனவும், அகன்ற பரப்பு வியன்புலம், வியன்கா எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. மழைபொழிந்து செழித்த காடுகளில் மலர்களின் மணமும், காட்டுவளமும் தெளிவுறும் பதிவாய்த் **தண்நறுங்கானம்** எனப்படுகிறது. புலியால் மான்கள் மருளும் குறுங்காடு ‘தலை இறும்பு’ எனவும் இந்நிலத்து நிகழ்வுகள் நிலச்சூழலோடும், பல்லுயிர்த் தொகுதிகளின் வாழ்வோடும் ஒருங்கிணைந்து சுட்டப்பட்டுள்ளன.

### செழுமைச் சமவெளி மருதம்

மருதநிலம் வளமையான மண் வளமும், நீர் வளமும் பெற்றதனால் உழவுத் தொழிலில் சிறந்திருந்தது. நீராதாரச் சூழல், நிலவளமைக்கு ஏற்ப இந்நிலம் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் பழனம், ஆறு, கயம், குளம், பொய்கை, கழனி, செறு தண்பணை, வயல், இருக்கை, இலஞ்சி, இல்லம், குட்டம், பொழில் என வழங்கப்பட்டுள்ளது. இதனைக் குளோரியா சுந்தரமதி “மருதநிலம் கழனி, பழனம், ஆறு, பொய்கை, பொழில், மக்கள் உறையும் ஊர் என்னும் பொருட்கூறுகளாய் புனையப்பட்டுள்ளன”[27] என்கிறார்.

### சேற்றுவயல்

நீராதாரம் மிக்க நிலமாதலால் நன்செய் பயிர்கள் விளைவதற்கு ஏற்புடையதாய் மருதநிலம் அமைந்துள்ளது. நெல்லும் கரும்பும் இந்நிலச் சிறப்புப் பயிர்களாகக் காணப்படுகின்றன. விளைநிலங்கள் திருந்திய (செஞ்சால்) உழவால் மண்வளம் பெற்றும், நீர் நிறைத்தும் சேற்றுவயலாக்கப்படுவதைச் ‘செறு’ என்றுரைத்து, நெல்நடவுக்கு ஏற்ற நிலமாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“செஞ்சால் உழவர் கோற்புடை மதரிப்**
**பைங்கால் செறுவின் அணைமுதற் புரளும்” (நற்.340:7-8)**
**“முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்”**
**(பெரும்பாண்.212)**

என்னும் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன. நக்கீரர் திருந்திய உழவால் மண் வளம் பெறும் என்பதைக் கூறியுள்ளார்.

**கோடை உழவு**

தலைவன் ஊடல் கொண்ட தலைவியிடம் பலவாறு பேசி அவள் மனத்தை நெகிழ்விக்கிறான். இதற்கு உவமையாய் பலமுறைக் கோடைக்கால உழவு செய்ததால் செம்மையாகும் நிலம் 'செய்' எனக் கூறப்பட்டுள்ளது. இது விளைநிலங்களின் வளம் பேணுவதற்குக் கோடை உழவின் முக்கியத்துவத்தை இயற்கையோடு இணைத்துக் காட்சிப்படுத்துகிறது. இதனைப் பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப்பெருவழுதியின்

**"..................... உறுபெயல்**
**தண் துளிக்கு ஏற்ற பல உழு செஞ்செய்**
**மண் போல் நெகிழ்ந்து......"** **(அகநா.26:23-25)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**பெருஞ்செய்**

பெரிய நெல்வயல்களில் காஞ்சிமரத்துண்டுகள், கரும்புக்கழிகள் சேர்த்து அணைபோட்டு நீர்தேக்கி வைக்கப்படுகிறது. இந்நிலம் 'பெருஞ்செய்' எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

**"காஞ்சிஅம் குறுந்தறி குத்தி தீம்சுவை**
**வெண்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து**
**பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி"** **(அகநா.346:6-8)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. நீர்த்தேவையைக் கருத்திற்கொண்டு இவ்வாறு அணைபோட்டிருந்தால் அந்தவயலில் நீர்நிறையும் முன்னர் வேறொருவர் நீர்வழித்தடத்தைப் பயன்படுத்தக் கூடாது என்பது இக்காலத்தும் நன்செய் நிலஉழவர்களின் வழக்கத்தில் உள்ளது.

நெல் விளைந்த வயலில் கிடைக்கும் ஆமை உணவாதல் குறித்த பதிவுகளாய்,

**"அம்கண் அகல்வயல் ஆர்பெயற் கலித்த**
**வண்தோட்டு நெல்லின் வருகதிர்"** **(நெடு.21-23)**
**"வயல் ஆமைப் புழுக்கு உண்டும்"** **(பட்.64)**

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன.

**கழனி**

நெல்லும், கரும்பும் விளையக்கூடிய நிலம் ‘கழனி’ என்று அழைக்கப்பட்டுள்ளது. இந்நிலம் உழவால் பண்பட்ட, நீருள்ள நிலமாகக் காணப்படுகிறது. இவ்விளைநிலம், மருதநிலத்து நீர்நில வாழ் ஆமை, வாளைமீன் முதலானவற்றின் வாழிடமாக மிகுந்த வளமையோடு தெரிகிறது. செங்குளவியின் நிறமொத்த செந்நெல் இக்கழனிகளில் விளைந்தமை அறியப்படுகிறது. இதனை,

> **“கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து**
> **……………………………………**
> **நெல்லுடை மருகின் நன்னர் ஊர” (அகநா.306:6-8)**
> **“கணைக் கோட்டு வாளை**
> **………………………………**
> **அள்ளலங் கழனி உள்வாய் ஓடி” (நற்.340:5,6)**
> **“…………………… வாங்குகதிர்க் கழனி**
> **கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன**
> **பைதுஅற விளைந்த பெருஞ்செந்நெல்”(பெரும்பாண்.228-230)**

முதலான பாடல்களின் அடிகளால் தெரிகிறது. இதனை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார், நக்கீரர் முதலானோர் குறிப்பிட்டுள்ளனர்.

இவ்விளைநிலம் குறித்து சீனிவாசன் “சங்க இலக்கியங்களில் கழனி பெரும்பான்மையும் நெல்விளையும் புலமாகவே காட்டப்பட்டுள்ளது. சிறுபான்மை கரும்புவிளையும் புலமாகவும் காட்டப்பட்டுள்ளது”[28] எனப் பதிவு செய்துள்ளார். மருதநிலத்தில் நெல் முதன்மைப் பயிராகவும், கரும்பு வணிகப் பயிராகவும் அறியப்படுகிறது.

**நீர்நிலைகள்**

**கயம், பெருங்குளம், பொழில், பழனம், பொய்கை, ஆறு** முதலான மருதநிலத்து நீர்நிலைகள் இடம்பெற்றுள்ளன. இவை நீர்த்தேக்கங்களாய்ப் புலப்படுகின்றன. கயம் என்பது மருதநிலத்துக்குத் தேவையான நீரைத் தேக்கிவைத்துள்ள நீர்நிலையாகத் தெரிகிறது. இதில் தாமரை, வள்ளைக்கொடி, ஆம்பல் முதலிய மலர்கள் நிறைந்து காணப்படுகிறது. மருத நிலத்தில் காணப்படும் வாளைமீன் குறித்த பதிவுகள் உள்ளன. காவிரிப் பேரியாற்றுப் படுகையில் உள்ள நீண்ட

கயத்தில் பாணர்கள் தூண்டிலிட்டு வாளைமீனைப் பிடிப்பது கூறப்பட்டுள்ளது. இதனை,

**"நெருநல், மணி கண்டன்ன துணி கயம் துளங்க**
**இரும்பு இயன்றன்ன கருங்கோட்டு எருமை" (அகநா.56:1-3)**
**"கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று**
**அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க**
**.....................................**
**காலை தந்த கணைக்கோட்டு வாளை" (அகநா.126:5-7)**

என்னும் மதுரை அறுவை வாணிகள் இளவேட்டனார், நக்கீரர் முதலானோரின் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

**பெருங்குளம்**

பாண்டிய மன்னனான செழியன் பெரிய அளவிலான நீர்த்தேக்கத்தை அமைத்துள்ளார். அதிலிருந்து மடைதிறந்த நீர் கால்வாய் வழியாகப் பாய்ந்து கழனிகளை வளப்படுத்தியுள்ளது. இப்பெருங்குளத்தில் வாளைமீன்கள் இருந்துள்ளன. இதனை,

**"கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்**
**படைமாண் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்**
**காலணைந்து எதிரிய கணைக்கோட்டு வாளை" (நற்.340:2-4)**

என்னும் நக்கீரரின் பாடலடிகள் விளக்குகின்றன.

**பொழில்**

கார்காலப் பயனால் மருதநிலத்தில் பாக்கு மரங்கள் நிறைந்துள்ள சோலையில் அம்மரத்தில் அடிதொட்டுத் தேங்கியிருக்கும் நீர்நிலையைப் **பொழில்** என்று உரைத்துள்ளார். இதனை,

"*புனல்கால் கழீஇய பொழில்தொறும்* **திரள்கால்**
**சோலைக் கமுகு......" (பெரும்.380-381)**

என்னுமடிகள் விளக்குகின்றன. இதுபோன்ற பொழில் குறித்த பதிவுகளை ச.போ.சீனிவாசன் "எட்டுத்தொகை மருதப்பாடல்களில் பொழில் வருணனை அருகியே வந்துள்ளது"[29] என்கிறார்.

**பழனம்**

பழனம் என்பது மருதநிலத்து, விளைச்சல் நிலங்களுக்கருகில் உள்ள சிறிய நீர்நிலையாகக் காணப்படுகிறது. இதில் ஆம்பல், தாமரை, வள்ளை முதலிய நீர்த்தாவரங்களும், வாளை, வராஅல், ஆமை

முதலியனவும் இருந்துள்ளன. நீர் நிறைந்த பொதுஇடமாகத் திகழும் பழனத்தின் ‘வண்டூதும் தாமரை’ பரத்தைக்கு உவமையாய் அள்ளூர் நன்முல்லையாரால் எடுத்தாளப்பட்டுள்ளது. இதனை,

**“………………… நீர்சூழ் வளவயல்**
**கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து**
**பழன யாமை பசுவெயில் கொள்ளும்” (அகநா.306:5-7)**

**“கண்புமலி பழனம் கமழத் துழைஇ**
**……………………………………**
**பிடிக்கை அன்ன செங்கண் வராஅல்” (மலைபடு.454-547)**

**“நீர்முதிர் பழனத்து மீனுட னரிய**
**…………………………………**
**வண்டூது பனிமலர் ஆகும்” (அகநா.46:4-6)**

என்னும் பாடல்களினடிகள் புலப்படுத்துகின்றன. பசுவெயில் கொள்ளும் ஆமையின் சூரியக் குளியலை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் பதிவு செய்துள்ளார்.

**பொய்கை**

இந்நீர்நிலை கரும்பும், செந்நெல்லும், குவளையும், நெய்தலும் சூழ அமைந்துள்ளது. போருக்குப்பின் வயல்களும், பொய்கையும் வேறுபாடின்றி அழிந்து, நீரற்றுப்போனதால் அறுகும், கோரையும் வளர்ந்துள்ளது. பொய்கை முதலைகள் மறைந்து, இரலைமான்கள் துள்ளும் முல்லை நிலமாகக் காணப்படுகின்றது. இதனை,

**“ஒளிறு இசைஞ்சி; அடை நிவந்த**
**முள்தாள சுடர்த்தாமரை**
**…………………………**
**வண்டுஇறை கொண்ட கமழ்பூம் பொய்கை” (மதுரை.248-253)**

**“…………………………… அகன் பொய்கை**
**கொழுங்கால் புதவமொடு செருந்தி நீடிச்**
**செறுவும் வாவியும் மயங்கி நீர்அற்று**
**அதுகோட்டு இரலையொடு மான்பிணை உகளவும்”**
**(பட்.240-245)**

என்னும் பாடல்கள் மருதநிலத்தின் வளமையையும், அதன் வளமழிந்த நிலையையும் காட்சிப்படுத்துகின்றது. இது ஒரு நாட்டின் நீர்நிலைகள் அழிக்கப்பட்டால் அந்நாடு வலிமையிழந்துவிடும் என்பதை உணர்த்துகிறது.

**ஆறு**

பாண்டிய நாட்டுக்கு வைகை பெரும் வளத்தைத் தந்துள்ளது. பண்டைக்கால மருதநில வளமைக்கும், மக்களின் மகிழ்விற்கும் ஆறுகள் காரணமாய் இருந்துள்ளன. இதனை,

> **"இயங்குபுனல் கொழித்த வெண்தலைக் குவவுமணல்**
> **.........................................**
> **............ வையைத் துறை துறைதோறும்**
> **பல்வேறு பூத்திரட் தண்டலை" (மதுரை.336-341)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு ஆற்றின் பயன்களை முடத்தாமக் கண்ணியாரும் குறித்துள்ளார். இதனை,

> **"சாலி நெல்லின் சிறை கொள் வேலி**
> **ஆயிரம் விளையுட்டு ஆக**
> **காவிரி புரக்கும் நாடு......"[30]**

என்பது உணர்த்தும். இக்காலத்தில் ஆறுகளின் நீரற்ற வழித்தடங்களோடு மணலும் அற்றுப்போயின.

**மருதநிலத்தாரின் இருப்பிடங்கள்**

குடில், இல்லம், படைப்பை, பொழில், இருக்கை, பணை, மனை எனும் பதிவுகள் உள்ளன. அவை வயல்வரப்புக்கருகில் புதுவைக்கோல் வேய்ந்த குளுமையான குடில்கள், தொன்மையான குதிர்களுடைய இல்லங்கள், வாடிய தென்னங்கீற்றால் வேயப்பட்ட படப்பைகள் என்பனவாய் இடம்பெற்றுள்ளன. அவை மஞ்சள், மலர்கள் நிறைந்த சோலைகள் என இயற்கை சூழ இருந்துள்ளன. இதற்கு,

> **"............................. வரம்பில்**
> **புதுவை வேய்ந்த *கவிகுடில் முன்றில்*" (பெரும்பாண்.224-225)**
> **"ஏணி எய்தா நீள்நெடு மார்பின்**
> **முகடுதுமித்து அடுக்கிய பழம்பல் உணவின்**
> **குமரி மூத்தகூடு ஓங்கு *நல்இல்*" (பெரும்பாண்.245-247)**
> **"தொல்பசி அறியாத் *தூங்கா இருக்கை*" (பெரும்.253)**
> **"..................... *மனை*மரத்தான்**
> **மீன்சீவும் பாண்சேரியொடு**
> **மருதம் சான்ற *தண்பனை*......" (மது.270)**

போன்ற பதிவுகள் பறைசாற்றுகின்றன. செழிப்பும் சோராத உளத்திடமும் நிறைந்தவர்களாக மருத நிலத்தாரும், அவர்களது இருப்பிடமும் எடுத்தாளப்பட்டுள்ளன. இதனை,

**"தண்பனை தழீஇய தளரா இருக்கை"[31]**

என பொருநராற்றுப்படையும்,சிறுபாணாற்றுப்படையும் தெளிவுபடுத்துகின்றது. பொதுமக்களின் பயன்படுகளம் மன்றம் எனும் சொல்லால் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

**"தன்னூர் மன்றம்" (குறுந்.33:2)**

என்று படுமரத்து மோசிகீரனார் உரைத்துள்ளார்.

**வைகறை**

வைகறை குறித்த பல பதிவுகள் மருதநிலப் புனைவில் காணப்படுகின்றன. காதலரைப் பிரிக்கும் வாள் போன்றது என்று வைகறைப்பொழுதை அள்ளூர் நன்முல்லையார் சுட்டியுள்ளார். சேவலின் கூவுதலோடு புலப்படும் வைகறைப் பொழுது தன் அன்பில் இருக்கும் தலைவனைப் பிரிக்கும் வாள் போன்றது எனக் காலத்தை உணர்த்துவது புலப்படுகிறது. இதனை,

**"குக்கூ வென்றது கோழி யதனெதிர்**
**.........................................**
**வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே" (குறுந்.157:1-4)**

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை ஊராரறிந்தார் என்பதையும்; தாமரை மலரில் துஞ்சிய வண்டு வைகறைப் பொழுதில் நெய்தல் மலரில் தேனுண்டது என்பதையும்,

**"நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர" (அகநா.36:8)**
**"இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த**
**முள்தாள் தாமரைத்துஞ்சி வைகறைக்**
**கள்கமழ் நெய்தல் ஊதி" (முருகு.73-75)**

என்னும் நக்கீரரின் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு வைகறைப் பொழுது மருதநிலத்தின் உரிப்பொருட்சிறப்பை உணர்த்துகிறது.

**நீராளும் நெய்தல்நிலம்**

உலகின் ஒட்டுமொத்த நிலப்பரப்பில் மிகுந்திருப்பது நீர்நிலையாகிய கடலாகும். புவியை வளப்பமுறச் செய்யும் நீராதாரத்தின் பிறப்பிடமும் இந்நெய்தல் நிலமேயாகும். இது,

“வான்முகந்தநீர் மலைப்பொழியவும்
மழைப்பொழிந்தநீர் கடல்பரப்பவும்” (பட்.126-127)

என்று பட்டினப்பாலையில் வணிகப் பொருட்களின் ஏற்றுமதியும் இறக்குமதியும் சுட்டப்படும் உவமையாய் எடுத்தாளப்பட்டுள்ளது.

கடல், கானல், எக்கர், ஓதம், ஓடுகளம் கரையும்துறை, நளிநீர்ப் படப்பை, நீர்ப்பெயற்று, நெய்தல், ஆழி, பரப்பு, பௌவம், புணர் பெருநீர், முந்நீர், கார்கோள், அழுவம், பட்டினம், பாக்கம், பாய்மணற் பந்தர், பூமலி பெருந்துறை எனப் பல பெயர்களால் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் நெய்தல் நிலம் சுட்டப்பட்டுள்ளது.

**கடலும் கானலும்**

கடல் தந்த வளங்களையும், கடலலை முழக்கத்தையும் மாங்குடி மருதனார் காட்சிப்படுத்துகிறார். ஓயாது ஒலிக்கும் கடலின் வளமாக ஒளிரும் முத்துக்கள், வளையலறுக்கப் பயன்படும் சங்குகள், வெண் உப்பு, மீன்கள் முதலியவற்றோடு இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகள், பாண்டிய நாட்டின் பெருவளங்களாய் இருந்துள்ளன. இதனை,

“முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்
ஆரம்போழ்ந்து அறுத்த கண்நேர் இலங்குவளை
பரதர் தந்த பல்வேறு கூலம்
இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்
விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொடு அனைத்தும்
வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப
நெய்தல் சான்ற வளம்” (மதுரை.315-325)

என்னும் பாடலடிகளால் அறியப்படுகின்றன.

**கானல்**

கடற்கரையிலுள்ள தாவரங்களும், மலர்களும் கடற்கரைச் சோலையாகக் காணப்படுகிறது. இந்நிலம் பூக்களைத் தரும் கழிமுள்ளிச் செடிகளையும், பிற மலர்ப்பரப்புகளையும் கொண்டுள்ளன. இதனை,

“வெண்மணல் விரித்த வீதிதை கானல்” (குறுந்.386:1)
“எல்வளை யாத்த கானல்” (நற்.342:7)
“.......................... என்றும்
மணிப்பூ முண்டகத்து மணல்மலி கானல்” (மதுரை.95-96)

**“புலவுமணல் பூங்கானல்”** (பட்.94)

என்னும் வெள்ளிவீதியார், மோசிகீரனார் முதலானோரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவை நெய்தல்நிலத்தின் மண் அரிப்பைத் தடுக்கும் இயற்கை வேலியாய் அன்று இருந்துள்ளது.

**நெய்தல் நெடுவழித் தாவரம்**

தலைவனின் தேர்ச்சக்கரத்தால் அறுந்துபடும் அடும்புக்கொடி, நெய்தல் நெடுவழியின் மணற்தாவரமாகச் சுட்டப்பட்டுள்ளது. இத்தாவரத்தை மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரிச்சாத்தனார்,

**“கடுங்கதிர் ஞாயிறு மலைமறைந் தன்றே**
**அடும்புக்கொடி துமிய ஆழி போழ்ந்தவர்**
**நெடுந்தேர் கன்னொலி இரவுந் தோன்றா”** (நற்.338:1-3)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

நெய்தல் நிலப்பரப்பில், ஆட்டினடி போலக் கவைத்த பச்சிலைகளோடு வளர்கிறது. சிறுமணிகளை ஒத்த வடிவில் இளஞ்சிவப்பு மலர்களோடும், கயிறு போன்று தடித்த கொடியோடும் காணப்படுகிறது. இதனை “இலை கவைத்து இருப்பதால் ஆட்டின் குளம்படிக்கு ஒப்பிட்டு ஆங்கிலத்தில் அடம்பிற்கு ‘Goat foot’ என்று பெயரிட்டனர்”[32] என்று பி.எல்.சாமி விளக்கியுள்ளார். “இம்மலர் குறிஞ்சி மலர்த் தொகுப்பிலும், நற்றிணையிலும் இடம்பெற்றுள்ளது.”[33]

**உப்பளங்கள்**

உணவில் சுவைகூட்டவும், பதப்படுத்தவும் உப்பு பெரும்பயன் தருகிறது. இவ்வுப்பங்கழிகள் கடற்காகங்களுக்குச் சிறுமீன் தேடும் உணவுக் களங்களாகக் காணப்படுகின்றன. முது வெள்ளிலை என்னும் பட்டினத்தில் ஆரவாரமிக்க நிலமாய்,

**“இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொடு**
**ஒலிஓவாக் கலியாணர்**
**முதுவெள்ளிலை மீக்கூறும்”** (மதுரை.117-119)

எனக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

**“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை**
**களிற்றுச்செவி யன்ன பாசடை மயக்கிப்**
**பனிக்கழி துழவும் பானாள்”** (குறுந்.246:1-3)

என்னும் கபிலரின் பாடலடிகள் குளிர்ந்த உப்பங்கழிகளைக் குறித்துள்ளன.

**நெடுங்கோட்டுப் பெருமணல்**

நந்நீர் சூழ்ந்த நிலத்தைத் தீம்புனல் என்ற தொல்காப்பியர், காணுந்தோறும் நீராய்க் காட்சிதரும் நெய்தல் நிலத்தைப் பெருமணல் உலகு என்கிறார். இது கடலில் தோன்றும் பெரும்மணற்குவியலின் கவன ஈர்ப்பாய்ப் புலப்படுகிறது. இதனை,

> **"இழையணிந் தியல்வருங் கொடுஞ்சி நெடுந்தேர்**
> **வரைமரு ணெடுமணற் றவிர்த்து"** (குறுந்.345:1-2)
> **"எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்**
> **துறுகடல்............"** (நற்.211:6-7)

என்று அண்டர் மகன் குறுவழுதியார் தேர் மறையுமளவில் உள்ள நெடுமணற்குவியலைக் குறிப்பிட்டுள்ளார். கோட்டியூர் நல்லந்தையார் கடலலைகள் கொழித்தனுப்பிய வெண்மணற்பெரும்பரப்பை **எக்கர்** என்கிறார். இம்மணல் கடற்காற்றால் தூற்றப்படுவதை "ஆடை உலர்வது போன்று அலர் தூற்றப்படுகிறது எனும் உவமையும் எடுத்தாளப்பட்டுள்ளது."[34] இது பாலைவனச் சுறாவளியாய் அல்லாத போதும் நெய்தல்நில மணற்காற்றாய்க் காணப்படுகிறது.

**துறை**

கடலில் மக்கள் பயன்பாட்டிற்குரிய இடம் துறை, துறைமுகம் என வழங்கப்பட்டுள்ளது. பரப்பளவாலும், அவ்விடங்களின் அமைவிடச் சிறப்பாலும் **பெருந்துறை, ஞாழல் துறை, ஓடுகலம் கறையும் துறை** எனும் பெயரடைகளும் இடம்பெற்றுள்ளன. ஞாழல் மரங்களின் மலர்கள் "வெண்சிறு கடுகையும், ஆரள்மீன் முட்டையையும் போலத் தோன்றும்"[35] இம்மரம் அன்புறு பறவைகளின் உறைவிடமாகவும் காணப்படுகிறது. இதனை,

> **"தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்**
> **குருகென மலரும் பெருந்துறை"** (குறுந்.226:5-6)
> **"................................... சிறுவெண் காக்கை**
> **.............................................**
> **சிறுவீ ஞாழல் துறை"** (நற்.31:2-5)
> **"உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்**
> **துறை ........................"** (பெரும்பாண்.350-351)

என்னும் சேந்தன் பூதனார், நக்கீரர், கடியலூர் உருத்திரங்கண்ணனார் முதலானோரின் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

**காவிரிப் பெருந்துறை**

மலையில் தோன்றிக் கடலில் பரவும் காவிரிப் பெருந்துறை நெய்தல் நில மக்களின் வழிபாட்டிடமாய்க் காணப்படுகிறது. கடல் வாழ்மீன்களுள் வலிமையானது சுறா. இதனை வேட்டையாடுவது திறன்வாய்ந்தது. கருவுற்ற சுறாவின் கொம்பை நட்டு வழிபடும் நிகழ்விடக் களமாய்க் காவிரிப் பெருந்துறை எடுத்தாளப்பட்டுள்ளது. மேலும் கடலில் நீராடிய பின்னர் நந்நீராடும் வழக்கும் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

> **"சினைச் சுறவின் கோடுநட்டு**
> **மனைச் சேர்த்திய வல் அணங்கினால்**
> **..................................**
> **மலி ஓதத்து ஒலிகூடல்**
> **தீதுநீங்கக் கடல் ஆடியும்**
> **மாசுபோகப் புனல்படிந்தும்**
> **..................................**
> **அகலாக் காதலொடு பகல்விளையாடிப்**
> **பெறற்கு அரும் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்**
> **பொய்யா மரபின் பூமலி பெருந்துறை" (பட்.99-105)**

என்னும் பதிவுகள் விளக்குகின்றன.

**மக்களின் வாழிடங்கள்**

குரம்பை, படப்பை, பாய்மணற் பந்தர், வலைஞர்குடி, நல்இல் எனப்பல பதிவுகள் நெய்தல் நிலத்தவரின் இருப்பிடங்களாகச் சுட்டப்பட்டுள்ளன. இவை பேய்க்கருப்பந்தட்டை, கொறுக்கைச்சி என்னும் சோளத்தட்டை போன்றவற்றால் வேயப்பட்டு, வஞ்சி, காஞ்சி மரத்தடிகளைக் கொண்டு, தாழை நாறால் கட்டப்பட்டு இருந்தது. இவ்விடங்களில் பசுங்காய்கள் வளரும் வீட்டுத் தோட்டமுடைய முன்றில் காணப்படுகிறது. இதனை,

> **"வேழம் நிரைத்து, வெண்கோடு விரைஇத்,**
> **தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**
> **குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றில்,**
> **கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**
> **பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்**
> **..............................................**
> **கொடுமுடி வலைஞர் குடி" (பெரும்பாண்.263-274)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. பாக்கம், நல்இல், நள்நீர்ப்படப்பை, நீர்ப்பெயற்று போன்ற பதிவுகள் ஆற்றுப்படை நூல்களில் வள்ளல்களின் நாட்டுவளம் கூறுவனவாக இடம்பெற்றுள்ளன.

நெய்தல் நிலப் பாக்களுள், கடல் வாழ் பறவைகள், விலங்குகள் குறித்தப் புனைவுகளும், கடற்கழி, கடற்கரைச்சோலை, நெடுமணற்குன்று, கடல்வளம் முதலானவற்றோடு இயைந்த இந்நில மக்களின் வாழ்வியல் சுட்டப்பட்டுள்ளது. அன்று நெய்தலிலும் இருந்த வீட்டுத் தோட்டம் இன்று பெருமளவில் பொய்த்துப் போனது.

**எல்படும் பொழுது**

கடலுள் சென்ற பரதவர் வரவையெண்ணி இரங்கியிருக்கும், சிறுபொழுதாக எற்பாடு சுட்டப்பட்டுள்ளது. இந்நிலப்புனைவில் சிறுபுன்மாலை, இரவு, மாலை, காலை, பானாள் ஆகிய பிறபொழுதுகளும் இடம்பெற்றுள்ளன. வெண்நாரையிடம் தனிமைத் துயரைத் தலைவி எடுத்துக் கூறுவதாக மாலைப்பொழுதும், நெய்தல் மலர்தலுக்கு உவமையாய்க் காலையும், மாலையும் புனையப்பட்டுள்ளன. இதனை,

> **"கருங்கால் வெண்குருகு எனவ கேண்மதி**
> **பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை" (நற்.54:4-5)**
> **"நனைத்த செருத்திப் போதுவாய் அவிழ,**
> **மாலை மணிஇதழ் கூம்ப, காலைக்**
> **கள்நாறு காவியொடு தண்ணென மலரும்" (அகநா.150:1-13)**

என்னும் சேந்தன்கண்ணனார், குறுவழுதியாரின் பாடல்களின் அடிகள் சுட்டுகின்றன. நெய்தலால் மெய்பெறத் தோன்றும் எல்படு பொழுது பிரிவுத்துயரால் பயன்தராத இரவு, இரவு வேட்டத்தால் வைகறையில் வந்த மீன்கள் முதலியவை,

> **"இலங்குகதிர் மழுங்கி எல்விசும்பு படரப்**
> **புலம்புதந் தன்றே புகன்றசெய் மண்டிலம்**
> **..................................................**
> **கங்குலும் கையறவு தந்தன்று" (நற்.152:3-8)**

என்னும் ஆலம்பேரிச்சாத்தனாரின் பாடலடிகளால் புலப்படுகின்றன. இவ்வாறு பாடுபொருட் தேவைக்கேற்ப சூழலியலை வெளிப்படுத்தும் காலப்புனைவுகள் இடம்பெற்றுள்ளன.

**நெடுவழிப்பாலை**

பண்டைத் தமிழகத்தில் தற்காலப் பாலை நிலங்களைப் போல் தனியொரு பாலை நிலம் காணப்படவில்லை. காலமாற்றத்தாலும் கோடைப்பருவ நீட்சியாலும் முல்லை, குறிஞ்சி முதலான நிலங்கள்

செழுமை குறைந்து வறட்சியோடு தோற்றம் பெறுவது பாலை நிலமாகப் புனையப்பட்டுள்ளது.

தொகை நூல்களுள். பிரிவொழுக்கத்தை மேற்கொள்ளும் தலைவனின் பயணத்தில் துன்பம் மிகுந்த நெடுவழிப் பாதையாகச் சுட்டப்பட்டுள்ளது. உடன்போக்கில் தலைவி எதிர்கொள்ளும் துன்பங்களை எண்ணிக் கலங்கும் செவிலி, தோழி முதலானோரின் உளவியல் கூற்றாகவும் பாலைநிலப் பதிவுகள் காணப்படுகின்றன.

பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்களுள் பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படைகளிலும், மதுரைக் காஞ்சியிலும் பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் பாலைநிலப் புனைவுகள் காணப்படுகின்றன. இந்நிலம் “சுரம்”[36], “பாலை”[37], “கானம்”[38], “கள்ளியங்காடு”[39], “களர்”[40], “செந்நில மருங்கின்”[41], “அகன் சிலம்பு”[42], “வேனிற்குன்றம்”[43], “எய்ப்புறக் குரம்பை”[44], “முரம்பு”[45] என பல்வேறு நிலப்புனைவுகளைப் பெற்றுள்ளது.

**குறிஞ்சிப்பாலை**

பண்டைக் கால மக்களின் வாழ்வியல் ஒழுகலாறுகளுள் பொருள்தேடிப் பிரிதல், போர், கல்வி, தூது முதலான வினைவழிப் பிரிதல் இயல்பாயுள்ளதை,

**“ஓதல் பகையே தூதிவை பிரிவே”[46]**

என்னும் நூற்பா உணர்த்தும். இவை குறிஞ்சிநிலம் மருவிய பாலைநிலமாகவும், குறிஞ்சி, முல்லை என இரு நிலங்களும் மருவிய பாலை நிலமாகவும் பதிவுகளாகியுள்ளன. பாடுபொருளுக்கும் பாடற்பொருளின் அடியெல்லைக்கும் ஏற்ப அமைந்துள்ளமைத் தெரிகிறது. இதனை “குறிஞ்சி நிலம் மட்டும் தனியே பாலையாதலும் உண்டு. முல்லை நிலம் மட்டும் தனியே பாலையாதலும் உண்டென்பார்”[47] மா.இராசமாணிக்கனார்.

வெம்மை மிகுதியாலும், காற்றின் உராய்வாலும், மூங்கில் தீப்பற்றுகிறது. இது வெடித்துச் சிதறும் ஓசைக்குக் கலைமான்கள் அஞ்சுகின்றன. இத்தகைய இடங்களைக் கடந்துள்ள தலைவன் தன் தலைவிக்குத் தனிமைத் துயரும், தன்னைப் பற்றிய கவலையும்

உண்டாதலை எண்ணுகிறான். அவன் வழித்துன்பத்தால் சோராமல் மன உறுதியோடு வினைமுடித்தல் வேண்டுமென்பதை,

> **"................................. ஒலிதலை**
> **அலங்கு கழை நரலத் தாக்கி, விலங்கு எழுந்து,**
> **கடு வளி உருத்திய கொடி விடு கூர் எரி**
> **விடர் முகை அடுக்கம் பாய்தலின் உடன் இயைந்து**
> **அமைக் கண் விடுநொடி கணக் கலை அகற்றும்**
> **வெம்முனை அருஞ்சுரம்.........**
> **................................... சிலைச்**
> **சிலம்பின் கூதளங் கமழும் வெற்பு" (அகநா.47:4-17)**

என்னும் ஆலம்பேரிச்சாத்தனாரின் பாடலடிகள் இயம்புகின்றன.

சிறிய இலைகளையுடைய சந்தன மரங்கள் வாடிய குறிஞ்சிக் காட்டினிடத்தே சுனைகளில் நீர் நிறையவும், அருவிகள் ஆர்ப்பரிக்கவும், மழைநீர் பெருவெள்ளமாகப் பாயவும் கூடிய கார்காலம் இடித்து மேகம் முழங்குவதைக் கண்டதும், தலைவன் உடனே வந்து மணந்து கொள்வான் என பொருள்தேடிப் பிரிந்த தலைவனின் வரவை நல்வெள்ளியார் குறிப்பிடுகிறார். இதனை,

> **"சிறுயிலைச் சந்தன வாடுபெருங் காட்டே" (நற்.7:9)**
> **"இருவெதிர்ப் பைந்நூறு சூர்எரி நைப்ப**
> **................................ வேனில் குன்றத்து**
> **பாலைசான்ற சுரஞ்சேர்த்து" (மதுரை.302-314)**

என்பன போன்ற குறிஞ்சிநிலப் பாலையாகப் பல பதிவுகள் காணப்படுகின்றன. குறிஞ்சி நிலம் வேனிற்காலத்தில் வெம்மை மிகுந்து சுரமானதை இப்பதிவுகள் உணர்த்துகின்றன.

**முல்லைநிலப்பாலை**

காட்டகத்துப் பாலை நிகழ்வுகளாகப் போர் குறித்துப் பிரிதல், பொருள்தேடிப் பிரிதல், உடன்போக்கில் துன்பம் நிறைந்த வழித்தடம் என இந்நிலப்பதிவுகள் காணப்படுகின்றன.

தலைவன், கார்காலத்தில் திரும்புவேன் என்று கூறிப் பொருள்தேடிப் பிரிந்தான். இக்காலம் நீங்குமளவும் வரவில்லை என வருந்துவதாய் மதுரை மருதனிளநாகனார்,

> **"இழையணி மகளிரின் விடைதகப் பூத்த**
> **நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றைக்**
> **காடுகவின் பூத்த ஆயினு நன்றும்**

**வருமழைக் கெதிரிய மணிநிற இரும்புதல்**
**நரைநிறம் படுத்த நல்லிணர்த்து எறுழ்வீ**
**தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்**
**களிறுதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு**
**வெளிறில் காழ வேலம் நீடிய**
**பழங்கண் முதுநெறி மறைக்கும்**
**வழங்கருங் கானம் இறந்திசி னோரே" (நற்.302:1-10)**

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். களிறுகள் சிதைத்த வேலமரங்கள் நிறைந்த சுரவழி, செல்வோருக்குத் துன்பம் தரக்கூடியது. இவ்வழியே சென்ற தலைவன், கொன்றை மலர்ச்சரங்களோடு அழகுடைய காட்டையும், கார்காலத்தால் வெளிறி மலர்ந்த எறுழம் மலர்களையும் கண்டும் வரவில்லை என்கிறாா். இவ்வாறு சுரவழியும், மழையால் வளம்பெறும் கானகமும் சுட்டப்பட்டுள்ளன.

கள்ளுண்டு களித்த வீரர்கள், போரை விரும்பி அம்பு எய்ததால் பகைவீரர்கள் இறந்துபட்டனர். இச்சுரவழி, கோங்கமரத்தின்மீது படர்ந்த அதிரற்கொடியில் இரவுமலர்ந்த மலர்களை, விடியற்காலத்தில் காட்டுயானை உணவாகக் கொள்ளுமாறு அச்சம் தருகிறது என்பதை வேம்புற்றூர்குமரனார் பதிவுசெய்துள்ளார். இதனை,

**"செருவேட்டு, சிலைக்கும் செங்கண் ஆடவர்**
**வில்இட வீழ்ந்தோர் பதுக்கை, கோங்கின்**
**எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்**
**பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கி**
**கான யானை கவளம் கொள்ளும்**
**அஞ்சுவரு நெறியிடைத் தமியர் செல்மார்**
**நெஞ்சுஉண மொழிப மண்ணே" (அகநா.157:3-1)**

என்னும் புனைவுகள் முல்லைநிலப் பாலை நெடுவழியைச் சுட்டுகின்றன.

**எயினர் குடியிருப்பு**

ஊகம்புற்களால் வேயப்பட்ட உயரமான அரண்களும் அதில் தேன் கூடுகளைப் போன்ற அம்புக்கூடுகளும் தொங்கின. பந்தற்கால்கள் வலிமையானதாகவும், வெளியே நாய்கள் வரிசையாகவும் இவ்வரண்களைச் சுற்றி உயிருள்ள முள்வேலித் தாவரங்களும் காணப்படுகின்றன. ஈந்தின் முள்இலைகளால் குரம்பை அமைக்கப்பட்டுள்ளது. அது முள்ளம்பன்றியின் முதுகுபோல் முட்களோடு பாதுகாப்பாய் உள்ளது. இதனை,

**“ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்**
**.........................................**
**வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை”**
**(பெரும்பாண்.122-126)**
**“ஈந்து இலை வேய்ந்த எய்ம்புறக் குரம்பை”**
**(பெரும்பாண்.88)**

என்னும் பாடல்களின் அடிகள் குறிப்பிடுகின்றன.

**தாவர வளரிடம்**

பாலைநிலம் வளமை குன்றிய உவர்நிலமாகக் காணப்படுகிறது. இந்நிலத்தில் கள்ளி, ஈச்சமரம் முதலான தாவரங்கள் வளர்ந்துள்ளது. இதற்குச் சான்றாக,

**“நிலங்கரி கள்ளியங் காடிறந்தோரே” (குறுந்.67:5)**
**“களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன**
**சுவல்விளை நெல்லின் செவ் அவிழ்ச் சொன்றி”**
**(பெரும்பாண்.130-131)**

என்னும் பாடல்களின் அடிகளில் அள்ளூர் நன்முல்லையார், கடியலூர் உருத்திரங்கண்ணனார் முதலானோர் குறித்துள்ளனர்.

**உடன்போக்குப் பாலை**

பண்டைப் பாக்களுள் நாடு கடந்து செல்லும் நெடுவழியாகப் பாலைநிலம் காணப்படுகிறது. இது காடும், மலையும் திரிந்த வளமிழந்த பகுதிகளைக் காட்சிப்படுத்துகிறது. இப்புனைவுகள் வேனிற்காலத்து நிகழ்வுகளாய் அமைந்தபோதும், பிரிவுக்கால நீட்சியால் கார்கால வரவையும் குறிப்பிடுகிறது. உடன்போக்கின் போது முதல் மழையால் காட்டின் மேற்பரப்பில் தோன்றிய செம்மூதாய்ப் பூச்சிகளைக் கண்டும், பிடித்தும் விளையாடு எனத் தலைவன் தலைவியிடம் கூறுவதாக மதுரை மருதனிளநாகனார் கூறுகிறார். இதனை,

**“தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி**
**அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த**
**கடுஞ்செம் மூதாய் கண்குங் கொண்டும்**
**நீவிளை ஆடுக............” (நற்.362:3-6)**

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இப்பாடலில் தலைவியின் குடும்பத்தாரை உள்ளன்போடு, நல்லுறவாக நினைக்கும் தலைவனைக் காணமுடிகிறது. வேனிற்காலத்தில் வெயிலின் வெம்மை அதிகரித்ததால் பரல்கற்களின் மேல் நடந்து உள்ளங்கால்கள் கிழிகின்றன. இத்தகைய

பாலை நிலத்தன்மையோடு பிரிவு ஒழுக்கமாகிய பாலை நெடுவழி புலப்படுவதை,

**“வெயில்உருப் புற்ற வெம்பரல் கிழிப்ப,**
**........................................**
**பாலை நின்ற பாலை நெடுவழி”[48]**

என சிறுபாணாற்றுப்படை விளக்குகிறது.

**பாலைநிலப் பொழுதுகள்**

தொல்காப்பியர் பாலைத்திணைக்குரிய பொழுதுகளை மாசி முதல் ஆடி வரை ஓராண்டின் பாதியாக வகுத்துள்ளார். நண்பகலைச் சிறுபொழுதாகவும், வெம்மைக்குரிய பின்பனி, இளவேனில், முதுவேனிற் காலங்கள் பெரும்பொழுதுகளாகவும் சுட்டப்பட்டுள்ளன. நக்கீரர் இளவேனிற் காலத்தை **முற்றா வேனில்** என்கிறார். கோங்கம் மலர்களும், ஈந்தின் தளிர்களும் தோற்றம்பெறும் இளவேனிற் காலத்தில் திரும்பி வந்த தலைவன் அறநெறியுடையவன் என்பதை உணர்த்தும் பொருட்டு,

**“கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை**
**நற்றளிர் நயவர நுடங்கும்**
**முற்றாவேனில் முன்னவந் தோரே” (நற்.86:7-9)**
**“வேனில் நீடிய வெங்கடற்று......” (அகநா.389:17)**

என வேனிற்காலம், கூதிர் காலம், கார்காலம் முதலிய பொழுதுகளும் இடம்பெற்றுள்ளன. இப்புனைவுகள் நக்கீரரின் பாடல்களில் வெளிப்படுகின்றன.

நாட்பொழுதை அறிய இயலாத பெருமழைக்காலம் பொருள்தேடிப் பிரிவதற்கு ஏற்ற காலமல்ல. அவ்வாறு பிரிவோர் இவ்வுலக அறியாமையுடையவராவர் என மதுரை ஈழத்துப் பூதன்தேவனாரும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும் ‘வடபுல வாடை’, ‘கமஞ்சூல் மாமழை’ எனப் பதிவுசெய்துள்ளனர். இதனை,

**“வடபுல வாடைக்குப் பிரிவோர்**
**மடவர் ............” (நற்.366:11-12)**
**“கடல் முகந்து கொண்ட கமஞ் சூல் மாமழை**
**.............................. அளிஇன்று**
**ஏதில் பொருட்பிணிப் போகி, தம்**
**இன் துணைப் பிரியும் மடமையோரே” (அகநா.43:1-15)**

என்னும் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

பாலைக்குரிய சிறுபொழுதான நண்பகல் சுட்டப்பட்டுள்ளதை நக்கீரர், கடியலூர் உருத்திரங்கண்ணனாரின்,

**"பானாட் கங்குலும் பகலும்" (அகநா.57:18)**
**"பகலுறை முதுமரம் புலம்பப் போகும்**
**சிறுபுன் மாலை ………………" (குறுந்.352:4-5)**

என்னும் பாடல்களினடிகள் விளக்குகின்றன. நண்பகல் பொழுதோடு நள்ளிரவு, மாலை என்பனவும் இடம்பெற்றுள்ளன.

**"அரைநாள் வேட்டம் அழுங்கின், பகல்நாள்" (பெரும்.111)**

**"நள்இருள் விடியல் புள்ளெழுப் போகி" (பெரும்.155)**

என்னும் பாடலடிகளுள் நள்ளிரவு வேட்டையில் எதுவும் கிடைக்கப் பெறாததால், பகல் நேரத்திலும் வேட்டைத்தொழில் தொடர்வது குறிப்பிடப்பட்டுள்ளது. பண்டைத் தமிழர்கள் இருள்நிறைந்த அதிகாலையில் பறவைகள் எழும்போதே விழித்தெழும் பழக்கமுடையவர் என்பதைக் காட்சிப்படுத்துதலில் பகல், விடியல் முதலான பொழுதுகளும் இடம்பெற்றுள்ளன.

ஐவகை நிலங்களும் பாடுபொருட் சிறப்பிற்கேற்ற சூழலை, பருவக்கால நிகழ்வை, மக்களின் வாழ்வியல் பயன்பாட்டோடு ஒருங்கிணைத்துப் புலப்படுத்துகின்றன. காலப்புனைவுகள் இயற்கையைப் போற்றி, அவ்வியற்கையோடு இயைந்து வாழும் நலவாழ்வை வலியுறுத்துகின்றன. காடுகள் அழிக்கப்படுதல், மலைகள் தகர்க்கப்படுதல், வானுயர்ந்த கட்டுமானப்பணிகள் போன்ற இயற்கையான நிலவமைவுச் சூழலில் ஏற்படுத்தப்படும் பலவகை மாற்றங்களால் இயற்கைச் சமநிலையின்மை உண்டாகிறது. இதன் காரணமாக நிலநடுக்கம், ஆழிப்பேரலை முதலான இயற்கைச் சீற்றங்கள் ஏற்படுகின்றன. இவற்றிலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்குக் காடு, மலை, நாடு, கடல் முதலானவை தன் இயல்பு நிலையில் மாறாதிருந்தால் இயற்கைச்சமநிலைக்கு உதவும் என்பது பெறப்படுகின்றது.

## தொகுப்புரை

- குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நிலையான நானில வகைப்பாடுகளும்; காதலரின் பிரிவுக்காலத்து நெடுவழியாக வளமிழந்த பாலை நிலமும் சுட்டப்பட்டுள்ளன. இவை மலரின் பருவப் புனைவுகளுள் அதன் வளச்சிநிலையும், வாழ்வும் வெளிப்படுவதைப் போல; நிலப்புனைவுகளுள் நிலத்தின் தன்மை, நிலவமைவுச் சூழல், தட்பவெப்பம், நீர்நிலைகள் முதலானவற்றைக் காட்சிப்படுத்தும் நிலப்புனைவுகளாய் இடம்பெற்றுள்ளன.
- தலைவி துறுகல்லின் மீது ஏறிநின்று, தலைவனின் குன்றைக்கண்டு உள்ளம் தேற்றிக் கொள்ளும் பயன்படுகளமாகக் குண்டுக்கல் பதிவு செய்யப்பட்டுள்ளது.
- தினை, மூங்கில் நெல் முதலியவற்றை உலர்த்துதல், கல்லுரலில் சுத்தம் செய்தல், வெறியாட்டு நிகழ்த்துதல் போன்ற நிகழ்வுகளுக்கான பரந்துபட்ட பயன்படுகளமாய் ‘வியலறை’, ‘அகலறை’ என்னும் மலைநிலப்பதிவுகள் காணப்படுகின்றன.
- அடுக்கம், சாரல், சிலம்பு முதலானவை தாவரங்களின் வளரிடங்களாகத் தெரிகின்றன. தினை, நெல், கடுகு, இஞ்சி, மஞ்சள், மிளகு போன்றவை விளையும் நிலங்களாகச் சாரல், புலம், புனம் முதலானவை குறிப்பிடப்பட்டுள்ளன. அவை தேவைக்கேற்ப அகில், சந்தனம் போன்ற மரங்களை அழித்து விளைச்சலுக்கான நிலங்களாய்ப் பண்படுத்தப்பட்டுள்ளன.
- அருவியின் உற்பத்தி, நிறம், வேகம் போன்றவற்றை உணர்த்தும் அடைமொழியோடு வாள் இலங்கு அருவி, வெள்ளருவி, கடுவரலருவி என்னும் புனைவுகள் இடம்பெற்றுள்ளன. அருவி நீரின் மிகுந்த வேகம் வரைவு நீடிப்பால் வருந்தும் தலைவியின் மனத்துயரை மிகுவிக்கிறது. சீரான அருவியின் ஓசை இயற்கையின் இசையரங்காகப் புலப்படுகிறது.
- வரகு வைக்கோல், வாடிய தென்னங்கீற்று போன்ற இயற்கைப் பொருட்களால் அமைக்கப்பெற்ற இருக்கை, குரம்பை, படப்பை என்னும்

இயற்கையோடு இயைந்த குறிஞ்சி நிலத்தாரின் வாழிடங்கள் சுட்டப்பட்டுள்ளன.

- இமையம் போன்ற உயரமான மலைச் சிகரங்கள் சிமையம் எனச் சுட்டப்பட்டுள்ளன. இதனை மிக உயரமான நிலமாகக் குறிப்பிட்டுள்ளனர். மீமிசை, சென்னி, நனந்தலை முதலான பதிவுகள் உச்சிமலைகளை உணர்த்துகின்றன.

- குறிஞ்சி நிலம் பல்வேறு வடிவங்களையும், தனித்தன்மைகளையும் வெளிப்படுத்தும் புனைவுகளைத் தன்னுள் கொண்டுள்ளது. இப்புனைவுகள் மன்னன், வள்ளல்களின் நிலவளமை, கொடைச்சிறப்பு, விருந்து போற்றுதலைச் சுட்டுவதாய்ப் புறப்பாக்களில் காணப்படுகின்றன.

- இந்நிலப்புனைவுகள் தலைவன், தலைவியின் பண்பு நலன்களை விளக்குவதற்கும், காதல் புலப்பாட்டிற்கும் பொருத்தமானதாக அகப்பாக்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

- குறிஞ்சிநிலம் அருவிப் பெரும்பயனால் முல்லை, மருதம், நெய்தல் போன்ற நிலங்களுக்கு வளப்பத்தைத்தரும் தாய்மை நிலமாகத் திகழ்கின்றது. இத்தகைய பண்புகளாலும், குறிஞ்சிக் கபிலர் பாண்டிய நாட்டினர் என்பதாலும், மற்ற நிலங்களிலும் மலைநிலம் பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களுள் பெரும் பங்களிப்பைப் பெற்றுள்ளது.

- மலைநிலப்பதிவை முழுமையாகப் புலப்படுத்தும் குறிஞ்சிப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் போன்றவை பாண்டிய நாட்டுப் புலவர் பாடியதென்பது குறிப்பிடத்தக்கது.

- கானகத்து அகன்ற நிலம் கார்கால மழைப்பொழிவால் செழுமையும், தண்மையும் பெற்றதைப் புல்ஆர் வியன்புனம், தண்கார்வியன்புனம் எனும் பதிவுகள் விளக்குகின்றன.

- முதல் மழைப் பெரும்பயனால் கானகம் அழகு பெற்றிருந்ததைத் தண்நறுங்கானம், பயன்மிகுபுறவு எனும் நிலப்பதிவுகள் விளக்குகின்றன.

- குடில், குரம்பை முதலியன மரங்கள், வரகின் தாழ்களால் வேயப்பட்டிருந்தன. மூங்கில் கதவுகளும் இருப்பிடங்களைச் சுற்றி முள்வேலியும் பயன்படுத்தப்பட்டள்ளன.

- தலைஇறும்பு முல்லைநில விலங்குகளின் வாழிடமாகக் காணக்கிடைக்கின்றது.

- நெல்லும், கரும்பும் விளையும் நிலமாகக் கழனி, நெல் நடவுக்கு ஏற்ற நிலமாகச் 'செறு' என்றுரைக்கப்பட்டுள்ளது. பலமுறை கோடை உழவு செய்ததால் செம்மையாகும் வயல் செய் என எடுத்தாளப்பட்டுள்ளது.

- கயம், குளம் போன்றவை நீர்த்தேக்கங்களாகவும்; பழனம் விளை நிலங்களுக்கருகில் உள்ள சிறிய நீர்நிலையாகவும்; வையை, காவிரி முதலானவை பெருமளவிலான நீர்வரத்துக்கு உதவும் ஆறுகளாகவும் பதிவுகளுள்ளன. போரால் ஏற்படும் வளமிழந்த நிலஞ்சுட்டுதலோடு பொய்கை இடம்பெற்றுள்ளது.

- பணை, மனை, நல் இல்லம் என மருதநில மக்களின் வசிப்பிடங்கள் சுட்டப்பட்டுள்ளன. மக்கள் கூடும் பொது இடம் மன்றம் என்னும் சொல்லால் ஆளப்பட்டுள்ளது.

- மருதநிலத்து நீர்வளங்களாக வாளை, வரால், வயல் ஆமை முதலியனவும், வையை ஆற்று நீரின் வளமையால் விளைந்த கரும்பு, செந்நெல், வெண்ணெல் முதலான உணவுப் பொருட்களும் நிறைந்துள்ள வளமைச் சமவெளியாய் மருதநிலம் காணக்கிடைக்கின்றது.

- கடல், புவியை வளப்படுறச் செய்யும் மழையின் பிறப்பிடமாகப் பல புனைவுகளுள் காணப்படுகின்றன. இப்புனைவுகள் கடலை நீராதாரத்தின் முதன்மையாய்க் காட்சிப்படுத்துகின்றன.

- ஒளிரும் முத்துக்கள், வளையலறுக்கப் பயன்படும் சங்குகள், வெண் உப்பும், பாண்டிய நாட்டின் கடல் வளங்களாய் இருந்துள்ளன.

- நெய்தல் நிலத்தில் தோன்றும் நெடுமணற் குவியல்கள் புலவர்களின் கவன ஈர்ப்பாய்க் காட்சிதருகிறது. இதனைப் பெருமணல் உலகு, எக்கர் நெடுங்கோட்டுத் துருகடல் என்னும் புனைவுகள் புலப்படுத்துகின்றன.
- கடலில் மக்கள் பயன்பாட்டிற்குரிய இடம் துறை, துறைமுகம் என வழங்கப்பட்டுள்ளது. ஓடுகலம் கரையும்துறை எனத் துறைமுகம் சுட்டப்பட்டுள்ளது.
- மலையில் தோன்றிக் கடலில் பரவும் காவிரிப் பெருந்துறை நெய்தல் நில மக்களின் வழிபாட்டிடமாய்க் காணப்படுகிறது. கடலில் நீராடிய பின்னர் நன்னீராடும் வழக்கும் தெரிகிறது.
- பாய்மணற்பந்தர், வலைஞர்குடி, நல்இல் என்பவை கொறுக்கைச்சி என்னும் சோளத்தட்டை, வஞ்சி, காஞ்சி மரத்தடிகளால் உருவாக்கப் பெற்றுள்ளன. இங்குப் பசுங்காய்கள் விளைந்த வீட்டுத் தோட்டமுடைய இல்லங்கள் இருந்துள்ளன.
- ஊகம்புற்கள், ஈந்தின் இலைகளால் வேயப்பட்ட உயரமான பரண்களும் அதில் தேன்கூடுகளைப் போன்ற அம்புக்கூடுகளும் கொண்ட படப்பை, குரம்பை முதலான எயினர்களின் குடியிருப்புகளும் அமைந்துள்ளன. இவற்றின் வெளிப்பக்கத்தில் காவல் நாய்கள் வரிசையாகவும், முட்கள் நிறைந்த உயிர்த்தாவரங்கள் வேலியாகவும் அமைக்கப்பட்டுள்ளன.
- உடன்போக்குப் பாலையில், நெடுந்தூரம் சென்றதும் தலைவியின் துன்பம் கண்டு செம்மூதாய்ப் பூச்சிகளோடு விளையாடு எனும் தலைவன், மறைவிடத்திலிருந்து எதிர்வருவோரை வெல்வேன் என்றும், அதேநேரம் தலைவியின் உறவினர் வந்தால் அவர்கள் முன் தோன்றுவேன் என்றும் கூறுகிறான். இப்பதிவில் தலைவியின் உறவுகள் போற்றப்பட்டுள்ளன.
- கமஞ்சூன் மாமழை, நல்கா வாடை, இரும்பனிப்பருவம் என்னும் புனைவுகள் பருவகாலங்களைத் தெளிவுபடுத்துகின்றன.

- கையறு மாலை, புன்கண் மாலை, சிறுபுன்மாலை, அருளில் மாலை என்னும் புனைவுகள் தலைவன் அருகில் இல்லாததால் துன்பம் தரக்கூடிய மாலைப் பொழுதெனும் கருத்தாளமிக்க பதிவுகளாய்க் காணப்படுகின்றன. கதிரவன் மறையும் காலம் உணர்த்துவதாய் பகல், அந்தி முதலான பொழுதுகளும் இடம்பெற்றுள்ளன.

- மருதநிலப் பொழுதுகளில் வைகறை, அதிகாலை என்னும் பொழுதுகளோடு இரவில் தாமரை மலரில் துஞ்சிய வண்டு வைகறைப் பொழுதில் நெய்தல் மலரில் தேனுண்டது எனும் சூழலியல் பதிவுகளும் காண்படுகின்றன.

- நெய்தல் நிலச் சிறுபொழுதாய் பகற்பொழுதின் பிற்கூறாகிய எற்பாடு சுட்டப்பட்டுள்ளது. இவை இலங்கு கதிர், எல் விசும்பு படர எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நெய்தல் மலர்தலைக் குறிப்பிட்டுக் காலைப்பொழுதும், அதன் இதழ்கள் கூம்பும் மாலைப்பொழுதும், கங்குல் முதலான பொழுதுகளும் சூழல்வயப்பட்ட பதிவுகளாய் இடம்பெற்றுள்ளன.

- கூதிர் காலமும், பெருமழைக் காலமும் பொருள்தேடிப் பிரிவதற்கு ஏற்ற காலமல்ல. அவ்வாறு பிரிவோர் அறிவுடையோரல்லர் எனும் புனைவுகள் நெடுவழிப்பாலையில் இடம்பெற்றுள்ளன. வேனில் நீடிய முற்றாவேனில் என்னும் புனைவுகளோடு கூதிர், கார்காலப் புனைவுகளும் பதிவாகியுள்ளன. நண்பகல், கங்குல், நள்ளிருள், விடியல், சிறுபுன்மாலை முதலான பொழுதுகளும் நிகழ்வுச் சூழல் புலப்படுமாறு பதிவு செய்யப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. உரையாசிரியர் குழு, புறநானூறு-1, புறநா.6:1-4.
2. மேலது, புறநா.17:1-2.
3. மேலது, புறநா.187 (உ.வி.), ப.452.
4. இளம்பூரணனார் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.14.
5. மேலது, புறத்.நூற்.13.
6. பரிமேலழகர் உரை, திருக்குறள்.80.
7. பி.ரா.நடராசன், (உ.வி.), அகப்பொருள் விளக்கம், நூற்.9.
8. ஸ்ரீகுமார், தமிழில் திணைக் கோட்பாடு, ப.5.
9. மேலது, ப.3.
10. ச.போ.சீனிவாசன், பத்துப்பாட்டில் வருணனை மரபுகள், ப.25.
11. உ.வே.சா., குறுந்தொகை நூலாராய்ச்சி, ப.xxviii.
12. கோவை சதாசிவம், உயிர்ப் புதையல், ப.7.
13. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, சிறுபாண்.100.
14. உ.வே.சாமிநாதன், குறுந்தொகை, நூலாராய்ச்சி, xxviii.
15. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ.), மலைபடு.255, ப.585.
16. கோவை சதாசிவம், உயிர்ப்புதையல், ப.8.
17. இளம்பூரணனார், தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.7.
18. மேலது, நூற்.8.
19. உ.வே.சா., குறுந்தொகை நூலாராய்ச்சி, xxxvii.
20. ச.போ.சீனிவாசன், பத்துப்பாட்டில் வருணனை மரபுகள், ப.51.
21. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, பொருநர். 199-202.
22. வலசை.வீரபாண்டி, வாழத்துடிக்கும் வனவிலங்குகள், ப.7.
23. கழகத் தமிழ் அகராதி, ப.290.
24. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்நெறி அகராதி, ப.447.
25. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர், நற்றிணை உரை, ப.112.
26. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.139.
27. இலா.குளோரியா சுந்தரமதி, சங்க இலக்கியம் மருதம், ப.2.
28. ச.போ.சீனிவாசன், பத்துப்பாட்டில் வருணனை மரபுகள், ப.79.
29. மேலது, ப.24.

30. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, பொருநர், 246-248.
31. மேலது, 168-169, சிறுபாண்.78.
32. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.134.
33. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, குறி.பா.87, நற்.338:2.
34. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்.15:1-3.
35. உ.வே.சாமிநாதன், குறுந்தொகை, ப.18.
36. மேலது, குறுந்.140:3.
37. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, மதுரை.314.
38. மேலது, பெரும்பாண்.23.
39. உ.வே.சாமிநாதன், குறுந்தொகை, குறுந்.67:5.
40. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, பெரும்பான்.130.
41. மேலது, மலைபடு.507.
42. மேலது, மலைபடு.14.
43. மேலது, மதுரை.313.
44. மேலது, பெரும்பாண்.88.
45. ஔவை.சு.துரைசாமி பிள்ளை, பதிற்.66:18.
46. இளம்பூரணனார், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருள்.அகத்.நூற்.27.
47. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.91.
48. ச.வே.சுப்பிரமணியன், (உ.ஆ.), பத்துப்பாட்டு, சிறுபாண்.8-11.

# இயல்-4

## பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கைக்கொடைகளும் தனித்தன்மைகளும்

**முன்னுரை**

பண்டைக்காலச் சூழல் இயற்கை வளம் நிறைந்தது. அக்காலத்து இயற்கை மக்களின் உணவு, உறைவிடம், வாழ்க்கைப் புலப்பாடு என அனைத்தையும் வழங்கும் கருவூலமாய் விளங்கியுள்ளது. உலகை இயக்கும் கருவிகளான ஐம்பெரும் ஆற்றல்களும், பல்லுயிர்களான தாவரங்கள், விலங்குகள், பறவைகள், பிற உயிர்கள், போன்றனவும், மனித மனத்தை வளப்படுத்தும் இயற்கையின் இயக்கங்களும், மற்றும் நிலவளங்கள், நீர்வளங்கள் முதலான இயற்கைக் கொடைகளும் பாண்டியநாட்டுப் புலவர்பாக்களில் எவ்வாறெல்லாம் வெளிப்படுகின்றன என்பதையும் இவ்வியற்கையை வெளிப்படுத்துவதில் பாண்டியநாட்டுப் புலவர்களின் தனித்தன்மைகள் குறித்தும் இவ்வியலில் ஆராய்ந்துரைக்கப்பட்டுள்ளது.

தற்கால மக்கள்தொகைப் பெருக்கத்தால் மீட்டெடுக்க வேண்டிய நிலையில் உள்ளது. ஆதலால் இயற்கையைப் பேணிக்காப்பதும்; அரிதாகி வருவனவற்றைப் போற்றி வளர்ப்பதும் உலக மக்கள் அனைவருக்குமான கடமை என்பதை வலியுறுத்துவதாய் இவ்வியல் அமைகிறது.

**இயற்கைக்கொடையளிப்பு**

கொடை என்பது குறிப்பிட்ட வரையறை, அளவீடுகள் இல்லாதது. இது கொடுப்பவர் மனமுவந்து தரும் பரிசுப்பொருளாய், பெறுபவரின் வளமை மற்றும் பொறுப்புக்கு உரித்தாக்குகிறது. இக்கொடையாளியின் மனத்தையும் இயக்கக்கூடியது, இயற்கைக் கொடையாகிய வான்மழை என்பதை,

> **“தானந் தவம்இரண்டுந் தங்கா வியன்உலகம்**
> **வானம் வழங்கா தெனின்”**[1]

என்கிறது வள்ளுவம். **வான்மழை** பல்லுயிர்த் தொகுதிகளைப் **புவியில்** உருவாக்கி அவற்றின் வாழ்வாதாரமாய் அமைகிறது. மழைமேகம் பெரும்பான்மையாகக் **கடலில்** தோன்றுகிறது. **கதிரவன்** கடல்நீரை

ஆவியாக்குகிறது. மேகமுகடுகளைக் **காற்று** குளிர்வித்து மழையாகப் பொழிகிறது. இவ்வாறு ஐம்பூத ஆற்றல்களை இடமாகக்கொண்டு இவ்வுலக இயக்கத்திற்கு உதவும் அனைத்துப் பொருட்களும் இயற்கைக் கொடையாகும்.

**உலகின் இயக்கம்**

உலகமென்பது நிலம், நெருப்பு, நீர், காற்று, வானம் என்ற ஐம்பூதங்களின் ஒருங்கிணைந்த இயக்கமாகும். இதனை,

> **"நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்துங்**
> **கலந்த மயக்கம் உலகம்"[2]**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். ஐம்பூதங்களின் சமச்சீரான நிலையில் உலகம்இயங்குவதை,

> **"நீரும் நிலனும் தீயும் வளியும்**
> **மாக விசும்போடு ஐந்துடன்" (மதுரை.453-454)**

என்று மாங்குடி மருதனார் பதிவுசெய்துள்ளார்.

உலகம் நிலைபெற்று இயங்குவதற்குக் காரணமான காற்று, நீர், நெருப்பு என்பனவற்றை உட்பொருளாக்கி,

> **"புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய**
> **மலர்தலை யுலகம்" (பெரும்பாண்.409-410)**

என்று பரந்துபட்ட கடலும், வானும் குறித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். கிரேக்க தத்துவ அறிஞர் தாலஸ் "இப்பிரபஞ்சமானது இயற்கையானது இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தி ஏதும் கிடையாது"[3] என்று கூறுகிறார். இக்கூற்றுகள் அனைத்தும் ஐம்பூதங்களின் சமச்சீரான இயக்கத்தால் இவ்வுலகம் நிலைபெற்றுள்ளது என்பதை உணர்த்துகிறது. புவியின் தோற்றம் பல பரிணாமங்களை உடையது. வானம்தான் அனைத்திற்கும் முதன்மையாய்த் திகழ்கிறது.

**வானம்**

கோள்களும், விண்மீன்களும் தோற்றம் தரும் பின்புலமாக வானம் அமைகிறது. இது "அந்தரம்"[4], "மாதிரம்"[5], "வானம்"[6], "விசும்பு"[7], "விண்"[8] என்பனவாய்ப் பல பதிவுகளைப் பெற்றுள்ளது.

**"மாக விசும்பின் ....................."** **(அகநா.253:24)**

என்று நக்கீரர் வானத்தை இருமுறையடுக்கியுள்ளார். இதற்கு (மாகவிசும்பு) 'திக்குகளையுடைய ஆகாயம்' என்று நச்சினார்க்கினியரும், மாகமாவது 'பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் நடு"[9] என்று பரிமேலழகரும் பொருளுரைத்துள்ளனர். வானத்தின் உயரமும், அகலமும் பலவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவற்றை,

**"தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்**
**வான்தோய் நிவப்பு"** **(முருகு.287-288)**
**"வான் தோய் மாடத்து"** **(பெரும்பாண்.333)**
**"வானம் ஊன்றி மதலை"** **(பெரும்பாண்.346)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. இதனுள் வானத்தின் மிகுந்த உயரத்தை முருகனின் திருவுருவத்தோடு நக்கீரர் ஒப்பிட்டுள்ளார். உயர்ந்த மாடங்கள், கலங்கரை விளக்கம் முதலானவற்றின் உருவங்களோடு பெரும்பாணாற்றுப்படை குறிப்பிட்டுள்ளது.

**செவ்வானம்**

செவ்வானப் புனைவில் முருகன், சிவன், திருமால் முதலான தெய்வங்களின் உருவங்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. அந்திநேரச் செவ்வானில், தம் இருப்பிடம் நோக்கி விரையும் கொக்குகளை முருகன் அணிந்துள்ள முத்து ஆரம்போல் காட்சிதருகிறது என்கிறார் நக்கீரர். செவ்வானத்தோடு நீலக்கடலையும் இணைத்து, சிவனும் திருமாலும் சேர்ந்திருக்கும் காட்சி தெரிவதை மதுரைக்கண்ணத்தனார் புனைந்துள்ளார். இப்புனைவுகளை,

**"நெடுவேள் மார்பின் ஆரம்போல,**
**செவ்வாய் வானம் தீண்டி மீன் அருந்தும்**
**பைங்காற் கொக்கினம் நிரைபறை உகப்ப"** **(அகநா.120:1-3)**

**"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**
**உருஉடன் இயைந்த தோற்றம் போல**
**அந்தி வானமொடு கடல் அணிகொளாஅ"** **(அகநா.360:6-8)**

என்னும் பாடல்களின் அடிகளால் அறியலாம்.

தொண்டைமானின் போர்க்களத்தில் ஓடும் இரத்த ஆறு, அதிலசையும் யானைப் பிணங்கள், பிறைபோல் தோன்றும் தந்தம் முதலானவை இப்புலவருக்கு அந்திவானக் காட்சியைப் புலப்படுத்தினவாம். இதனை,

**“அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்**
**அந்தி வானத்து ஆடுமழை”  (பெரும்பாண்.412-413)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**வானவில்**

பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் பல வண்ணங்களைக் கொண்ட வானவில் சில பதிவுகளைப் பெற்றுள்ளது. திருமாலின் மார்பில் விளங்கும் பலவண்ண மலர்மாலைக்கு வானவில்லை ஒப்பிடுகிறார் ஆலம்பேரிச்சாத்தனார். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாணர்கள் மீன்பிடிக்கும் குளத்தில் பலவண்ண மலர்கள் இருந்ததை, இந்திரவில் போன்று பல வண்ணங்களையுடையது என்கிறார். பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் கிளியின் கழுத்து நிறங்களுக்கு வளைந்த வரிவில்லை உவமையாக்குகிறார். இப்பதிவுகளை,

**“திருவில் தேஎத்துக் குலைஇ”  (அகநா.175:16)**
**“அகல்இரு வானத்துக் குறைவில் ஏய்ப்ப”  (பெரும்பாண்.292)**
**“எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்**
**செவ்வாய்ச் சிறுகிளி”  (அகநா.192:4-5)**

என்னும் பாடல்களின் அடிகள் விளக்குகின்றன. இவ்வாறு வானவில்லின் வண்ணங்கள் உரைக்கப்பட்டுள்ளன.

**ஞாயிறு**

தானே ஒளிரும் ஞாயிற்றை நாள்மீன் என்பது வழக்காகும். “சூரியனின் ஆயுள் 1000 கோடி ஆண்டுகள். தற்போது 500 கோடி ஆண்டுகள் முடிந்திருக்கின்றன. இன்னும் 500 கோடி ஆண்டுகள் (இயங்கும்) உயிரோடு இருக்கும். நாம் வாழும் பூமியைவிட சூரியன் 13 லட்சம் மடங்கு பெரியது. சூரிய குடும்பத்தின் மொத்த எடையில் 99 சதவீதத்தைச் சூரியன் கொண்டுள்ளது”[10] என்பது அண்டஞோனி சூரியன் என்னும் கட்டுரைக் கருத்தாயுள்ளது. “ஒரு கட்டத்தில் பிரபஞ்சமும் காலமும் முடிவுக்கு வந்துவிடும் என்பது க்வாண்டம் மெகனிக்ஸின் கருத்தாயுள்ளது.”[11]

ஞாயிற்றின் வேறு பெயர்களை “ஆதவன், கதிரவன், ஞாயிறு, பகலவன், அனலி, எல்லி, கனலி, வெய்யவன், வெய்யோன், தினகரன்,

பானு, உதயன், அருணன், இரவி, அருக்கன்"[12] என்று குறிப்பிடப்பட்டுள்ளன. ஞாயிறு இவ்வுலகின் இயக்கத்திற்கும், உலக உயிர்களின் வாழ்விற்கும் காரணமாகிறது. இதனால் உலக மக்களால் போற்றப்படுகிறது. இதனை,

**"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டாங்கு" (முருகு.1-2)**

என்று நக்கீரர் கதிரவனின் சிறப்பை முருகனோடு ஒப்பிட்டுள்ளார்.

**இளங்கதிர் ஞாயிறு**

கதிரவனின் தோற்றம் இருளை நீக்கி ஒளிதரக்கூடியது. காலை நேரத்தில் வெம்மை குறைந்து காணப்படுவதால் இளங்கதிர் ஞாயிறு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**"இளங்கதிர் ஞாயிறு ......" (மலைபடு.464)**
**"இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து**
**விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி"[13]**

என்னும் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

உலக உயிர்களுக்குப் புத்துணர்வு தரக்கூடிய இளஞாயிற்றின் ஒளி எதிரெதிராய் அமைந்துள்ள மலைகளில் பட்டு ஒளிர்வதை மாணிக்கப்பாறை போன்றதெனக் கபிலர் ஒப்பிட்டுள்ளார். இதனை,

**"விடியல் வெங்கதிர் காயும் வேய்அகல் அறை"**
**(குறி.கலி.45:1)**
**"கதிர்விரி கனைச் சுடர்க் கவின் கொண்ட நனஞ்சாரல்"**
**(குறி.கலி.44:1)**

என்னும் பாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

**நண்பகல் ஞாயிறு**

நண்பகலில் வெப்பம் மிகுந்திருப்பதால் அதனை யாரும் விரும்புவதில்லை. இதன் வெம்மையும், கடுமையும் 'கடுங்கதிர்' என்று அடைமொழியோடு பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

**"காடுகவின் ஒழியக் கடுங்கதிர் தெறுதலின்**
**நீடுசினை வறிய ஆக" (அகநா.143:4-3)**

என்று ஆலம்பேரிச்சாத்தனாரும்,

**"வெந்தெறுர் கனலியொடு" (பெரும்பாண்.17)**
**"அகல்இரு விசும்பில் பாய்இருள் பருகிப்**
**பகல்கான்று எழுதரு பல்கதிர்ப் பருதி**
**காய்சினம் திருகிய கடுந்திறல் வேனில்" (பெரும்பாண்.1-3)**

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் குறிப்பிட்டுள்ளனர். இதனை "சினம் கொண்ட கதிரவனின் ஆதிக்கமும் ஆட்சியுமே முதுவேனிலுக்குக் காரணம் என்பது அப்புலவரின் கற்பனை போலும்"[14] என்று மு.வரதராசன் குறித்துள்ளார்.

**கதிரவனின் ஒளி மழுங்குதல்**

மாலைப்பொழுதில் கதிரவனின் ஒளி மழுங்குதல் குறித்துச் சில பதிவுகள் உள்ளன. இவை பிரிவுத்துயரை மிகுவிக்கும் மாலைப்பொழுதோடு காணப்படுகின்றன. இதனை,

> **"பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்து" (அகநா.48:23)**
> **"இலங்கு கதிர் மழுங்கி எல்விசும்பு படரப்**
> **புலம்புதந் தன்றே புகன்றுசெய் மண்டிலம்" (நற்.152:3-4)**

என்னும் பாடலடிகளில் தங்கால் முடக்கொற்றனாரும், மதுரை இளங்கண்ணிக் கௌசிகனாரும் பதிவு செய்துள்ளனர்.

**ஞாயிற்றுத் தேரும் சுங்கவரியும்**

கதிரவனின் ஒற்றைச் சக்கரத் தேரினை ஓய்வின்றிச் செலுத்துகின்ற குதிரைகள் போல காவிரிப்பூம்பட்டினத்தில் சுங்கவரி வசூலிப்போர் ஓய்வில்லாமல் செயல்பட்டுள்ளனர். இதனை,

> **"காய்சினத்த கதிர்ச்செல்வன்**
> **தேர்பூண்ட மா அபோல**
> **வைகல்தோறும் அசைவின்றி**
> **உல்கு செய..." (பட்.122-123)**

என்று கதிரவனின் ஓயாத சுழற்சி குறித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். இதனை "ஒளியின் பகுதிகளாகிய ஏழு வண்ணங்களை ஏழு குதிரைகளாகக் கற்பனை செய்து அவற்றால இழுக்கப்படும் ஒற்றைச் சக்கரத்தேரிலே கதிரவன் வருவதாகக் குறிப்பது வழக்கு. இவ்வழக்கொடு பொருந்திய குறிப்பும் சங்க இலக்கியத்தில் உண்டு"[15] என்று மு.வரதராசன் பதிவு செய்துள்ளார்.

**விளித்து மொழிதல்**

ஞாயிறு, திங்கள் என்பனவற்றை விளித்துப்பாடுவது தமிழ் வழக்காயுள்ளது. திங்களைப் பெண்மையின் அழகிற்கும், ஞாயிறை

ஆணின் வீரத்திற்கும் ஒப்பிடுதலுண்டு. ஞாயிறும் ஒப்பாத வீரத்தினன் என்று சேரமான் கடுங்கோன் வாழியாதனைக் கபிலர் புகழ்கிறார்.

கதிரவன் பகலில் மட்டும் தோன்றும் வரையறை உள்ளவன். நிலவுக்கு வழிவிட்டுப் புறங்காணும் தன்மையுள்ளவன், இடம்மாறித் தோன்றுபவன், மலையில் மறைதல் போன்ற இப்பண்புகளால் இம்மன்னனுக்கு ஒப்பாகமாட்டாய். ஏனெனில், சேரமான் கடுங்கோன்வாழியாதன் நிலப்பொதுமை விரும்பாமல் நாட்டின் எல்லையை விரிவுபடுத்துவதில் சோராத உள்ளமுடையவன். பகைவரை வஞ்சிக்காமல் போரிடும் ஆற்றல் உள்ளவன். தனக்கென எதையும் சேர்த்துவைக்காத கொடையாளன். இத்தகைய மன்னனை எவ்வாறு ஒப்புவாயென விளித்துக் கூறியுள்ளார். இதனை,

**"பொழுது என வரைதி; புறக்கொடுத்து இறத்தி;**
**மாறி வருதி; மலை மறைந்து ஒளித்தி**
**யாங்கனம் ஒத்தியோ? வீங்கு செலல் மண்டிலம்!**
**அகல்இரு விசும்பினாலும்**
**பகல் விளங்குதியால் பல் கதிர் விரித்தே" (புறநா.8:6-10)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**கதிரவனின் தோற்றமும் மறைவும்**

பண்டைப்பாக்களில் கதிரவனின் உதயத்தைக் கடலோடு தொடர்புபடுத்துதல் காணப்படுகிறது. மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார், கதிரவன் கடலில் தோன்றுவதாகக் குறித்துள்ளார். இதனை,

**"...................... பல்கதிர் ஞாயிறு**
**வயங்குதொழில் தரீஇயர் வலன்ஏர்பு விளங்கி**
**மல்குகடல் தோன்றி ......" (அகநா.298:1-3)**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. "இதே கருத்தை நக்கீரரும் குறிப்பிட்டுள்ளார்."[16]

கதிரவன் மறைந்ததை மலையோடு தொடர்புபடுத்துதல் காணப்படுகிறது. சேந்தம்பூதனாரின் பாடலில் மலையில் மறையும் கதிரவன் குறித்துப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

**"பல்கதிர் மண்டிலம் பகல் செய்தாற்றிச்**
**சேயுயர் பெருவரைச் சென்ற"** **(நற்.69:1-2)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**அகன்ற நிலவுலகம்**

கடல் உயர்ந்த அலைகளை உடையது. இது இந்நில உலகின் புற எல்லையாகத் தோன்றுகிறது. மறுபுறம் பெரிய தேனடைகள் தொங்குகின்ற உயர்ந்த மலைகள் காணப்படுகின்றன. இக்கடலும், மலையும் இணைந்த தோற்றமாய் இந்நிலவுலகு அமைந்துள்ளது என்பதை,

**"ஓங்குதிரை வியன்பரப்பின்**
**ஒலிமுந்நீர் வரம்பு ஆக**
**தேன்தூங்கும் உயர்சிமைய**
**மலைநாறிய வியன்காலத்து"** **(மதுரை.1-4)**

என்று அகன்ற உலகின் தோற்றத்தை மாங்குடி மருதனார் குறிப்பிட்டுள்ளார். கண்ணுக்குப் புலனாகும் இந்நிலத்தோற்றம்தான் கடலையும், மலையையும் இவ்வுலகுக்கு எல்லையாக்கியுள்ளது. இந்த எல்லைகள் தான் கதிரவன் கடலில் தோன்றுவதற்கும், மலையில் மறைவதற்கும் இடனாகின்றன.

இவ்வாறு பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் ஞாயிறு பல பெயர்களில் இடம்பெற்றுள்ளது. ஞாயிற்றின் ஒளியாற்றல், வெப்ப ஆற்றல் போன்றவற்றைக் கருத்தில் கொண்டு பெயர்ப் புனைவுகள் இடம்பெற்றுள்ளன. வெப்பம் குறைந்த ஒளியாற்றல் இளங்கதிர் ஞாயிறு எனப்படுகிறது. நண்பகலின் கடுமையான வெப்பம் கடுங்கதிர் எனப்படுகிறது. மாலை நேரத்து ஒளி குறைந்த ஞாயிறு கதிர் மழுங்கிய ஞாயிறு எனப்படுகிறது. இப்பதிவுகள் ஞாயிற்றின் ஒளியாற்றலையும், வெப்ப ஆற்றலையும் ஒருங்கிணைத்து வெளிப்படுத்துகின்றன.

**திங்கள்**

நிலா பூமிக்கான ஒரேயொரு இயற்கைத் துணைக்கோளாகும். "நிலா"[17], "மதி"[18], "சுடர்நுதல்"[19], "உவவு"[20], "குழவித்திங்கள்"[21] எனப் பல பெயர்களில் எடுத்தாளப்பட்டுள்ளன. திங்களின் குளிர்ச்சியான ஒளி, முழுமதியழகு, பிறைவடிவம் முதலானவை பெண்களின் அழகோடு ஒப்பிடப்பட்டுள்ளன. இதனை,

**"கவின் பெறு சுடர்நுதல்" (குறி.கலி.58:3)**
**"பசுநிலா விரிந்த பல்கதிர் மதியின்**
**பெரு நல் ஆய் கவின் ..." (அகநா.57:11-12)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. பிசிராந்தையார், தன் நண்பன் கோப்பெருஞ்சோழனின் முகம்போல முழுமதி தோற்றம் தருகிறது என்கிறார். இதற்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் "தன் நாட்டிற்கு அருள் செய்யும் அவனுடைய முகம் போல"[22] என்கின்றனர். இதனை,

**"............................அண்ணல்**
**நாடுதலை அளிக்கும் ஒண்முகம் போலக்**
**கோடுகூடும் மதியம் முகில்நிலா விளங்கும்" புறநா.67:2-4)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இவ்வாறு அழகு மற்றும் அருள்வயப்பட்டதாய் முழுமதி காணப்படுகின்றது.

**முழுமதி**

முழுமதி இரவின் அழகை வெளிப்படுத்தும் இயல்புடையது. இது இரவைப் பகல்போல் ஒளிரச்செய்கிறது என்பதை,

**"வான்கண் விரிந்த பகல் மருள் நிலவு" (அகநா.228:8)**

என்று அண்டர்மகன் குறுவழுதியார் விளக்குகிறார். இந்நாளில் விழாக்கள் நடைபெறுவது குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நிகழ்வு கூடியிருக்கும் தலைமக்களுக்கு இன்பம் தருகிறது. பிரிவில் வருந்தும் தலைவிக்குப் பெருந்துன்பத்தை உண்டாக்கி, இரவு முழுவதும் தூங்காத தவிப்பைத் தருகிறது. இதனால் ஏற்படும் துன்பம், இவ்வுலகு என்னொடு போர் செய்யவும் அல்லது என் உள்ளம் இவ்வுலகோடு போர் செய்யவும் கூடியதாய் அமைந்துள்ளது எனத் தலைவி கூறுகிறாள். இதனை,

**"நிலாவே நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பிய**
**பான்மலி கடலில் பரந்துபட் டன்றே**
**ஊரே, ஒலிவருஞ் சும்மையொடு மலிதொகுபு ஈண்டிக்**
**கலிகெழு மறுகின் விழவய ரும்மே**
**.......................................**
**அதனால் என்னொடு பொருங்கொல்இவ் உலகம்**
**உலகமொடு பொருங்கொல்என் அவலமுறு நெஞ்சே"**
**(நற்.348:1-10)**

என்னும் பாடலில் வெள்ளிவீதியார் புனைந்துள்ளார். பாரி மகளிரின் பாடலில், கடந்துசென்ற முழுமதியின் நினைவுகள் மனத்தை வருத்துவதாய் அமைந்துள்ளது. இதனை,

**"அற்றைத் திங்கள் அவ் வெண்நிலவின்**
**எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;**
**இற்றைத் திங்கள் இவ் வெண் நிலவின்**
**வென்று எறி முரசின் வேந்தர் எம்**
**குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே!"**
**(புறநா.112:1-5)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இவ்வாறு உள்ளத்தின் உணர்வுகளைப் புலப்படுத்தும் பதிவுகளைக் காணமுடிகிறது. இதனை "வோர்ட்ஸ் வொர்த் கவிதை என்பது கவிஞனின் உள்ளத்தில் ஊறி வழியும் உணர்ச்சிப் பெருக்கின் வெளிப்பாடு என்கிறார்"[23] என்னும் இக்கருத்தை ச.அகத்தியலிங்கம் தம் சாகாவரம் என்னும் நூலில் எடுத்தாண்டுள்ளார்.

**வளர்பிறையும் தேய்பிறையும்**

நிலந்தரு திருவிற் பாண்டிய நெடுஞ்செழியனின் வெற்றி வளர்பிறை போல வழிவழியாகத் தொடர வேண்டுமென்கிறார். அம்மன்னனின் பகைவர்கள் தேய்பிறை போலக் குறைந்து ஆக்கம் கெடுவர் என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்**
**வழிவழிச் சிறக்க நின் வலம்படு கொற்றம்**
**குணமுதல் தோன்றிய ஆர்இருள் மதியின்**
**தேய்வன கெடுக, நின் தெவ்வர் ஆக்கம்" (மதுரை.193-196)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

**மதிமுகம்**

முழுமதி மழைமேகங்களுள் மறைந்து தோன்றுவது குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நாளில் விழாக்காணும் மகளிர், நிலா முற்றங்களில் கூடுகின்றனர். அங்குள்ள கம்பங்களில் அசையும் கொடிகளுக்கிடையே அப்பெண்களின் முகம் தோன்றி மறைகின்றது. இதை மழைக்கால மேகங்களுக்கிடையே மறைந்து மறைந்து தோன்றும் நிலவைப் போலுள்ளது என்கிறார். இதனை,

“தெள்ளரிப் பொற்சிலம்பு ஒலிப்ப ஒள்ளழல்
தாஅற விளங்கிய ஆய்பொன் அவிர்இழை
அணங்குவீழ் வன்னபூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றம் தெருவுடன் கமழ
ஒண்குழை திகழும் ஒளிகெழு திருமுகம்
திண்காழ் ஏற்ற வியல்இரு விலோதம்
தெண்கடல் திரையின் அசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத்து அரமியம் தோறும்
மழையாய் மதியின் தோன்றுபு மறைய” (மதுரை.444-452)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**பிறை**

பண்டைப்பாக்களுள் மூன்றாம் பிறை, எட்டாம் பிறை முதலான பதிவுகள் இடம்பெற்றுள்ளன. அக்கால மக்கள் மூன்றாம் பிறையைத் தொழுது வணங்கியுள்ளனர். இருளடர்ந்த இருநாட்களின் பின்னர் தோன்றும், மூன்றாம்நாள் சந்திரன் அரிய காட்சியாய் விளங்குகிறது. இப்பிறை இளம்பிறை எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

“குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறை” (மதுரை.194)

“பிறை பிறந்தன்ன, பின் ஏந்து கலைக்கடை” (பெரும்பாண்.11)

“இளம்பிறையன்ன கோட்ட கேழல்” (ஐங்.264:1)

என்னும் பாடலடிகள் விளக்கும். எட்டாம்பிறைத் தோற்றம், தலைவியின் நெற்றிக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. பாரியின் பறம்பு நாட்டிலுள்ள சிறிய குளத்தின் கரை, எட்டாம் பிறைபோன்று வளைந்த தோற்றமுடையது. இப்பதிவுகளைக் கபிலர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

“கவின் பெறு சுடர்நுதல்” (குறி.கலி.58:3)

“எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரைத்
தெண்ணீர்ச் சிறுகுளம்” (புறநா.118:2-3)

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**கற்பனைப் பதிவுகள்**

நக்கீரர் வானின் திலகமாய்த் திங்களைப் பதிவு செய்துள்ளார். மேகங்களற்ற வானில் தெளிவாகத் தோன்றும் நிலவின் நிழலுருவத்தைக் குறுமுயலோடு காட்சிப்படுத்துகிறார். கபிலர் மூங்கிலின் உச்சியிலிருந்து அசைந்தாடும் குரங்குக்குட்டி சிறுகோலைக் கொண்டு நிலாவை

அடிக்கிறதென்கிறார். இக்கற்பனைத் தூண்டுதலை “ஞாயிறு தரும் கவர்ச்சியினும் புலவர்க்குத் திங்கள் தரும் கவர்ச்சியே பெரிது”[24] என்பது உணர்த்துகிறது. இதனை,

**“விசும்பின் திலகமொடு பதித்த**
**திங்கள் அன்ன நின் திருமுகத்து” (அகநா.253:24-25)**
**“மழைகால் நீங்கிய மாக விசும்பில்**
**குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து” (அகநா.141:6-7)**
**“இருவெதிர் ஈர்ங் கழை சிறுகோல்**
**மதி புடைப்பது போல்” (ஐங்.280:2-3)**

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

**விண்மீன்கள்**

பழந்தமிழ்ப்பாக்களுள் மீன், பன்மீன் என்னும் பொதுப்பெயரில் சில பதிவுகள் இடம்பெறுகின்றன. இவை நிலவைச் சூழ்ந்துள்ள விண்மீன்கள் மற்றும் அவற்றின் ஒளிர்தலைப் புலப்படுத்துகின்றன. இதனை,

**“பன்மீன் ஞாயிறு” (பதி.பத்து.64:1)**
**“பன்மீன் நடுவண் திங்கள் போல” (மதுரை.769)**
**“சேண்விளங்கு இயற்கை வாள்மதி கவைஇ**
**அகலா மீனின் அவிர்வன இமைப்ப” (முருகு.87-88)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். ஞாயிறும், திங்களும் போன்று விண்மீன்களும் ஒளிர்கின்றன. “அண்டத்தில் பல பில்லியன் கணக்கான விண்மீன் பேரடைகள் உள்ளன. ஒவ்வொரு விண்மீன் பேரடைகளிலும் 100 பில்லியனுக்கும் அதிகமான விண்மீன்கள் உள்ளன. மிகத்தெளிவான இரவு வானில் ஒரு மனிதனுடைய வெற்றுக் கண்ணுக்கு 600 முதல் 3000 வரை தென்படும்.”[25] இவ்வாறு பல விண்மீன்களை உற்றுநோக்கிய புலவர்கள் சில பெயர்களைச் சூட்டியுள்ளனர். அவை உரோகினி, அறுமீன் (கார்த்திகை), மகவெண்மீன், சிறுமீன் (அருந்ததி), வெள்ளி என்பனவாகும்.

**உரோகினி, வெண்மீன்**

நெடுநல்வாடை ஓவியக்காட்சியில், திங்களின் அருகில் ரோகினி இருப்பதை நக்கீரர் குறிப்பிட்டுள்ளார். வடக்கிலிருக்கும் வெள்ளிமீன் தெற்குத்திசைக்குச் சென்றால், மழை பொய்த்துவிடும் என்னும் தமிழரின் நம்பிக்கையைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பதிவு செய்துள்ளார். இதனை,

**“திண்ணிலை மருப்பின் ஆடுதலை யாக**
**விண்ஊர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து**
**முரண்மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய**
**உரோகினி நினைவனள்” (நெடுநல்.160:163)**

**“வசைஇல்புகழ் வயங்கு வெண்மீன்**
**திசை திரிந்து தெற்கு ஏகினும்**
**...............................**
**வான்பொய்ப்பினும்” (பட்.1-5)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. இவை கோள்களின் சுழற்சியால் உண்டாகும் வானிலை மாற்றத்தை உணர்த்துகின்றன.

**அருந்ததி, மகவெண்மீன்**

அருந்ததி போன்ற கற்பினள் என்பது பண்டைத்தமிழ் வழக்காகும். “வானின் வடபகுதியில் காணப்படும் விண்மீன் தொகுதிக்கு இந்தியர்கள் சப்தரிஷி மண்டலம் என்று பெயர் கொடுத்துள்ளனர். வால்பகுதியில் உள்ள விண்மீனிற்கு வசிஷ்டர் என்று பெயர். அதன் அருகில் உள்ள சிறிய விண்மீனை வசிஷ்டரின் மனைவி அருந்ததி என்கின்றனர்.”[26] வானத்து வடபகுதியிலிருக்கும் அருந்ததி மீன் போன்ற கற்பினள் என்று பண்டைக்கால மகளிர் போற்றப்பட்டுள்ளனர். இதனை,

**“பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**
**சிறுமீன் புரையும் கற்பின்...” (பெரும்பாண்.302-303)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

சோழநாட்டின் வளம் கூறுமிடத்து, மழைமேகங்கள் நீங்கிய பரந்த வானில் திங்களைச் சேர்ந்துள்ள மகமாகிய வெண்மீன் போன்று மலர்ப் பொய்கைகளும் அவற்றின் கரைகளும் இருந்தன என்பதனை,

**“மழைநீங்கிய மாவிசும்பில்**
**மதிசேர்ந்த மகவெண்மீன்” (பட்.34-35)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**விடிவெள்ளி**

விண்மீன்களுள் பெரிதாய்த் தோற்றம் தருவது வெள்ளி. இது கதிரவன் தோன்றுதற்கு முன்னர் தோன்றி இருளை நீக்கி ஒளிரக்கூடியது. “பொழுது புலர்வதன் முன் விடியலுக்கு முன்னோடி போல் கீழ்த்திசையில் தோன்றி நீலவானத்தின் பரப்பிலே இருள் கடியும் இந்த விடிவெள்ளியின்

காட்சி புலவர்களின் கருத்தைக் கவர்ந்திருப்பதில் வியப்பில்லை"[27] என்னும் கூற்றிற்கு,

**"குணக்குத் தோன்று வெள்ளியின் இருள்கெட விரியும்**
**கயக்கணம் கலித்த பொய்கை"** **(நற்.230:4-5)**

என்னும் இப்பாடல் சான்றாகிறது. கதிரவன் தோன்றும் வேளையில் இம்மீனின் ஒளி குறைகிறது. இது நீராடும் மகளிரின் காதணியை எடுத்துச்சென்ற மீன்கொத்திப் பறவை வேள்வித்தூணில் அமர்ந்திருக்க, குறைந்து ஒளிரும் அணிகலன் போன்றுள்ளது என்பதனை,

**"இரைதேர் மணிச்சிரல்**
**வைகுறு மீனின் பையத் தோன்றும்"** **(பெரும்பாண்.313-318)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

**கார்த்திகைப் பெருவிழா**

நக்கீரரால் கார்த்திகைப்பெருவிழா சிறப்புறப் புனையப்பட்டுள்ளது. "அறுமீன் என்பது கார்த்திகை நாள்"[28] என்று பின்னத்தூர் நாராயணசாமி உரைத்துள்ளார். கார்த்திகைநாளில் அறுமீனின் அருகில் திங்களிருப்பதைக் குறித்துள்ளார். இருளகன்ற நள்ளிரவில் வீதிகளெங்கும் விளக்குகளேற்றி, மாலைகள், தோரணங்கள் அமைத்து ஊர்மக்கள் அனைவரும் இவ்விழாவினைக் கொண்டாடினர் என்கிறார். இதனை,

**"............................ மதிநிறைந்து**
**அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்**
**மறுகுவிளக் குறுத்து, மாலை தூக்கி,**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய விழவு" (அகநா.141:7-10)**

என்னுமடிகள் உணர்த்துகின்றன.

**நீராதாரம்**

நீர்தான் உலக உயிர்களின் முதன்மை ஆதாரமாகும். உயிர்களின் பிறப்பிடமும் நீர்தான். இதனை "நீர்இன்று அமையாது உலகு"[29] என்கிறது வள்ளுவம். நீரின் மூலாதாரமாகிய வான்மழை மிகுந்திருப்பினும், குறைந்து போயினும் நிலவியலில் பெரும் மாற்றங்கள் உண்டாகும். இத்தகைய மழையின் இயல்பைத் திருவள்ளுவர்,

**"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை"[30]**

என்கிறார்.

**மழைப்பொழிவு**

நந்நீராதாரங்களில் முதன்மையானது வான்மழையாகும். கடல்நீர் அதிகமாகவும், நிலத்துநீர் குறைவாகவும், ஆவியாதலில் மேகங்கள் உண்டாகின்றன. நீர்ச்சுழற்சியால் மேலெழுந்து சென்ற மேகங்கள் மீண்டும் மழையாகப் பொழிகின்றது. வான்மழையின் உருவாக்கத்தை "கார்"[31], "கொண்டல்"[32], "கொண்மூ"[33] என்னும் பதிவுகள் விளக்குகின்றன. மழைப்பொழிவை "தூவல்"[34], "துளி"[35], "மாரிமொக்குள்"[36], "பெயல்"[37], "மாமழை"[38] என மழையின் ஈரப்பதம் முதல் பெருகிவரும் வெள்ளப்பெருக்கு வரையிலான பதிவுகள் காணப்படுகின்றன. இவை இக்கால அறிவியல் திறத்தினும் சிறப்புடையதாய் உள்ளன.

கடல்நீரினை முகந்த சூழ்கொண்ட மேகங்கள் மேலெழுந்து சென்று, இடித்து மின்னி பெருமழை பொழிகின்றது. ஞாயிற்றின் வெம்மையைத் தணிக்க விரும்பிய பெண்யானை, தன் துதிக்கை மறையுமளவுள்ள பெருவெள்ளத்தில் களிற்றுடன் விளையாடுகிறது. இவ்வாறு நிலமும் வானமும் ஒன்றாகுமாறு உருவான பெருமழைப் பொழிவை மதுரையாசிரியர் நல்லந்துவனார் குறித்துள்ளார். இதனை,

> **"கடல் முகந்து கொண்ட கமஞ் சூல் மாமழை**
> **சுடர் நிமிர் மின்னொடு வலன் ஏர்பு, இரங்கி,**
> **என்றூழ் உழந்த புன் தலை மடப் பிடி**
> **கை மாய் நீத்தம், களிற்றொடு படீஇய,**
> **நிலனும் விசும்பும் நீர் இயைந்து ஒன்றி" (அகநா.43:1-5)**

என்ற பாடலடிகள் விளக்கும்.

கபிலர் "இளமழை"[39] என்று முதல் மழையை இரு இடங்களில் குறித்துள்ளார். "மழை பெய்வதால் உண்டாகும் ஆரவாரத்துடன் கூடிய மிகுதியான மழைப்பொழிவை "படுமழை பொழிந்த"[40], "கடலெனக் காரென ஒலிக்கும்"[41] என்னும் புனைவுகள் பெருவெள்ளத்தை உணர்த்துகின்றன.

**மழைப்பாராட்டு**

கபிலர் பல நன்மைகளைத் தரும் மழையின் பெருங்கொடையைப் பாரியுடன் ஒப்பிடுகிறார். பெருங்குன்றூர் கிழாரின் பாடலில் தலைவனின் வரவை உணர்ந்து மின்னி, இடித்துத் தனக்குப்

பேரின்பம் தந்த மழையைப் போற்றி, என்ன கைம்மாறு செய்வேன் என்று தலைவி கூறுகிறாள். இப்பதிவு மழைக்கு ஈடுசெய்யக்கூடிய இன்னொரு நிகழ்வு இல்லை என்பதை உணர்த்துகின்றது. இதனை,

> **"பெருங்கல் நாடன் வரவறிந்து விரும்பி**
> **மாக்கடன் முகந்து மணிநிறத் தருவிற்**
> **தாழ்நீர் நனந்தலை அழுந்துபடப் பாஅய்**
> **மலையிமைப் பதுபோல் மின்னிச்**
> **சிலைவல் ஏற்றொடு செறிந்திடும் மழைக்கே"** (நற்.112:5-9)

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்தும்.

**இடிமுழக்க மருட்சி**

புலி, களிற்று யானையைக் கொன்றதால் பெரும்பூசலொலி ஏற்படுகிறது. அவ்வொலியைக்கேட்ட குறிஞ்சிநில மக்கள் மழையின் ஆரவார ஒலியென்ற மருட்சியில் உலர்த்திய செந்தினைகளைத் தொகுக்கின்றனர். இதனை,

> **"பெருங்கல் விடரகஞ் சிலம்ப இரும்புலி**
> **களிறுதொலைத்து உரறுங் கடியிடி மழைசெத்துச்**
> **செந்தினை உணங்கல் தொகுக்கும்"** (நற்.345:9-11)

என்னும் மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனாரின் பாடலடிகள் உணர்த்தும். இப்பதிவுகள் பண்டைத் தமிழரின் இயற்கையோடு இணைந்த வாழ்வையும், மழையை எதிர்நோக்கும் ஈடுபாட்டுடன் கூடிய உற்றுநோக்குதலையும் புலப்படுத்துகின்றன.

**காற்று**

"ஒரு மனிதன் சுவாசிக்க ஒரு நாளைக்கு சராசரியாக 12 கிலோ காற்று தேவை என்கிறது தகவல் களஞ்சியம்."[42] உயிர்களின் முதன்மைத் தேவையான காற்று அருவ நிலையிலிருந்து உறவாடும் உயிர்த்தன்மை உடையது. எப்பொருளையும் இயக்கவல்ல காற்றின் இயக்கமும் அப்பொருள்களாலேயே புலப்படுகிறது. இத்தன்மையுடைய மாசற்ற காற்று உயிரினத்தின் வாழ்வை உறுதிப்படுத்துதலில் மதிப்புமிக்கதாயுள்ளது.

பண்டைத் தமிழர் திசையோடு அதன் தன்மையுணர்த்தும் வகையில் கிழக்கில் தோன்றும் காற்றைக் கொண்டல், மேற்கில் தோன்றும் காற்றைக் கோடை என்றுரைத்துள்ளனர். இதனை,

**"கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்" (நற்.89:1)**
**"கமஞ் சூழ் கோடை விடரகம் முகந்து**
**கால்உறு கடலின் ஒலிக்கும் சும்மை" (மதுரை.308-309)**
**"குடகாற்று எறிந்த குப்பை" (பெரும்பாண்.240)**

என்னுமடிகள் உணர்த்துகின்றன. தெற்கில் தீண்டுவது தென்றல், வடக்கில் வருத்துவது வாடை எனப் பெயரிட்டுள்ளனர். இதனை,

**"வான்உற நிவந்த மேல்நிலை மருங்கின்**
**வேனிற் பள்ளி தென்வளி தரூஉம்" (நெடுநல்.60:61)**
**"இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்**
**அகலிலை அகல வீசி அகலாது**
**அல்கலும் அலைக்கும் நல்கா வாடை" (நற்89:5-7)**

என்னும் பாடலடிகள் விளக்கும். குளிர்ந்த காற்றின் தன்மையை உணர்த்தும் "வடந்தை தண்வளி"[43] எங்கும் பரவியிருப்பதை "அகலிரு வானத்து வீசுவளி"[44] என்றும் புனைவுகள் இடம்பெற்றுள்ளன. வெப்பம் மிகுதியால் உண்டாகும் சூரைக்காற்றாய்த் தீமூட்டும் "கடுவளி"[45], "வளிவளர்"[46] என்னும் பதிவுகள் சுட்டுகின்றன.

அலைகளால் உண்டான மணற்குவியல், காற்றால் தூற்றப்படுவதை, உலரவைத்துள்ள ஆடை போலுள்ளது என்று அறிவுடைநம்பி குறித்துள்ளார். இதனை,

**"முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்**
**நுணங்குதுகில் நுடக்கம் போல..." (நற்.15:1-2)**

என்னுமடிகள் உணர்த்துகின்றன. கண்ணில் புலனாகாத காற்றை அதன் அசைவுகளில் கண்டு உரைத்தமை புலனாகின்றது. இதனால் அருவ நிலையிலிருந்து பல உருவங்களை அசைத்து இயக்கும் காற்றின் ஆற்றலும் புலப்படுகிறது. பண்டைக் காலத்தில் பலவாறு பதிவு செய்யப்பட்டுள்ள காற்று, தற்காலத்தில் பெருமளவு மாசுபட்டுள்ளது. "178 நாடுகளில் காற்றின் தரத்தை ஆய்வு செய்து 2015-ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அறிக்கையில் இந்தியா 174-வது இடத்தில் இருந்தது"[47] என்னும் செய்தி, நம் நாட்டில் குறைந்துவரும் காற்றின் தரத்தை உணர்த்துகின்றது.

**நெருப்பு**

உலகின் ஆதாரமே ஞாயிறாகிய நெருப்புக் கோள்தான். இது வானிலிருந்து உலகை இயக்குகிறது. நெருப்பின் தோற்றம் தான் மனித நாகரிகத்தின் மையப்புள்ளியாகும். இவை சங்கப் பாக்களில் காட்டுத்தீ, தினை காக்கும் நெருப்பு, பலவாறு ஒளிரும் அழல், அக்கினி சுட்டல், காடு அழித்துக் கழனி செய்யும் பயன்படு பொருள் என அருகியேயுள்ளன.

**காட்டுத்தீ**

கடுமையான சூறைக்காற்று மூங்கில்களை உராய்கிறது. இதனால் உண்டாகிய நெருப்பு பக்கமலைகளில் பற்றி எரிகிறது. இதுபோலத் தேக்கு மரங்களடர்ந்த பக்கமலைகளுள் உண்டாகிய தீயும், மேலெழுந்து காற்றினால் வளர்க்கப்பட்டு, மலைக்குகைகளுள் ஒலியெழுப்புகின்றது என்பன போன்ற பதிவுகள் காட்டுத் தீயின் தீவிரத்தைக் காட்சிப்படுத்துகின்றன. இதனை,

**“கடுவளி உருத்திய கொடிவிடு கூர்எரி**
**விடர்முகை அடுக்கம் பாய்தலின்” (அகநா.47:5-6)**

**“முளிஅரிற் பிறந்த வளிவளர் கூர்எரிச்**
**சுடர்நிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்” (அகநா.143:6-7)**

என்னும் ஆலம்பேரிச்சாத்தனாரின் பாடலடிகள் உணர்த்தும். இவை தற்காலத்தில் பரவலாகக் காணப்படும் காடுகளின் பேரிழப்பை நினைவுறுத்துகிறது. காடுகளின் பல்வேறு பயன்களையும் நுகரவிரும்பும் நாம் அதன் பாதுகாப்பிலும் பங்கெடுத்தல் வேண்டும். கோடைக்காலச் சருகுகள், காய்ந்த ஊகம்புற்களை அகற்றி, நெருப்புத் தடுப்புக்கோடுகளை உண்டாக்கினால் காடும், காட்டுக்குள் செல்வோரின் வாழ்வும் காக்கப்படும்.

முருகனைப் போற்றுதலில் அக்கினியின் தோற்றத்தை நக்கீரர் சுட்டியுள்ளார். நெருப்பு ஒளிர்தலைக் கபிலர் குறிப்பிட்டுள்ளார். வானிலிருந்து விழும் விண்மீன் கொள்ளிக்கட்டையாய்த் தோற்றம் பெறுவதைப் பொதும்பில்கிழான் மகன் வெண்கண்ணியார் பதிவு செய்துள்ளார். கொள்ளிக்கட்டைப் பொறிபோல் மின்னல் தோன்றுகிறது என்று தங்கால் பொற்கொல்லனார் குறித்துள்ளார். இதனை,

**“ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**
**அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ!” (முருகு.254-255)**

**"பசும்பிசிர் ஒண் அழல்"** (பதி.ப.62)

**"ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேணோன்**
**ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை**
**மீன்படு சுடரொளி வெரூஉம்"** (குறுந்.357:5-7)

**"......... அகன் விசும்பின்**
**விடுபொறி ஞெகிழியின் கொடிபட மின்னி"** (அகநா.108:6-7)

என்னும் பாடல்களின் அடிகள் விளக்கும். வானம் மற்றும் அதனுள் அடங்கும் ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் என்பனவும்; வானத்து மாமழை தொடங்கி, நிலத்துச் சுனைநீர்வரை நீராதாரங்களும் சுட்டப்பட்டுள்ளன.

மழையோடு தொடர்புடைய மேகம், மின்னல், இடி, வானவில் முதலான பதிவுகளும் இடம்பெறுகின்றன. காற்றும், காற்றோடு தொடர்புடைய நெருப்பும் பெயர் விளக்கப் பதிவுகளாகக் காணப்படுகின்றன.

பெருமளவிலான உலகியல் இயற்கை, பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களில் இயற்கைக் கொடையாய் இடம்பெற்றுள்ளன. மண்ணகப் பரப்பு மட்டுமன்றி வானத்து நிகழ்வுகளும் பண்டைத் தமிழரால் பரிசீலிக்கப்பட்டுள்ளன. புலவர்களின் நுணுகிய உற்றுநோக்கலும் அனுபவமும் அவர்களது படைப்புகளால் புலப்படுகின்றது. இதனை "விண்ணகப் பரப்பிலே நிகழ்கின்ற நிகழ்ச்சிகளையெல்லாம் பண்டைப் புலவர் கண்டும் உணர்ந்தும் அனுபவித்துத் திளைத்தனர்"[48] என்பது உணர்த்தும். பழந்தமிழரின் பனுவல்களுள் உலக வாழ்வியலுக்கு வளம் சேர்க்கும் வகையில் பல்வேறு வகையான இயற்கைக் கூறுகள் இடம்பெற்றுள்ளன.

**தாவரங்கள்**

தாவரங்கள் வாழும்வரை வளர்கின்றன. வாழ்க்கைக்குப் பின்னரும் பலவித பயன்படு பொருளாய் உள்ளன. "இயற்கைத் தாவரங்களினாலான உயிரினத் தொகுப்பு காடுகள் ஆகும். இவை புவியின் 90% உயிர்த்தொகுதியில் 40% பரப்பு ஆகும்."[49] இயற்கைக் கொடைகளுள் உலகைக் காக்கும் முதன்மை நிலையில் தாவரங்கள் உள்ளன. நிலவளமை, நீர் மேலாண்மை, காற்றுத்தூய்மை முதலானவற்றிற்கு ஆதாரமாய்த் தாவரங்கள் திகழ்கின்றன. பாண்டிய

நாட்டுப் புலவர் பாடல்களுள் பறவைகள், விலங்குகள் குறித்த புனைவுகளைவிடத் தாவரங்கள் குறித்த புனைவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**பயன்மரங்களும் பல பெயர்களும்**

பண்டைக்கால மக்கள் உணவு, உடை, உறைவிடம் போன்ற அவசியத் தேவைகளுக்கு உகந்த மரப்பயன்பாடுகளை நன்கு அறிந்திருந்தனர். அவற்றிற்கு அதனதன் குணநலனிற்கும் பயன்பாட்டிற்கும் ஏற்ப பல பெயர்களைச் சூட்டியுள்ளமை அறியப்படுகிறது. "அகில்"[50], "அமை"[51], "ஆசினிப்பலா"[52], "ஆத்தி"[53], "ஆரம்"[54], "ஆலமரம்"[55], "இருள் நாறி"[56], "இருப்பை"[57], "இலவம்"[58], "இல்லம்"[59], "இற்றி"[60], "ஈந்து"[61] "உழிஞை"[62] "உன்னம்"[63], "எறுழம்"[64], "கஞ்சகம்"[65], "கடம்பு"[66], "கடு"[67], "கண்டல்"[68], "கமுகு"[69], "களங்கனி"[70], "காஞ்சி"[71], "காயா"[72], "குமிழம்"[73], "குரவம்"[74], "குருகிலை"[75], "குடசம்"[76], "குருந்து"[77], "குளகு"[78], "கூவிரம்"[79], "கூவிளம்"[80], "கொன்றை"[81], "கோங்கம்"[82], "சண்பகம்"[83], "சிந்துவாரம்"[84], "சிறுமாரோடம்"[85], "செங்குரலி"[86], "செங்கோடுவேரி"[87], "வெட்சி என்னும் செச்சை"[88], "அசோகு, பிண்டி என்னும் செயலை"[89], "சேடல்"[90], "செருந்தி"[91], "ஞாழல்"[92], "தணக்கம்"[93], "திலகமரம்[94], "தில்லை"[95], "தெங்கு"[96], "தேக்கு"[97], "நாகம்"[98], "நாவல்"[99], "நொய்"[100], "பயினி"[101], "நெல்லி"[102], "பலாசம்"[103], "பளிங்கு"[104], "பனை"[105], "பாங்கர்"[106], "பாதிரி"[107], "பாலை"[108], "புகழா வாகை"[109], "புளி"[110], "புன்னாகம்"[111], "புன்னை"[112], "போங்கம்"[113], "மருதம்"[114], "மா"[115], "மாதுளம்"[116], "வகுளம்"[117], "வடவனம்"[118], "வஞ்சி"[119], "வழை"[120], "வளகு"[121], "வாழை"[122], "வானி"[123], "விடத்தேதொடரி"[124], "விளா"[125], "வேங்கை"[126], "வேம்பு"[127], "நந்தியாவட்டை"[128] என்பவை பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களால் அறியப்படும் மரங்களாகும்.

**மரங்கள்**

பழந்தமிழ்ப்பாக்களுள் தாவரங்களுக்கு இணையான பொதுமைப் பெயராய் மரம் என்னும் சொல் எடுத்தாளப்பட்டுள்ளது. தாவரங்கள் எக்காலத்திலும் ஏதேனும் ஒரு பயனைத் தருகின்றன. பல உயிர்களின்

வாழ்க்கைக்கு உணவாகின்றன. சுகாதாரச் சீர்க்கேட்டால் உண்டாகும் நோய்களுக்கு அருமருந்தாகத் திகழ்கின்றன. இதற்கு,

**"காலம் அன்றியும் மரம் பயன் கொடுத்தலின்"** (மலைபடு.134)
**"முழங்கு கால் பொருத மரம் பயில் கா"** (மதுரை.335)

என்னுமடிகள் சான்றாகின்றன. பண்டைக்காலத்தில் பெரும்பான்மையானவை அனைவரும் நுகரும் பொதுவுடைமைப் பயன் மரங்களாய் அறியப்படுகின்றன.

**நறுமணப் பயன்மரம்**

மரங்கள் வாழும் காலங்களில் உயிர்க்காற்றின் உற்பத்தித் தொழிற்சாலைகளாகத் திகழ்கின்றன. வற்றல் மரங்களாய் வீழ்ந்த பின்னும் பல்வேறு பயன்களைத் தருகின்றன. விறகுகளாய் உணவு சமைக்க, மகளிரின் கூந்தலுக்கு மணமூட்டப் பயன்படுகின்றன. சந்தனமாய் வெம்மையைத் தணித்துக் குளிரச்செய்ய, தாளாத குளிருக்குத் தகுந்த வெம்மையூட்ட எனத் தேவைக்கேற்பப் பலவாறு பயன்படும் நறுமணமிக்க மரங்கள் காணப்படுகின்றன.

**அகில்**

அகில், காழ்வை, பூழில், விரைமரம் என்று இம்மரம் குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மரத்துண்டுகள் விறகுகளாய் நறும்புகையூட்டப் பயன்படுகின்றன. மகளிர் இதன் மலர்களைப் பறித்துள்ள பதிவுகளும் காணப்படுகின்றன. "இவ்வகிலின் புகை வெண்ணிறமாக நீர்த்துளியற்ற மேகத்தைப் போல மேலே எழும்"[129] எனும் கருத்து இதன் நறுமணமிக்க நற்புகையைப் புலப்படுத்துகின்றது. இதனை,

**"இருங் காழ் அகிலொடு வெள்அயிர் புகைப்ப"** (நெடு.56)
**"ஆரம் காழ்வை கடிஇரும்புன்னை"** (குறி.பா.93)
**"சாந்த மரத்த பூழில் எழுபுகை**
**கூட்டு விரை கமழும் நாடன்"** (ஐங்.212:1-2)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

**சாந்தம்**

ஆரம், காழ்வை, சாந்தம் என்பனவாய் சந்தனமரம் இடம் பெற்றுள்ளது. இம்மரத்தின் வேர், பூ, சந்தனக்குழம்பு மார்பில் பூசப்படுதல், குளிர்காலத்தில் சாந்து அரைக்காதது, இம்மரத்தின் திடத்தன்மை குறித்த

பதிவுகள் காணப்படுகின்றன. இதனை வெட்டி விளைநிலமாக்கியதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**“குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்” (பட்.188)**
**“நறுங்காழ் கொன்று கோட்டின் விந்திய**
**குறுங்கதிர்த் தோரை…..” (மதுரை.286-287)**

என்று இதன் பிறப்பிடம் பட்டினப்பாலையில் சுட்டப்பட்டுள்ளது. இக்காலச் சூழலில் தீபாவளிப் பட்டாசு, போகிப்பண்டிகை போன்ற விழாக்கால நிகழ்வுகளும், வாகனப்புகை, நெகிழிப்புகை, தொழிற்சாலைப்புகை போன்ற கரியமில வாயுக்களும் காற்றின் தூய்மையை மாசுபடுத்துகின்றன. பண்டைக் காலத்தில் நடுங்கும் குளிர், அச்சுறுத்தும் விலங்குகளிடமிருந்து காத்துக் கொள்ளவும் அகில், ஆரம் போன்றவற்றால் உண்டாக்கும் புகை உயிர்காக்கும் மருந்தாய் நறுமணத்தோடு புலப்படுகிறது.

**மருத்துவப் பயன்மரம்**

உணவே மருந்து மருந்தே உணவு என்பது தொன்றுதொட்டு வரும் தமிழ் மரபாகும். பண்டைத் தமிழ்ப்பாக்களில் தாவரங்களின் இலை, காய், கனிகள் முதலானவை உடலுக்கு ஊட்டம் தரும் இயற்கைக் கொடைகளாய்க் காணப்படுகின்றன.

**கஞ்சகம்**

இம்மரம் கறிவேப்பிலை எனப்படுகிறது. இதன் உணவுப் பயன்பாடு பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளது. கருடச்சம்பா என்னும் நெல் வகையால் ஆக்கிய சோற்றுணவோடு, மாதுளங்காயால் செய்த கறியுணவு குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் கறிவேப்பிலை சேர்த்துச் சமைத்ததை,

**“சுடர்க்கடை, பறவைப் பெயர் படு வத்தம்**
**சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து**
**உருப்புறு பசுங்காய்ப் போழோடு கறிகலந்து**
**கஞ்சக நறுமுறி அளைஇ……” (பெரும்பாண்.305-308)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பாடலால் கறிவேப்பிலையின் பயன்பாடு புலப்படுகின்றது.

**நாவல்மரம்**

கடியலூர் உருத்திரங்கண்ணனார், பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் முதலான பாண்டிய நாட்டுப் புலவர்களின் பாடலில் இம்மரப்பதிவுகள் இடம்பெற்றுள்ளன. இம்மரத்தின் வளரிடம் பொழில், மலையடிவாரம் எனக்

குறிப்பிடப்பட்டுள்ளது. காலமல்லாத காலத்திலும் இக்கனியின் பயன்பாடு மக்களால் நுகரப்பட்டுள்ளது. இம்மரத்தின் வளரிடம், கனியின் பயன்பாடு போன்றவற்றை,

**"நாவல்அம் தண்பொழில் வீவுஇன்று விளங்க"**

**(பெரும்பாண்.465)**

**"................................... அகல் அறைக்**
**காலம் அன்றியும் மரம்பயன் கொடுத்தலின்**
**காலின் உதிர்ந்தன கருங்கனி நாவல்" (மலைபடு.133-135)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இதன் கனி மருத்துவக்குணம் நிறைந்தது. இதன் விதை நீரழிவு நோய்க்கு சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. நன்கு காயவைத்த நாவல் விதையின் பொடியை சுடுநீரில் கலந்து பருகினால் ரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவு குறையும் என்பதை மருத்துவர் கணேசன் "The dried seed powder mixed with hot water is taken for reducing blood sugar level"[130] என்று குறிப்பிட்டுள்ளார்.

**புளியமரம்**

புளியம்பழத்தின் பயன்பாட்டோடு இம்மரப்பதிவுகள் இடம் பெற்றுள்ளன. பண்டைக்காலத்தில் மோர்க்குழம்பு, அவரைவிதை நெல்லரிசி கலந்த சோற்றுணவில் புளிக்கரைசல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

**"வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழவின்**
**இன்புளிக் கலந்து மாமோர் ஆக"**

**(மலைபடு.178-179)**

**"சுவல்விளை நெல்லின், அவரைஅம் புளிங்கூழ்"**

**(மலைபடு.436-437)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மதுரைக்காஞ்சியில் கடல்வாணிபம் குறித்த பதிவில் வணிகப் பொருட்களோடு புளியும் இடம்பெற்றுள்ளதை,

**"இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்புப்**
**பரந்தோங்கு வரைப்பின் வண்கைத் திமிலர்**
**..................................................**
**நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்கு" (மதுரை.318-325)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. தீம்புளிகலந்து சமைக்கப்படும் உணவு கெட்டுப்போகாமல் இருப்பது புலப்படுகிறது.

**மூவேந்தர் அடையாள மரம்**

பனை, அத்தி, வேம்பு முதலானவை சேர, சோழ, பாண்டிய வேந்தர்களின் அடையாளச் சின்னங்களாய் இருந்துள்ளன. அத்தி, அதவம் எனப்படும் இம்மரம் ஆற்றங்கரைகளில் வளரக்கூடியது. இதன் கிளைகள் வெண்ணிறம் உடையவை என்பதை,

> **"ஆற்றயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து" (குறுந்.25:3)**

என்னுமடிகள் விளக்குகின்றன. இம்மரம் சோழனின் அடையாளமாய் விளங்குகிறது.

**பனை**

பனம், பெண்ணை என வழங்கப்பெறும் இம்மரம் சேரனின் அடையாளமாய் விளங்குகிறது. நெய்தல் நிலத்தின் அரணாக அன்றில், நாரை, மணிச்சிரல் முதலான பறவைகளின் வசிப்பிடமாக இம்மரம் திகழ்ந்துள்ளது. இம்மரத்தின் செறும்பினை கரடியின் மயிர்க்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

> **"புள்ஆர் பெண்ணை புலம்புமடற் செல்லாது**
> **...............................................**
> **நீர்ப்பெயற்று எல்லைப் போகி" (பெரும்பாண்.314-319)**

> **"இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன**
> **குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்" (முருகு.312-313)**

என்னும் பாடல்களின் அடிகள் விளக்குகின்றன.

பனையின் அடிமரம், நுங்கு, பனம்பழம், கிழங்கு, ஓலை, மட்டை நார் என முழுமுதற் பயன்பரமாய் விளங்குகிறது. இதன் உணவுப் பயன்பாட்டை,

> **"திரள் அரைப்பெண்ணை நுங்கொடு, பிறவும்,**
> **தீம்பல் தாரம் முனையின்..." (பெரும்பாண்.360-361)**

> **"மாரிக் குன்றம் மழை சுமந்தன்ன**
> **ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்" (பெரும்பாண்.49-50)**

என்னும் பாடடிலகள் உணர்த்துகின்றன.

மக்களின் பெருமுயற்சியின்றி இம்மரம் வளரக்கூடியது. சில நூறாண்டுகள் வாழும் தன்மையது. 'பனை வைத்தவன் பார்த்துக் கொண்டே சாவான்' என்னும் வழக்குமொழி இம்மரத்தின் ஆயுட்கால

நீட்டிப்பையும்; பயன்தரும் காலநீட்டிப்பையும் உணர்த்துகின்றன. சென்ற நூற்றாண்டுவரை காலச்சூழலுக்கு ஏற்ற இல்லங்களையும், பல்வேறு கைவினைப் பொருட்களையும் உருவாக்கப் பனைமரம் பயன்பட்டுள்ளது.

**வேம்பு**

பண்டைப் பாக்களுள் இதன் தழை, பூமாலை, பழம் குறித்த புனைவுகள் காணப்படுகின்றன. பழம்பொற்காசிற்கு வேப்பம்பழத்தை உவமையாக்கியுள்ளனர். பாலைநிலப் பெருவழியில் உமணமகளிர் உப்பு வண்டிகளைச் செலுத்தும் போது, இருபுறமும் காவலாக வரும் வலிமைமிக்க உமணர்கள், வேப்பந்தழைகளைத் தொடுத்து மாலையாக அணிந்துள்ளனர். இதனை,

> **"......................... கிள்ளை**
> **வளைவாய்க் கொண்ட வேப்ப வெண்பழம்"** (குறுந்.67:1-2)

> **"கோட்டுஇணர் வேம்பின் ஏட்டுஇலை மிடைத்த**
> **படலைக்கண்ணிப் பருஏர் எறுழ்த்திணி தோற்**
> **முடலை யாக்கை, முழுவலி மாக்கள்"** (பெரும்பாண்.59-61)

என்னும் பாடல்கள் விளக்குகின்றன. இதன் மருத்துவப் பயன்பாட்டைத் தொல்காப்பிய நூற்பா ஆயிரத்து முந்நூற்று அறுபத்தொன்றில் 'வேம்பும் கடுவும் போல' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இம்மரத்தின் இலைகள், பூக்கள், விதைகள், மரப்பட்டை, தண்டு முதலானவற்றின் குணங்களால் 'முழுமுதற் பயன் மரமாய்' விளங்குகிறது. "இம்மரம் கொண்டு தயாரிக்கப்பட்ட பொருட்கள் நிரூபிக்கப்பட்ட மருத்துவக் குணங்களைக் கொண்டுள்ளன. இவை குடற்புழு அகற்றுதல், பூஞ்சைக் காளான்களுக்கு எதிரான, நீரிழிவுக்கு எதிரான, பாக்டீரியாக்களுக்கு எதிரான மற்றும் வைரஸ்களுக்கு எதிரானவை மட்டுமின்றி இரத்தத்தைத் தூய்மைப்படுத்தவும் செய்கின்றன. இது ஆயுர்வேத மருத்துவத்தில் பெரும் உட்பொருளாகக் கருதப்படுகிறது. மற்றும் குறிப்பாக சருமநோய்களுக்காகப் பரிந்துரைக்கப்படுகிறது."[131]

வேப்பிலை கோடை வெம்மையால் உண்டாகும் நோய்த்தொற்றிலிருந்து பாதுகாக்கும் கிருமி நாசினியாய்ப் புலப்படுகிறது.

பாண்டியனின் அடையாளமான இம்மரம் குறிஞ்சிப் பூக்களில் இடம்பெறவில்லை.

**ஆலமரம்**

பண்டைப்பாக்களுள் சிற்றுயிரிகளின் சரணாலயமாக ஆலமரம் காணப்படுகிறது. கடவுள் உறையும் மரமாகப் பதிவுபெற்றுள்ளது. ‘கோடு பல முரஞ்சிய கோளி ஆலத்து’ என்று அடை கொடுத்து விழுதுகளின் பரவல், பூவாது காய்க்கும் தன்மை முதலானவை சுட்டப்பட்டுள்ளன. பறவைகள் கூடி ஒலி எழுப்புவதும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதனை,

> **“ஆல் கெழு கடவுட் புதல்வ” (முருகு.256)**
> **“கோடு பல முரஞ்சிய கோளி ஆலத்து**
> **கூடு இயத்து அன்ன குரல் புணர் புள்ளின்**
> **நாடுகாண் நனந்தலை” (மலைபடு.268-270)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

“பிரம்ம ஞானசபை வளாகத்தில் அமைந்துள்ள அடையாறு ஆலமரம் இந்தியாவிலேயே மிகப் பழமையான ஆலமரமாக இருந்து வருகிறது. தற்போது இந்த ஆலமரத்துக்கு 450 வயது ஆகிறது. 63 ஆயிரம் சதுர அடிக்கு பரந்து விரிந்துள்ள ஆலமரம் இன்னும் இரண்டு ஆண்டுகளில் 68 ஆயிரம் சதுர அடியாகப் பரந்துவிடும்”[132] என்பதனால் தற்போது 70 ஆயிரம் சதுர கிலோமீட்டர் பரப்பளவில் 455 வயதில் காட்சி தருவதை அறிய முடிகின்றது. ஆலமரத்தடியில் ஊர்ச்சபை கூடுவது வழக்காயிருந்துள்ளது. ஆலமரம், அரச மரம் போன்றவை அரிதாகி வருவது வருந்தத்தக்கது.

**செடி கொடிகள்**

“அலரி”[133], “அனிச்சம்”[134], “ஆவிரை”[135], “ஐயவி”[136], “கணவீரம் (செவ்வரளி)”[137], “கரந்தை”[138], “கழற்சி”[139], “குல்லை”[140], “குருகத்தி”[141], “குளவி”[142], “குறிஞ்சி”[143], “தும்பை”[144], “துழாஅய்”[145], “பாரம்”[146], “பிடவம்”[147], “புட்டில் (தக்கோலச்செடி)”[148], “புழகு”[149], “பூளை”[150], “முண்டகம் (கழிமுள்ளி)”[151] முதலான செடிகளும் “அடுப்பு”[152], “அதிரல்”[153], “ஆம்பல்”[154], “அறுகு”[155], “அவரை”[156], “உயவை”[157], “குறுநறுங்கண்ணி”[158], “கருவிளை”[159], “கறிமிளகு”[160], “காந்தள்”[161],

“குவளை”[162], “கொகுடி”[163], “செருவிளை”[164], “தளவம்”[165], “தாமரை”[166], “நறவம்”[167], “நீடுகொடி (வெற்றிலை)”[168], “நெய்தல்”[169], “பகன்றை”[170], “நெருஞ்சி”[171], “பீரம்”[172], “முசுண்டை”[173], “முல்லை”[174], “வயலை”[175], “வள்ளி”[176], “வள்ளை”[177] முதலான கொடிகளும் பதிவாகியுள்ளன.

சங்ககாலம் முதல் சமகாலம் வரை தமிழரின் ஆன்மீக நெறிமுறைகள், தலமரங்கள், பூசனைப்பொருட்கள் எனத் தாவரங்கள் தெய்வீகத்தோடு போற்றப்படுகின்றன. இவை அறிவியல் திறத்தோடு அமைந்துள்ளன.

**அலரி**

தற்காலத்தில் அரளி என்று வழங்கப்படுகிறது. குறிஞ்சிநில மக்கள் வெறியாட்டில் செவ்வரளி மலரைப் பயன்படுத்துவர். தலைவி பின்னலில் சூடியுள்ள இம்மலரின் இதழ்கள் தேனால் நனைந்திருந்தன என்பதை,

> **“பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை”** (முருகு.236)
>
> **“.................................... பின்னின்கண்**
> **விரி நுண் நூல் சுற்றிய ஈர்இதழ் அலரி”** (குறி.கலி.64:2-3)

என்னுமடிகள் விளக்குகின்றன.

**ஐயவி**

வாயில்களைப் பாதுகாத்தலில் நெய்யோடு சேர்த்து இக்கடுகும் பயன்படுத்தப்பட்டுள்ளன. நக்கீரர் நெய்யோடு ஐயவி அப்புதலை திருமுருகாற்றுப்படையிலும் நெடுநல்வாடையிலும் பதிவுசெய்துள்ளார். இதன் வளரிடம் சிலம்பு எனச் சுட்டப்பட்டுள்ளது. இது வெண்சிறுகடுகு எனப்படுகிறது. விதைக்காமலே வளருமென்பதை மலைபடுகடாம் குறிப்பிட்டுள்ளது. இதனை,

> **“நெய்யோடு ஐயவி அப்பி, ஐதுஉரைத்து**
> **..................................................**
> **களிமலைச் சிலம்பில் ...............”** (முருகு.228-238)
>
> **“ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை”** (நெடுநல்.86)
>
> **“தொய்யாது வித்திய துளர்படு துடவை**
> **ஐயவி அமன்ற .....................”** (மலைபடு.122-123)

என்னுமடிகள் உணர்த்துகின்றன.

**நீடுகொடி**

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு என்னும் மூன்றும் இணைந்த தாம்பூலத்தின் பயன்பாடு பண்டைக்காலம் தொட்டே இருந்துள்ளது. இது விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்ததை,

> **"தகைசெய் தீம்சேற்று இன்னீர் பசும்காய்**
> **நீடுகொடி இலையினர் கோடுசுடு நூற்றினர்"** (மதுரைக்.400-401)

என்னுமடிகள் குறிக்கின்றன. பண்டைக் காலத்தில் நோயுற்று இருக்கும் முதியவரும் இதனைப் பயன்பாட்டில் கொண்டுள்ளமை புலப்படுகிறது.

> **"தையால் தம்பலம் தின்றியோ? என்று தன்**
> **பக்கு அழித்து 'கொண்டீ' எனத் தரலும்"** (குறி.கலி.65:13-14)

என்னுமடிகள் விளக்கும். பெண்களுக்கு ஏற்படும் சுண்ணாம்புச்சத்து (பொட்டாசியம்), இரும்புச்சத்து (கால்சியம்) போன்றவற்றின் குறைபாடுகளை எவ்வித பின்விளைவுகளும் இல்லாமல் நிறைவு செய்யும் சிறந்த மருத்துவ குணங்களை உடையது இத்தாம்பூலம். வாரமொருமுறையேனும் இதனைப்பயன்படுத்துவது சிறந்த பயனைத்தரும் என்கிறது. இயற்கை மருத்துவம்.

**நீர்வாழ் தாமரை**

தாமரை, நெய்தல் முதலான நீர்வாழ்த் தாவரங்களின் மலர்கள் உவமைகளாகச் சுட்டப்பட்டுள்ளன. "'முள்தாட்தாமரை"[178], "முள்அரைத்தாமரை"[179], "பல்இதழ்த்தாமரை"[180], "கடவுள் ஒண்பூ"[181] எனப் பல பதிவுகளில் இம்மலரின் தன்மைகள் அடைமொழியோடு சுட்டப்பட்டுள்ளன.

> **"மாடமலி மறுகிற் கூடற் குடவயின்**
> **இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த**
> **முட்டாட் டாமரைத் துஞ்சி"** (முருகு...... 71-73)

எனுமடிகளில் மதுரையின் வளங்களும், நிலங்கள் தோறுமுள்ள நீர்நிலைகளுள் தாமரை வளர்தலும் அறியப்படுகிறது.

பெருங்கோப்பெண்டு, பூதப்பாண்டியனின் இழப்பைத் தாங்க இயலாமல் தன் இன்னுயிரை மாய்த்துக் கொள்ள விளைகிறாள். இந்நிகழ்வைத் தடுக்க முயலும் சான்றோருக்கு உரைப்பதாய், தீயிற் பாய்வதும், அரும்பர மலர்ந்த தாமரைப் பொய்கையில் நீராடுவதும் ஒன்றென்று தம் உள்ளத்தைப் பதிவு செய்துள்ளாள். இதனை,

**"............................... அரும்பற**
**வள்இதழ் அவிழ்ந்த தாமரை**
**நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே"** **(புறநா.246:13-15)**

என்னும் பாடலடிகள் தெளிவிக்கின்றன. இப்பதிவு கைம்மை மகளிரின் துயர நிலையைச் சாடும் பெண்ணினத்தின் உரிமைக்குரலாய் ஒலிக்கிறது.

**தானியங்கள்**

"வரகு"[182], "தினை (ஏனல், இறடி)"[183], "நெல்"[184], "உழுந்து"[185], "எள்"[186] முதலான தானியங்களும், "இஞ்சி"[187], "உள்ளி"[188], "கருனைக்கிழங்கு"[189], "கூவைக்கிழங்கு"[190], "சேம்பு"[191], "நூறை"[192], "மஞ்சள்"[193] முதலான வேர்விளை கிழங்கு வகைகளும், "ஊகம்புல்"[194], "(கொறுக்கைச்சி பஞ்சாய்க்கோரை) எனும் எருவை"[195], "கண்பு எனும் சம்பங்கோரை"[196], "தருப்பைப்புல்"[197], "மரல்"[198], "வேழமெனும் பேய்க்கருப்பந்தட்டை"[199] போன்ற புற்களும், "நீர்படர்ப்பாசியும்"[200], "வணிகப் பயிராய் கரும்பும்"[201] முதலான நூற்றி ஐம்பதுக்கும் மேற்பட்ட தாவரங்கள் பாண்டிய நாட்டுப் புலவர்களால், இலை, பூ, பயன்பாடு, நறுமணம், நிறம், தோற்றம் எனுமாறு தற்காலத்தில் அரிதாகிவரும் தாவரங்களையும், எக்காலத்திற்கும் காணத்தரும் பதிவுகளாய் அமைந்துள்ளன.

**வரகு**

சிறுதானியமாகிய வரகு, கருவை என்றும் வழங்கப்பட்டுள்ளது. வரகரிசிச் சோற்றை பூளைப்பூவோடு பெரும்பாணாற்றுப்படை ஒப்பிட்டுள்ளது. இதன் கதிர் கவைத்திருப்பதை மலைபடுகடாம் சுட்டுகிறது. வரகின் தாள் கூரைவேயப் பயன்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. இதனை,

**"கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்**
**நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறள்அவிழ்ச் சொன்றி"**
**(பெரும்பாண்.191-193)**

என்னும் பாடிலடிகள் விளக்குகின்றன. இதன் மிகுதியான விளைச்சலை,

**"மென் மயில் புனிற்றுப் பெடை கடுப்ப நீடி,**
**கடுந்தாள் போகி ஒருங்கு பீள் விரிந்து**
**வாலிதின் விளைந்த புது வரகு"** **(புறநா.120:6-9)**

என்று பாரியின் பறம்புமலை குறித்த வளமைச் சுட்டலில் கபிலர் குறித்துள்ளார்.

**தினை**

ஏனல், இருவி, இறடி எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் வளரிடம்,

> **"முல்லை சான்ற புறவு" (மதுரை.271:285**
> **"தினை விளை சாரல்" (மதுரை.291)**

என மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. நண்டின் சிறுபார்ப்பிற்கு பசுந்தினைச்சோறு ஒப்பிடப்பட்டுள்ளது. இத்தினை முருகனின் வழிபாட்டுப் பொருளாகவும் இடம்பெற்றுள்ளது. இதனை,

> **"இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன**
> **பசுந்தினை மூரல் பாலொடும் பெருகுவிர்"**
> **(பெரும்பாண்.167-168)**
>
> **"சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து**
> **..................................................**
> **முருகு ஆற்றுப்படுத்த உருகெழு வியல்நகர்"**
> **(முருகு.241-244)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. தினையின் சிறுவடிவம், மென்மைத் தன்மை முதலானவற்றைக் கபிலர் "சிறுதினை", "மென்தினை" எனக் குறிப்பிட்டுள்ளார். இதன் மாவுப்பயன்பாட்டை,

> **"மென்தினை நுவணை யுண்டு தட்டையி**
> **னைவசச் சிறுகிளி கடியு நாட" (ஐங்.285:2-3)**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய சிறுதானியங்கள் தற்காலத்திலும் பயன்பாட்டில் உள்ளன.

**உழுந்து**

உழுந்தின் அடி குறும்பூழ்ப்பறவையின் செவ்விய காலோடு ஒப்பிடப்பட்டுள்ளது. உழுந்தங்காய் முன்பனிப்பருவத்தில் உதிரும் என்பதை இளம்புள்ளூர்க்காவிதி குறிப்பிட்டுள்ளார். நெய்யோடு கலந்த உழுந்தமாவு கையால் திரித்து உலர்த்தப்படுகிறது. இதுபோல் வெள்ளைவயலைக்கொடி உள்ளதென்று உழுந்தின் பயன்பாட்டைக் கபிலர் குறித்துள்ளார். இதனை,

> **"பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்**
> **ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்" (குறுந்.68:1-2)**

**“இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்து” (நற்.89:5)**

**“நெய்யொடு மயக்கிய வுழுந்து நூற் றன்ன**
**வயலையஞ் சிலம்பு......” (ஐங்.211:1-2)**

என்னும் பாடல்களினடிகள் உணர்த்துகின்றன.

**நெல்**

நெல் விளையுமிடம் கழனி எனப்படுகிறது. வெண்ணெல் விருந்தின் சிறப்புணவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. செந்நெல் செங்குளவியின் நிறத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது. ‘நெடுவெண்ணெல்’, ‘பெருஞ்செந்நெல்’ என்று நெல்லின் நிறமும், அளவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**“நெடு வெண்ணெல்லின் அரிசி முட்டாது**
**தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து**
**பலநாள் நிற்பினும் பெறுகுவிர்” (மலைபடு.564-566)**

**“நீங்கா யாணர், வாங்கு கதிர்க் கழனி**
**கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன**
**பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்”**
**(பெரும்பாண்.228-230)**

என்னும் பாடல்களினடிகள் விளக்குகின்றன.

**மஞ்சள்**

மங்கலப் பொருள், உணவு, அழகுசாதனப் பொருட்கள், மருத்துவம் என மஞ்சள் இடம்பெறுகிறது. சங்க காலத்தில் வீட்டுத் தோட்டங்களில் பயிரிட்டமை அறியமுடிகின்றது. மருத நிலத்தில் மணம் நிறைந்த மஞ்சள் விளைந்துள்ளது. இவற்றைப் பறையொலி மூலம் பன்றிகளிடமிருந்து பாதுகாத்ததும் அறியப்படுகிறது. இதனை,

**“சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து” (முருகு.235)**

**“மஞ்சள் முன்றில் மணம்நாறு படப்பை**
**தண்டலை உழவர் தனிமனை......” (பெரும்பாண்.354-353)**

**“விளைவுஅறா வியன்கழனி**
**.................................**
**காய்க்கமுகின் கமழ் மஞ்சள்” (பட்.8-17)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

**இஞ்சி**

நறுமணமிக்க மரங்களை அழித்து விளைநிலங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றுள் இஞ்சி, மஞ்சள், மிளகு முதலானவை

விளைவிக்கப்பட்டுள்ளன. இஞ்சியின் பயன்பாடும், பொம்மை போல் தோன்றிய அதன் உருவமும், கார்ப்புச் சுவையும் உணரக்கிடைக்கின்றன. இதனை,

> **“நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
> **...................................**
> **இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும்”** **(மதுரை.286-289)**
>
> **“செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக்**
> **காயங் கொண்டன இஞ்சி......”** **(மலைபடு.125-126)**

என்னும் பாடல்களினடிகளால் அறியமுடிகின்றது. தாவரங்களின் பல்வேறு பயன்களாலும், உலக உயிர்களின் வாழ்வாதாரத் தேவைகளாலும் இருக்கும் தாவரங்களைப் பாதுகாப்பது கட்டாயமாகிறது.

***பெயர் விளக்கமின்றி மரம் எனவும், தனிப்பெயர் சுட்டுதலோடும் எண்பது மரவகைகள், பத்தொன்பது செடி வகைகள், இருபத்து ஆறு கொடிவகைகள், ஏழு கிழங்கு வகைகள், ஐந்து தானிய வகைகள், ஏழு புல்வகைகள் மற்றும் நீர்ப்பாசி போன்றனவும் காணப்படுகின்றன. இவ்வாறு நூற்றி ஐம்பதுக்கும் மேற்பட்ட தாவரங்களை இப்புலவர்கள் அடையாளப்படுத்தியுள்ளனர். இவை உவமை, உருவகங்களாய் மக்களின் வாழ்வியலுக்கு நல்வழிகாட்டும் இயற்கை அரண்களாய்ப் பெறப்படுகின்றன.***

**விலங்குகள்**

மனித நாகரிகத் தொன்மையும் தோற்றமும் விலங்கினங்களோடு நெருங்கிய தொடர்புடையது. மனிதனுக்கு விலங்கினங்கள் குறித்த அறிதல்தான் உணவை, உணர்வை, உறைவிடத்தை, ஒலிகளை, மொழிகளை, மூலிகைகளை அடையாளம் காட்டுகின்றன. இவை **‘இயங்கும் கற்பித்தல் கலன்களாய்’** இருந்துள்ளன.

“அசுணம்”[202], “அணில்”[203], “அரவம்”[204], “மாசுணம்”[205], “அரிமா”[206], “அலவன்”[207], “பசு”[208], “ஆடு”[209], “ஆமான்”[210], “ஆமை”[211], “ஆளி”[212], “இரலை, உழைமான், நௌவி, பார்வை, பினை, மரை, கலைமான் எனும் மான்கள்”[213], “பரி, புரவி, மா, இவுளி எனப்படும் குதிரை”[214], “உடும்பு”[215], “யானை”[216], “புலி”[217], “உளியம், எண்கு எனப்படும் கரடி”[218], “எருமை”[219], “எலி”[220], “எய் என்னும்

முள்ளம்பன்றி"[221], "ஏனம் என்னும் பன்றி"[222], "ஒட்டகம்"[223], "ஓரி என்னும் நரி"[224], "குறுநரி"[225], "ஊகம், கடுவன், கலை, மந்தி, முசு என்னும் குரங்கு"[226], "காட்டுப்பூனை"[227], "கராம், இடங்கர் என்னும் முதலை"[228], "அத்திரி எனப்படும் கழுதை"[229], "தீர்வை என்னும் கீரிப்பிள்ளை"[230], "பல்லி"[231], "முயல்"[232] என்னும் முப்பதுக்கும் மேற்பட்ட விலங்குகள் பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களால் அறியப்படுகின்றன.

**யானை**

உம்மல், ஒருத்தல், கயமுனி, புகர்முகம் என்றெல்லாம் யானை குறித்துப் பல பதிவுகள் உள்ளன. இதன் செவி, தந்தம், துதிக்கை குறித்த விளக்கப்பதிவுகளை,

> **"முறஞ்செவி யானை" (நற்.376, குறி.38)**
> **"பொலந்தார் மார்பின், நெடியோன் உம்மல்" (மதுரை.61)**
> **"இலங்குஏந்து மருப்பின் இனம்பிரி ஒருத்தல்" (மலைபடு.297)**
> **"பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்ப" (மலைபடு.107)**
> **"பொறிவிரிப் புகர்முகம் தாக்கிய வயமான்" (பெரும்பாண்.448)**

என்னுமடிகள் உணர்த்துகின்றன.

யானை தாவரங்களை அழித்து உண்டபோதும் "இருபது மணி நேரத்திற்குள் ஒரு யானை 16 முறையிடும் சாணத்தின் எடை நூறு கிலோவாகும். வனத்தில் ஒரு சதுர கிலோ மீட்டர் பரப்பில் ஆண்டுக்கு 37 டன் சாணத்தைக் காடெங்கும் பரப்பி வனத்தாவரப் பெருக்கத்திற்குப் பங்காற்றுவதாய் ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள்."[233] தற்காலத்தில் யானைகளின் வாழ்வாதாரக் காடுகள் மனிதர்களால் அழிக்கப்படுவதால், மனித வாழிடங்களைத் தேடி யானை வரும் நிலை ஏற்பட்டுள்ளது.

> **"யானைகள்**
> **தரையில் உலவும் மேகங்கள்**
> **யானைகளை இழந்துவிட்டு**
> **நாம் மழையை எதிர்பார்க்க முடியாது"[234]**

என்னும் அறிவுமதியின் கவிதை யானைகளையும், காடுகளையும் பேணும் உள்ளத் தாக்கத்தை ஏற்படுத்துகின்றது.

**உழுவை**

இந்திய தேசிய விலங்கான புலி வலிமையும், நேர்மையும் உடையதாகக் காணப்படுகிறது. தன் பிணைக்காகக் காத்திருந்து யானையை அடித்துச் செல்லும் இயல்பினது. புலியின் வளமான வாழிடம் வேங்கைப்பூக்களோடு இதனுருவம் ஒத்திருப்பது, யானையோடு போர் செய்வது எனப் பல பதிவுகளில் சுட்டப்பட்டுள்ளன. இதனை,

> **"உருபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கை"** (குறி.கலி.38:6)
> **"............ வேங்கை ஒள்வீப்**
> **புலிப்பொறி கடுப்பத் தோன்றலின் கயவாய்**
> **இரும்பிடி இரியும் சோலை"** (அகநா.228:10-12)

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

"காட்டில் புலிகள் இருந்தால் அங்கு இயற்கை இருக்கிறது. மான், காட்டுமாடுகள், காட்டுப்பன்றி போன்ற குளம்பு விலங்குகளின் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் வலிமையுள்ள ஊனுண்ணியாகப் புலியை இயற்கை வடிவமைத்துள்ளது. காட்டுவளங்கள் பெருமளவில் அழிக்கப்பட்டதால் முண்டத்துறை, முதுமலை, ஆனைமலை போன்றவை புலிகளின் காப்பகங்களாய் உள்ளன."[235] புலியின் வலிமையும், வாழிடத்தின் வளமையும் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளது. இதனை,

> **"மாக்கடற் றிரையின் முழங்கி வலனேர்பு**
> **கோட்புலி வழங்குஞ் சோலை"** (குறுந்.237:5-6)

என்னும் அடிகளால் அறியமுடிகின்றது.

**எருமை**

இவ்விலங்கு கரிய நிறமும், வளைந்த கொம்புகளையும் உடையது. பண்டைக்கால மக்களின் உணவில் இதன் பால் மதிப்புக் கூட்டப்பட்ட பொருட்களான தயிர், மோர், நெய் போன்றவை இடம்பெற்றுள்ளன. இவ்விலங்கை வளர்த்து, குடும்பத்தின் பொருளாதார மேம்பாட்டை உயர்த்தும் ஆயமகள் 'பொன்னைப் போற்றாது', 'எருமைக் கன்றை' வாங்குவதை,

> **"நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்**
> **எருமை நல்லான் கருநாகு பெறூஉம்**
> **மடிவாய்க் கோவலர் குடி"** (பெரும்பாண். 164-166)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இது இவ்விலங்கின் பெரும்பயன்பாட்டையும், பசுவைவிட அதிகப் பால்சுரக்கும் திறத்தையும் புலப்படுத்துகிறது. இக்காலத்தில் அயல்நாட்டுக் கலப்பினப் பசுக்களின் வருகையால் பலவகையான நாட்டுமாடுகளும், எருமைகளும் அழிந்து வருகின்றன.

**அசுணம்**

மாறோக்கத்து நப்பசலையார் இன்பம் தந்த அசுணத்தின் செவித்திறன் ஒலி அலை மிகுதியால் பெரும் துன்பம் தருகிறது. இதுபோல் தலைவனின் உறவு இன்பம் தந்து, அவனது பிரிவு துன்பம் தருகிறது என்கிறார். மதுரை யீழத்துப் பூதன்தேவனார், வண்டுகளின் ஆரவாரத்தை (யாழிசையாக) உற்றுக் கேட்கும் என்கிறார். இதனை,

**"அசுணங் கொல்பவர் கைபோல" (நற்.304:8)**

**"யானைக் கவுண்மலி பிழிதரு காமக் கடாஅம்**
**இருஞ்சிறைத் தொழுதி யார்ப்பயாழ் செத்து**
**இருங்கல் விடரளை அசுண மோர்க்கும்" (அகநா.88:10-12)**

என்னுமடிகள் விளக்குகின்றன. இவ்வடிகளால் இதன் இருப்பிடமும், ஒலியுணர்ச்சியும் தெளிவுபெறுகின்றன.

"இசை அறிவதொரு விலங்கு; இதனைப் பறவை என்பாருமுளர்."[236] "பெரிய மலைப் பிளவுகளில் உள்ள அசுணங்கள் அவ்விசையை உற்றுக்கேட்கும்"[237] என்பதால் இது ஒலியின் அதிர்வலைகளை உற்றுநோக்கி வாழும் தன்மையுடையது. வௌவாலின் இனத்தைப் போன்று பெரிய மலைப் பிளவுகளையுடைய குகைகளில் அசுணம் வாழ்கிறது. பகலில் வெளிவராத தன்மையால், யாழிசையால் கவர்ந்து அழைக்கப்படுகிறது. வௌவால் இனம் போல வண்டுகளை உணவாகக் கொள்ளும் அசுணமும் யாழிசையால் ஈர்க்கப்படுகிறது. பின்னர் கடும்பறையொலியால் துன்புற்று வேட்டுவர்களுக்குப் பொருளாகிறது.

பண்டைப்பாக்களில் வண்டுகளின் முரளுதலை யாழிசையோடு ஒப்பிட்டுள்ளனர். இத்தகைய மெல்லோசை அசுணத்தை ஈர்ப்பதும்,

வல்லோசை நிலைதடுமாறச் செய்வதும் தெரிகின்றது. இவ்வொலிமாசு விலங்கு, பறவை, மனிதன் என அனைத்து உயிர்களுக்கும் பொருந்தும்.

'மா' என்பதை விலங்கு, மாமரம், பெரிய என்னும் பொருளில் சங்கப்பாக்கள் எடுத்தாண்டுள்ளன. "அசுண நன் மா"[238] என்பது இதன் மென்மையான ஊறு விளைவிக்காத தன்மையை உணர்த்துகிறது. மேலும் மா என்னும் அடைமொழி இதன் பெரிய உருவத்தைக் குறிக்கிறது. செ.வேங்கடராமர் இதனை "இசையுணர்ச்சி மிகவுடைய விலங்கு"[239] என்கிறார். மு.வரதராசன் "அசுணம் என்னும் பறவை"[240] எனக் குறிப்பிட்டுள்ளார். மூத்த ஆய்வாளர்களின் இருவேறு கூற்றுகளுக்கும் இணக்கமுடையதாய் அசுணம், வெளவாலின் இனம் ஒத்த 'பறக்கும் பாலூட்டியாய்' பெறப்படுகிறது.

**ஒட்டகம்**

பாலை நிலத்தில் வாழும் விலங்கான ஒட்டகமும் பாண்டிய நாட்டுப் புலவர்களால் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது பலநாட்கள் பசியும், தாகமும் தாங்கிக் கொள்ளும் இயல்பினது. வலிமையான உயர்ந்த கால்களை உடையது. இதன் தாளாத பசிக்கு உலர்ந்த எலும்புகள் உணவானதை மதுரை மருதன் இளநாகனார் குறித்துள்ளார். இதனை,

**"குறும்பொறை உணங்கும் ததர்வெள் ளென்பு**
**கடுங்கால் ஒட்டகத்து அல்குபசி தீர்க்கும்**
**கல்நெடுங் கவலைய கானம்" (அகநா.245:17-19)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது. இப்பதிவு இயற்கையழிந்த பாலை நிலத்தில் வாழும் உயிரினங்களின் அவல நிலையைப் புலப்படுத்துகின்றது. ஒட்டகத்தின் பயன்பாடுகள் குறித்த பதிவுகள் பண்டைப்பாக்களில் இடம்பெறவில்லை.

**கழுதை**

அத்திரி, கோவேறு கழுதை எனும் பதிவுகளுள்ளன. இவை உமணர்களின் போக்குவரத்திற்குப் பயன்பட்டுள்ளது. உப்பு மூட்டைகளைச் சுமந்து சென்றுள்ளது. குதிரையைப் போன்று கழுதையும் நெடும்பயணத்திற்குப் பயன்பட்டுள்ளது. இவ்விலங்கு உப்பங்கழிகளில் செல்லும் பொழுது கழிச்சுறாவால் புண்பட்டது, நக்கீரரின் பதிவில்

காணப்படுகின்றது. நெய்தல் நெடுவழி தொடங்கி பாலைநிலத்து வழிகளிலும் இதன் பயணம் தொடர்ந்துள்ளதை, மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி"** (அகநா.120:10)
**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**……………………………………**
**குறைக்குளம்பு உதைத்த கல்பிறழ் இயவின்**
**வெஞ்சுரம் போழ்ந்த, அஞ்சுவரு கவலை"** (அகநா.207:1-6)

என்னும் பாடல்களினடிகளால் அறியமுடிகின்றது.

**பூச்சிகள்**

கோபம் எனும் தம்பலப்பூச்சி, ஈயல் மூதாய், மின்மினி எனப்படும் சிறிய உருவிலான பூச்சிகளும், அதன் நிறம், செயல்களால் பதிவிடம் பெற்றுள்ளன. இதனை முருகில் நக்கீரர், சூரரமகளிரின் ஆடைக்கு உவமித்துள்ளார். மதுரை மருதன் இளநாகனார், உடன்போக்கில் தலைவி இன்னல்களை மறந்து பயணம் மேற்கொள்ளத்தக்கதாய் மழை பொழிந்து, மரங்கள் துளிர்க்க வேண்டும். செம்பஞ்சுச் சிதரல் போன்ற இப்பூச்சிகள் நிலத்தை அழகு செய்ய வேண்டும். இதனால் நெடுவழிக்கானம் வெம்மை தணிந்து இனிமை பெறுவதாக எனும் தலைவனின் விருப்பம் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

**"கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்"** (முருகு.15)
**"………………………… கரிமரம்**
**கண்அகை இளங்குழை கால்முதல் கவினி**
**……………………………………**
**ஊட்டுறு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன**
**வண்ண மூதாய்"** (அகநா.283:9-15)

என்னும் இவ்வடிகள் உணர்த்துகின்றன.

**மீன்கள்**

"அயிரை"[241], "ஆரல்"[242], "இறா"[243], "கயல்"[244], "வரால்"[245], "வாளை"[246], "சுறா"[247] முதலான மீன்களும், "வளை"[248], "முத்துச்சிப்பி,"[249] "வரிநுணல்"[250] முதலான நீர்வாழ் உயிர்களும் சுட்டப்பட்டுள்ளன.

**அயிரை**

சிறிய வடிவிலான மருதநிலத்து மீனாக,

**"அயிரை பரந்த அந்தண் பழனத்து"**[251]

என்னுமடி குறித்துள்ளது. இவ்வயிரை மீன் தென்குமரி ஆற்றின் பெருந்துறையில் அதிகம் வாழ்ந்தமையால் வடமலையிலிருந்து வந்த அன்னச்சேவல் பல நாட்கள் தங்கியிருந்து வயிறார உண்டதையும் மீண்டும் இமயமலைக்குச் சென்றதையும் பிசிராந்தையார் குறித்துள்ளார்.

**"அன்னச் சேவல் அன்னச் சேவல்**
**………………………………**
**குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி**
**வடமலைப் பெயர்க்குவை ஆயின்…"** **(புறநா.67:1-7)**

என்பதால் இது அன்னப்பறவையின் வலசைபோதல் குறித்த பதிவாய் உள்ளது. அதன் விருப்புணவான இம்மீன் எளிதாக கிடைத்துள்ளது.

**இறால்**

இறவு எனவும் வழங்கப்படும். இது காக்கையின் விருப்புணவு. அது தான் காணும் கனவிலும் வெள்ளிறாலை உண்ண விரும்புவது குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார்,

**"கடற்சிறு காக்கை காமர் பெடையொடு**
**கோட்டுமீன் வழங்கும் வேட்டம்மடி பரப்பின்**
**வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து" (அகநா.170:10-12)**

என்னுமடிகளில் புனைந்துள்ளார். இதன் மெல்லுடல் அமைப்பை

**"முடங்கு புற இறவு" (அகநா.220:17)**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மீன்கள் கூட்டமாக வாழும் இயல்பினை உடையது; பெரும்மரக்கலங்களையும் சிதைக்கும் வலிமையுடையது. இதனை,

**"இரங்குநீர்ப் பரப்பின் கானல்அம் பெருந்துறை**
**தனம்தரு நன்கலம் சிதையத் தாக்கும்**
**சிறுவெள் இறவு…………" (அகநா.152:6-8)**

எனும் பண்டைத் தமிழ்ப்பாக்கள் குறிப்பிடுகின்றன. இது

**"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்**
**சால மிகுத்துப் பெயின்"[252]**

என்பது போல ஒற்றுமையின் வலிமையை உணர்த்துகிறது.

நில, நீர்வாழ் விலங்குகளாக நாற்பதுக்கும் மேற்பட்ட உயிரினங்கள் படைத்தாளப்பட்டுள்ளன. இவைகளுள் அழிவை நோக்கும் ஒவ்வோர்

உயிரும்; அவற்றிற்கு உணவான சிற்றுயிர்களின் நச்சுத்தன்மையை அதிகரிக்கிறது. இதற்குச் சான்றாய் நந்நீர் மீன்கள், தவளைகள், தட்டாண் பூச்சிகளின் அழிவால் கொசுக்களின் பெருக்கமும் அதன் நச்சுத் தன்மையின் தாக்கமும் புலப்படுகின்றன.

**பறவைகள்**

இயற்கை அரங்கில் தாவரங்கள் நிலைத்த இடத்திலிருந்து நிறைந்த பயன்களைத் தருவனவாகும். விலங்குகள் வாழ்வின் ஆதாரமாகக் காடுகளையே நம்பியுள்ளன. பறவைகள் இக்காடுகளை வளப்பமுறச் செய்து நிலமும் நோகாமல், மண்ணுயிர்களும் அழிந்திடாமல் பாதுகாக்கின்றன. தாவரங்களைப் பெருகச்செய்து காடுகளை வளப்படுத்தும் இயற்கைக் காவலனாய்ப் பறவைகள் திகழ்கின்றன.

“அன்றில்”[253], “அன்னம்”[254], “ஆண்டலை”[255], “ஈயல்”[256], “கழுகு”[257], “காடை”[258], “காக்கை”[259], “கிள்ளை”[260], “கின்னரம்”[261], “கோழி”[262], “குயில்”[263], “குருகு”[264], “கொக்கு”[265], “கூகை”[266], “சிவல்”[267], “வண்டு”[268], “தேனீ”[269], “பருந்து”[270], “புறா”[271], “மஞ்ஞை”[272], “மின்மினி”[273], “வௌவால்”[274], “வானம்பாடி”[275] முதலான இருபத்தைந்துக்கும் மேற்பட்ட பறவைகள் அறியப்படுகின்றன.

**அன்னம்**

அன்னத்தின் நடையைக் காலந்தோறும் மகளிரின் மென்நடைக்கு ஒப்பிடுதலுண்டு. இதன் தூய வெண்ணிறமும் அழகும் பாண்டிய நெடுஞ்செழியனைக் கவர்ந்தமையால் அரண்மனையில் வளர்ப்புப் பறவையாக இருந்துள்ளது. இதன் மெல்லிறகு இணையணையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

> **“துணைபுணர் அன்னத் தூநிறத் தூவி**
> **இணையணை மேம்படப் பாயணையிட்டு” (நெடுநல்.132-133)**

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. அன்னத்தின் குரலொலியை

> **“அன்னம் கரைய அணிமயில் அகல” (மதுரை.675)**

என இதன் இணைதேடும் குரலை மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. இதன் இயல்பான மெல்லொலியை லுக்ரிஷியஸ் என்ற கவிஞர் தம் ‘இயற்கை’ (De Nature) என்னும் கவிதை நூலில் “பெரும் நாரைகளின் இரைச்சலைக்

கொண்டு வருவதைவிட அழகிய சிறிய அன்னங்களின் இனிமையான ஓசைகளைக் கவிதையில் கொண்டுவருவதே என் தொழில்”[276] என்கிறார்.

அன்னப்பறவைகள் கூட்டமாகப் பறந்து செல்வதை மதுரைக் கூத்தனார் குறித்துள்ளார். விரைந்து செல்லும் குதிரையைக் காற்றோடு ஒப்பிடுவது சங்க இலக்கிய வழக்காயுள்ளது. இப்பறவையின் பறக்கும் திறனால் இது மிகவும் உயரத்தில் விரைவாகப் பறக்கும்; அவ்விரைவு பற்றிக் குதிரையின் ஓட்டத்திற்கு உவமையாகக் கூறப்படுகின்றது. இப்பறவையின் குறுங்காலும் அதன் செம்மைநிறமும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

**“ஒண்கதிர் ஞாயிற்று ஊறளவாத் திரிதரும்**
**செங்கால் அன்னத்துச் சேவல் அன்ன**
**காலெனக் கடுக்கும் கவின்பெறு தேரும்” (மதுரை.385-388)**

**“குறுங்கால் அன்னமோ டுகளும் முன்கடை” (நெடுநல்.92)**

என்னும் பாடல்களினடிகள் உணர்த்துகின்றன. காணுந்தோறும் மனம் கவரும் இப்பறவையினம், தற்காலத்தில் காணப்படாதது இயற்கையின் இழப்பாய்த் தெரிகின்றது.

**பருந்து**

பருந்து என்னும் இப்பறவையினம் அசாத்தியமான பார்வைக் கூர்மையும், இலக்கும் உடையது. பாம்பையும் அஞ்சச் செய்யும் திறத்தினதாய்க் காணப்படுகிறது. இதனை,

**“பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்**
**புள்அணி நீள்கொடிச் செல்வன்” (முருகு.150-151)**

என்கிறார் நக்கீரர். இதன் குரல் இளி என்னும் இசையோடு ஒப்பிடப்பட்டுள்ளது. அலகு வளைந்துள்ளது என்பதை மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**“வீளைப் பருந்தின் கோள் வல் சேவல்**
**வளை வாய்ப் பேடை வரு திறம் பயிரும்**
**இளி தேர்தீம் குரல் இசைக்கும்” (அகநா.33:5-7)**

எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனைக் கழுகிலிருந்து வேறுபடுத்தி,

**“…………………… கழுகொடு**
**செஞ்செவி எருவை திரிதரும்”[277]**

என்னுமடிகள் விளக்குகின்றன.

குறைந்து வரும் இப்பறவையினத்தை "எழுபதுகளில் சென்னை வாலாஜா சாலையில், பிரெசிடென்சி கல்லூரி மாணவிகள் விடுதி முன் ஒரு புளியமரத்தில் தினமும் பல செம்பருந்துகள் அடையும். விடியற்காலையில் சூரியன் எழுந்தவுடன் இப்பறவைகளைத் தரிசிக்க அம்மரத்தைச் சுற்றி ஒரு கூட்டம் நிற்கும். இன்று இவ்வழகிய பறவையைச் சென்னையில் பார்ப்பதே அரிதாக இருக்கின்றது"[278] என்கிறார் பாஸ்கரன்.

**கானக்குயில்**

பி.எல்.சாமி "பெண்குயில் கரும்பழுப்பு நிறமாக வெள்ளைப் புள்ளிகளுடன் காணப்பெறும். ஆண் குயில் கருமையாக இருக்கும்"[279] என்கிறார். இப்பறவையின் வாழிடமும், வேள்விக்களப் புகையின் வெம்மை தாங்காமல் தன் பெடையோடு சோலையை நீங்கிச் சென்று காவல் நகரில் தங்கியதை,

**"குயில் நுழை பொதும்பர்" (பெரும்பாண்.374)**
**"ஆவுதி நறும்புகை முனைஇ, குயில்தம்**
**மாஇரும் பெடையோடு இரியல் போகி**
**பூதம் காக்கும் புகல் அருங் கடி நகர்" (பட்.55-57)**

என்னுமடிகளால் அறியமுடிகின்றது. இதன் குரல் கேட்போரை மகிழ்விக்கும் இனிமையுடையது. கூடுகட்டி அடைகாக்கும் தன்மையற்ற இப்பறவை, காக்கையை ஏமாற்றி அதன் கூட்டில் முட்டைகளையிடும். அம்முட்டைகள் பொரித்துக் குஞ்சுகளாகிப் பறந்து செல்ல எத்தனிக்கும் வேளையில் குயில்கள் அழைத்துச் செல்லும் என்பது கண்கூடாகிறது.

**தூய்மைக் காவலன்**

கழுகு, எருவை என வழங்கப்படும் இப்பறவையினம், இறந்த உடல்களை உண்டு புவியைத் தூய்மை செய்யும் சேவகப் பணியாட்களாய்ப் புலனாகிறது. ஆறலைக் கள்வர்களால் இறந்த வழிப்போக்கர்களின் உடல்களைக் கழுகு தம் சுற்றத்தினரோடு உண்பதை,

**"ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்**
**பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்" (அகநா.175:5-6)**

என்பதனால் இறந்த பயன்பாடற்ற உடல்களைத் துப்புரவு செய்யும் இப்பறவையின் பயன்மிகு செயல் தெரிகிறது. காகம், கழுதைப்புலி போன்றவை இத்தூய்மைச் செயலால் ஒன்றுபடுகிறது.

நெருப்பெனச் சிவந்த செங்காந்தள் முகைகளை ஊனெனக் கருதி எடுத்துச்சென்ற கழுகு, அதன் உண்மைத் தன்மை உணர்ந்ததும், மொட்டுக்களைப் பாறையெங்கும் சிதைத்தது. இது வேலனின் வெறியாட்டுக் களம் போல் தோன்றுகிறது என்று இதன் உணவுத் தேடலும் ஏமாற்றமும் சுட்டப்பட்டுள்ளது. இவ்வாறு இப்பறவையின் ஊன் உண்ணும் ஆவலை நகைச்சுவையோடு,

**“தீயின் அன்ன ஒண்செங் காந்தள்**
**....................................**
**வெறிக்கலம் கடுக்கும் வியலறை”  (மலைபடு.145-150)**

என்னுமடிகள் விளக்குகின்றன.

**மழை நோக்கும் மண்ணுயிரிகள்**

மழைக்காலத் தோன்றல்களாய்ப் பல உயிரிகள் உள்ளன. காற்று வெளியிலே ஒருநாள் உயிரியாய் ஈயல் காணப்படுகிறது. ஈர நிலத்தில் ஊர்ந்து திரியும் செம்பஞ்சுப் பொட்டுகளாய் ஈயல் மூதாய், இரவுநேர அலங்காரச் சிறுவிளக்குகளாய் மின்மினிப் பூச்சிகள் போன்றவை **கார்காலக் கொடையாகக் காட்சி** தருகிறது. வானைப்பாடி, மழையை வரவேற்று, தூயநீரைப் பருகி வாழும் பறவையாய் வானம்பாடி அறியப்படுகிறது.

**ஈயல்**

சிதலையின் பரிணாம வளர்ச்சியே ஈயலாகும். உருவம் பெரிதாகி இறகுகளோடு மழையால் செழித்த நிலத்துள் இருந்து வெளித்தோன்றி பறவைகள், விலங்குகள், மக்களுக்கும் உணவாகி மடிந்துவிடும். இதன் நெடும்புற்றை ஆலம்பேரிச் சாத்தனாரும், பெருங்குன்றூர்க் கிழாரும்,

**“புல் அளைப் புற்றின் பல்கிளைச் சிதலை**
**ஒருங்கு முயன்று எடுத்த நனைவாய் நெடுங்கோடு**
**இரும்புஊது குருகின், இடத்து, இரைதேடும்” (அகநா.81:3-5)**

**“ஈயற் புற்றத்து ஈர்ம் புறத்து இறுத்த**
**குரும்பி வல்சிப் பெருங் கை ஏற்றை**
**தூங்கு தோல் துதிய வள் உகிர் கதுவலின்**
**பாம்பு மதன் அழியும்...”  (அகநா.8:1-4)**

என்பதனால், முல்லை நிலத்தவரின் உணவுப் பொருள் வேட்டையில் ஈயல் இடம்பெற்றுள்ளமைத் தெரிகிறது. கார்காலம் வரைக் காத்திருக்காமல் நெடுங்கோட்டுப்புற்றை வெட்டியழித்து ஈயலைப் பெற்றுள்ளனர்.

சிதலைகளால் கட்டப்படும் இப்புற்று காற்று, மழையைத் தாங்கி நிற்கும் திடத்தன்மை வாய்ந்தது. மென்மையான செம்மண்ணையும் சிதலைகளின் உமிழ்நீரையும் கட்டுமானப் பொருட்களாகக் கொண்டு பல அறைகளோடு நேர்த்தியாக அமைந்துள்ளது. இத்திறம் கட்டுமானப் பணியில் நிலத்தடி மட்டம் முதல் உயர்கோபுர அமைப்பிலான கட்டிட வகைகளின் முதற்பொறியியல் நுட்பமாய்ப் புலப்படுகின்றது.

**வானம்பாடி**

வானம்பாடி மழைநீரை மட்டுமே பருகும் இயல்புடையது. “நிலத்தியல்பால் நீர் திரிந்து விடுதலின் நிலத்தில் வீழ்ந்த நீர் செயற்கையாகின்றது. மழைநீர் விண்ணிலிருந்து வீழும்போதே பறந்து சென்று விண்ணிலேயே அம்மழைத்துளியை யுண்ணும.”[280] காற்று மாசினால் தற்கால மழைநீரும் அமில மழையாய் மாறிப்போனதால் இப்பறவை அற்றுப்போனது போலும். தமிழரின் மழைவேட்டல் நம்பிக்கையை இப்பறவையும் பெற்றுள்ளதை,

> **“தற்பாடிய தளியுணவிற்**
> **புட்டேம்பப் ………………”** (பட்.3-4)

என்பது உணர்த்துகிறது.

**மின்மினி**

ஒளிரும் தன்மையுள்ள சிறுபூச்சியினமே மின்மினியாகும். இது தேனீயினும் சிறியதாய் உயர்ந்த மரக்கிளைகளில் பறப்பதாகும். இதனை,

> **“பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்**
> **செல்மழை யியக்கங் காணும்**
> **நன்மலை ……………”** (நற்.44:10-12)

பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரின் பாடலடிகளால் அறியப்படுகிறது. “இரவில் இது பறக்கும் போதும் செடிகளில் அமர்ந்து சிறகை விரிக்கும் போதும் மின் ஒளியைத் தோற்றுவித்ததால் ‘மின்மினி’ ஆனதென்பார்.”[281] உடல் இயக்கத்தால் மின்னொளியைத் தோற்றுவிக்கும் ஈல் போன்ற உயிரினமான இச்சிறு பூச்சியினம் புலவர்களைக் கவர்ந்துள்ளது பேராரவாரமற்ற பருவமழையும், அம்மழையின் பெரும்பயனும் பொய்த்துப் போனதால் கார்காலத் தோன்றல்களான இவ்வுயிரிகளும் அரிதாகிப்போனது.

“‘எதிர்கால அதிர்ச்சி’ என்னும் நூலும் 1972-இல் Club of Rome என்கிற அமைப்பு வெளியிட்ட ‘வளர்ச்சியின் கட்டுப்பாடு’ என்ற நூலும் சுற்றுச்சூழல் பாதுகாப்பு குறித்து மக்களின் கவனத்தை ஈர்த்தன. … உலக சுற்றுச்சூழல் மாநாடுகள் உலக சுற்றுச்சூழல் சீரழிந்துள்ளது என்பதையும் தீவிர நடவடிக்கைகள் மூலம் மக்களின் சுற்றுச்சூழல் பிரச்சனைகள் தீர்க்கப்பட வேண்டும் என்றும் உணர்த்தின.”[282]

காடுகளைக் காப்பதும், தரிசு நிலங்களை மேம்படுத்துவதும், பண்ணைக்காடுகள், வேளாண்காடுகளை பொது இடங்கள் மற்றும் சமூகத் தரிசு நிலங்களில் மேம்படுத்துவதும் இந்திய அரசால் முன்னெடுத்துச் செல்லப்பட்டுள்ளது. எனினும் பெருகிவரும் மக்கள் தொகையும், இயற்கைச் சமநிலையின்மையும் சுற்றுச் சூழலின் தீவிரத்தை உணர்த்துகிறது. அரசின் இயற்கை குறித்த நலத்திட்டங்களை மீள்பார்வை செய்வதும் பள்ளி, கல்லூரி மாணவர் பங்களிப்பைத் தாவரங்களின் வளர்ச்சியில் ஊக்கப்படுத்துவதும் தனிமனிதப் பங்களிப்பினும் சமூகப் பங்களிப்பாய் வலியுறுத்தப்படுகிறது.

பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களுள் இடம்பெற்றுள்ள தாவரங்கள், விலங்குகள், பறவைகள் முதலான பல்லுயிற் தொகுதிகளுள் பல அரிதாகி வருகின்றன. இவை தக்கது தரிக்கும், மற்றது மரிக்கும் என்னும் இயற்கை வயப்பட்டது. தற்காலச் செயற்கை உருவாக்கத்தால் உண்டாகும் நச்சுக்களால் பலவகை உயிரினங்கள் அழிந்து வருகின்றன. ஒவ்வொரு உயிரும் இப்புவியில் வாழும் உரிமையுடையது மட்டுமின்றி; இவ்வுலகின் நல்இயக்கத்திற்குப் பெரும்பங்களிப்பாகும் என்பதை உணர்தல் வேண்டும். புதுமை என்னும் பெயரில் நல்லவற்றை எல்லாம் தள்ளிவைத்து அல்லல்படும் வாழ்வை அனுபவிக்கும் நிலையிலுள்ளோம். இந்நிலை உணர்ந்து பண்டைத் தமிழ்மரபின் நன்மைகளைத் தேடி மீள்பார்வை செய்து; மீட்டெடுத்துப் பயன்பெறுவோம் என்பது பெறப்படுகிறது.

**இயற்கையின் இன்னிசை**

கலைகள் மனதை வளப்படுத்தவும், நற்பண்புகளை வலுப்படுத்தவும் கூடியன. இசைக்கலைக்கும் இத்திறமுண்டு. இது இசைக்கருவிகளின்

துணையோடு மனிதனால் இசைக்கப்படுவதன்றி, இயற்கையின் நிகழ்வுகளாலும் பயன்விளைவிக்கும் என்பதைப் பாண்டிய நாட்டுப் புலவர்களின் பாக்களில் அறியமுடிகின்றது.

**மழை முழக்கம்**

மழைமேகங்களின் இடிமுழக்கம் மத்தளத்தின் ஒலியை ஒத்துள்ளது என்பதைப் பெருங்கௌசிகனார்,

> **“........................ பெருங்கலி எழிலி**
> **...................................**
> **முழவின், மண்ணார் கண்ணின் இம்மென இமிரும்”**
> **(நற்.139:1-6)**
>
> **“திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்**
> **விண்ணதிர் இமிழ்இசை” (மலைபடு.1-2)**
>
> **“மழைஎதிர் படுகண் முழவுகண் இடுப்ப” (மலைபடு.532)**

என்று குறித்துள்ளார். தேரில் பூட்டப்பட்ட குதிரை விரைந்து செல்லும்போது, தேர்ச்சக்கரம் கல்லில் மோதுகிறது. இவ்வோசை கார்கால இடிமுழக்கத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

> **“........................... பரி முடுக,**
> **கல் பொருது இரங்கும் பல் ஆர் நேமிக்**
> **கார் மழை முழங்கு இசை கடுக்கும்” (அகநா.14:18-20)**

என்று ஒக்கூர் மாசாத்தனார் பதிவு செய்துள்ளார்.

**குயிலிசை, மயிலோசை**

குழலிசை, நாநவிலும் பாடல் முதலியன குயிலின் கூவுதலுக்கும் அதன் எதிரொலிக்கும் ஒப்பிடப்பட்டுள்ளது. தாளவொலி, முழவின்ஒலி முதலியன மயிலின் அகவலுக்கும், அதன் எதிரொலிக்கும் ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

> **“மணிமரு ணன்னீர்ச்சினை மடமயில் அகவக்**
> **குருகிலை உதிரக் குயிலினங் கூவப்**
> **பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்**
> **நாநவில் பாடல் முழவெதிர்ந் தன்ன**
> **சிலம்பிற் சிலம்பிசை ஓவா தொன்னார்” (பரி.15:40-44)**

என்று இளம்பெருவழுதியார் குறிப்பிட்டுள்ளார்.

கார்காலப்பயனால் முல்லை நிலத்தின் நீர்நிலைகளெங்கும் தேரைகள் ஒலியெழுப்புகின்றன. இவ்வொலி தாளவாத்தியங்கள் பல ஒருங்கிணைந்து ஒலிப்பது போல் உள்ளதென்பதைப் பொதும்பிற் புல்லாளங்கண்ணியார்,

> **"படுமழை பொழிந்த பயம்மிகு புறவின்**
> **நெடுநீர் அவல பகுவாய்த் தேரை**
> **சிறுபல் இயத்தின் நெடுநெறிக் கறங்க" (அகநா.154:1-3)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

குறிஞ்சிப்பாட்டில், பல்சுவை கலந்த சுனைநீரைப் பருகிய மயிலின் தள்ளாடும் நடை, கழைக்கூத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது. அகநானூற்றுப்பாடல் எண்பத்து இரண்டில் துளையுள்ள மூங்கிலில் குழலிசை, அருவியின் முழவிசை, கலைமான் குரலின் பெருவங்கியம், வண்டுகளின் சிறகசையில் யாழிசை முதலான இயற்கையின் இசையரங்கைக் கபிலர் படைத்துள்ளார். இதுபோன்ற அருவிப்பாட்டை,

> **"வான மீமிசை உருமும் நனிஉரறும்;**
> **...................................**
> **வரைஇழி அருவிப் பாட்டொடு பிரசம்**
> **முழவுசேர் நரம்பின் இம்மென இமிரும்" (அகநா.318:2-6)**

என்னும் அடிகளில் விளக்கியுள்ளார். இவ்வாறு பாண்டிய நாட்டுப் புலவர்கள் இயற்கையின் இயக்கத்தில் இசைப்பயனையும் பதிவு செய்துள்ளனர்.

**நிலவளங்கள்**

பண்டைத் தமிழ் மக்கள் பொன், இரும்பு, எஃகு, செம்பு முதலான உலோகங்களைப் பயன்படுத்தியுள்ளனர். இவை அணிகலன்கள், புழங்கு கருவிகள், போர்க்கருவிகள், அலங்காரப் பொருட்கள் போன்ற பயன்பாடுகளையுடையன.

பொன்னாலான மகளிரின் காதணிகள், புதல்வர்களின் காலணி, பொன்தொடி, யானை, குதிரையின் பொன்னாலாகிய பொன்னரி, பொலம்தேர் என்று பொன்னாலாகிய பொருட்கள் அறியப்படுகின்றன. இதனை,

**“புனல்ஆடு மகளிர் இட்ட பொலங்குழை”  (பெரும்பாண்.312)**
**“பொற்கால் புதல்வர் புரவிஇன்று உருட்டும்”  (பட்.பா.24)**
**“பொன்தொடிப் புதல்வர் ஓடி ஆடவும்”  (பட்.பா.295)**
**“ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்”  (முருகு.104)**
**“பொலம்படைப் பொலிந்த கொய்ச்சுவற் புரவி”(மலைபடு.574)**
என்னும் அடிகள் உணர்த்தும்.

பொன் போன்ற வேங்கை மலர், மாணிக்கமணி போன்ற வேங்கை மொட்டு, பொன் போல் போற்றப்பட்ட தலைவியின் அழகு முதலான பதிவுகள் உள்ளன. இதனை,

**“பொன்வீ மணியரும் பினவே”  (ஐங்.201:3)**
**“பொன்போல் விறற்கவின் கொள்ளும் நின் னுதலே”**
**(ஐங்.229:4)**
**“பொன்போல் விறற்கவின் தொலைத்த”  (ஐங்.230:3)**
என்னும் கபிலரின் அடிகள் உணர்த்துகின்றன.

நீலமணியின் நிறத்தினை ஒத்துள்ள கருங்குயில்கள் நாள்தோறும், பிணங்கிய காதலரை அழைத்து நடுநிலையோடு இனியவை கூறுகின்றன. கோங்கம் பூந்துகள்கள் இலவம்பூக்கள் மீது உதிர்ந்துள்ளன. அவை பவளச் செப்பில் பொன்துகள்களை இட்டுவைத்தது போலத் தோன்றுகிறது. பொதியமலைத் தலைவன் திதியனின் பொன்னாலாகிய தேர் போன்ற பதிவுகளை,

**“....................... மணி நிற இருங்குயில்**
**படு நா விளி யான்டுநின்று, அல்கலும்**
**உரைப்ப போல, ஊழ் கொள்பு கூவ,**
**இனர் சிதர் உகுத்த இலவத்து ஆங்கண்,**
**சினைப்பூங் கோங்கின் நுண் தாது பகர்நர்**
**பவளச் செப்பில் பொன் சொரிந்தன்ன,**
**...........................................**
**பொதியிற் செல்வன், பொலந்தேர்த் திதியன்”**
**(அகநா.25:6-20)**

என்று ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், புதுப்பிக்க இயலாத நிலவளங்களைப் பதிவு செய்துள்ளார்.

பெருமதிப்புடைய அணிகலன்களின் அழகு கெட்டால் திருத்திக் கொள்ளலாம். மக்களின் பண்பு கெட்டுவிட்டால் திருத்திக்கொள்ள இயலாது என்னும் சிறப்புமிக்கத் தமிழர் பண்பாட்டை,

**"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துடனை**
**நேர்வரும் குரைய கலங்கெடின் புணரும்**
**சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்**
**மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்**
**..................................**
**எளிய எண்ணார் தொல்மருங்கு அறிஞர்"** (குறி.பா.13-17)

என்று கபிலர் குறிப்பிட்டுள்ளார்.

**"காலில் வந்த கருங்கறி முடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்"** (ப.பா.186-188)

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் வளமையைச் சுட்டியுள்ளார்.

**இரும்பு, எ∴கு**

பண்டைத் தமிழகத்தில் கொல்லுத்தொழில் இருந்துள்ளது. எயினர் மண்கிளரும் கோலில் இரும்புப்பூண் இடப்பட்டிருந்தது. இரும்பாலான தூண்டில் முள் பதிவு செய்யப்பட்டுள்ளது. எ∴கினால் செய்த இலைவடிவ வேல் குறித்தும் பதிவுகள் உள்ளன. இதனை,

**"கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த"**
**(பெரும்பாண்.437)**

**"இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்"**
**(பெரும்பாண்.91)**

**"...................... கொடுவாய் இரும்பு"** (பெரும்பாண்.286)
**"...................... இலங்குஇலை எ∴கின்"** (குறி.பா.52)
**"ஐஇரு வட்டமொடு எ∴குவளம் திரிப்ப"** (முருகு.111)

என்னும் அடிகள் விளக்குகின்றன.

**நீர்வளங்கள்**

சோழநாடு சோறுடைத்து, பாண்டிநாடு முத்துடைத்து என்னும் வழக்கு பாண்டியநாட்டு முத்தின் சிறப்பை உணர்த்துகிறது. கொற்கை முத்தின் சிறப்பை,

**"பேர் உலகத்து மேஎந் தோன்றிச்**
**சீருடைய விழுச் சிறப்பின்,**
**விளைந்து முதிர்ந்த விழு முத்தின்,**
**இலங்கு வளை, இருஞ்சேர்,**
**கட்கொண்டிக் குடிப் பாக்கத்து,**
**நல் கொற்கையோர்"** (மதுரை.133-138)

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. முத்தின் பிறப்பிடச் சிறப்பு, முத்தாரங்களின் பயன்பாடு குறித்து,

**"தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்" (பட்.பா.19)**

**"மான்இழை மகளிர் புலர்ந்தனர் பரிந்த**
**பருஉக்காழ் ஆரம் சொரிந்த முத்தமொடு" (மதுரை.680-681)**

என்னும் பதிவுகள் உணர்த்துகின்றன.

**வலம்புரிச்சங்கு**

கடல் வளங்களுள் வலம்புரிச்சங்கு, மதிப்புடைய பொருளாயுள்ளது. சுறாமீன்கள் உலவும் ஆழ்கடலில் அரிய முயற்சியால் இச்சங்குகள் வேட்டையாடப்படுகின்றன. வலம்புரி சங்குகளைக் கொண்டுவரும் பரதவரை, வலம்புரி சங்குகள் முழங்கி வரவேற்பர் என்பதை,

**"இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி,**
**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவற்**
**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப, கல்லென**
**கலிகெழு கொற்கை எதிர்கொள" (அகநா.350:10-13)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இச்சங்கில் வளையலறுத்துப் பயன்படுத்தியதை,

**"பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை**
**வல்புரி வளையொடு ..................." (நெடுநல்.141-142)**

என்று நக்கீரர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு நீர்வளங்கள், நிலவளங்கள் குறித்த பதிவுகள் பாண்டியநாட்டுப் புலவர் பாக்களில் காணப்படுகின்றன.

**சங்கப் பாக்களுள் பாண்டிய நாட்டுப் புலவரின் தனித்தன்மைகள்**

உலக இலக்கியங்களில் சங்க இலக்கியம் தனித்துவம் வாய்ந்தது. தமிழர் தொன்மைக்காலம் முதல் உலகளாவிய பொதுமை நோக்கும், பரந்துபட்ட மனிதமும் உடையவர்கள். தமிழினம் தனிமனிதத் தேவையினும், மனித குலத்தின் வாழ்வியலைச் சிறப்பிக்கும் பண்பாட்டு மரபுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. பல பாக்கள் இயற்கையோடு இயைந்த சுவைமிகு நிகழ்வுகளை முறைப்படுத்தி, மனிதவாழ்வை மேன்மையடையச் செய்யும் கருத்தாளம் மிக்கதாய் காணப்படுகின்றன. இப்பதிவுகளில் பாண்டிய நாட்டுப் புலவர்களின் இயற்கையொடு ஒருங்கிணைந்த தனித்தன்மைகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

**மனதாளும் மலர்க்காட்சி**

கிளைத்துத் துளிர்த்த இலைகள் தாவரங்களின் முதற்பயனாகும். தன் அழகாலும், நறுமணத்தாலும் நம்மை மகிழ்விப்பது மலர்களின் பெரும்பயனாகும். கபிலர் பல்வேறு வகை மலர்களைப் பாறையில் குவித்துள்ளார். சில வரிகள் தவிர்த்து அடிதோறும் மூன்று மலர்களால் தொடுக்கப்பட்ட இப்பாடல் தொன்னூற்று ஒன்பது மலர்களைத் தன்னகத்தே கொண்ட தனிச் சிறப்புடையது. இவை ஐவகை நிலங்களிலும், மரம், செடி, கொடி, புதர், நீர்நிலை எனப் பலவகையானும் மலர்ந்த திறத்தினவாகும்.

கபிலரின் மனத்திரையில் பொதிந்துள்ள இம்மலர்க்காட்சி தாவரங்களின் மீதான புலவரின் பேரார்வத்தைப் புலப்படுத்துகிறது. இவை மனக்கண்ணாலன்றி புறக்கண்ணால் யாரும் காணமுடியாத அரிய மலர்க் காட்சியாய் அமைந்துள்ளது. "இயற்கையைப் பற்றிய கவிதைகளிலும் இயற்கை அவ்வாறே கூறப்படுவதில்லை. அதற்கு மறுதலையாக, மனித மனத்தில் இயற்கை வரைந்த ஓவியத்திற்கு அவன் எவ்வாறு பிரதிபலிக்கிறான் என்பதே கூறப்படுகிறது"[283] என்னும் கருத்தைப் போல் தாம் தனியாகக் கண்டு மகிழ்ந்த மலர்களையெல்லாம் உள்ளத்தால் உய்த்துணர்ந்து, ஒரே இடத்தில் அமைத்துள்ளார். இவ்வாறு இயற்கை வரைந்த பேரோவியத்தின் அனைத்துப் பாகங்களையும் தணிக்கை செய்து மலர்களை மட்டும் காட்சிப்படுத்தியுள்ளமைப் பாண்டிய நாட்டுப் புலவர்களின் தனித்துவம் வாய்ந்த பதிவாய் பெறப்படுகிறது. இதனை,

> **"...................... வள்இதழ்**
> **ஒண் செங்காந்தள் ஆம்பல் அனிச்சம்**
> **..........................................**
> **அரக்குவிரித் தன்ன பருஏர் அம் புழகு"** (குறி.61-96)

இப்பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன.

மனதாளும் மலர்களை எடுத்தாளாத கவிஞர்கள் இல்லையெனலாம். அப்துல்கலாமின் கவிதையிலும் பிள்ளைப்பூவின் வினாவிற்கு அம்மாப்பூவின் விடையாக;

> **"மான் துள்ளுகிறது**
> **மயில் ஆடுகிறது**
> **குயில் கூவுகிறது**
> **அதுபோல நாம் மலர்கிறோம்**

**பிரபஞ்ச இயக்கத்திற்கு இவை தேவை**
**மனிதர்கள் நம்மைப் பார்த்து**
**மென்மை அடைய வேண்டும்**
**என்பதற்காகவே நாம் மலர்கிறோம்''[284]**

என்னும் இவ்வரிகளில் இடம்பெற்றுள்ளன. மனிதனின் மனத்தை மென்மையுறச் செய்து மனிதத்தை நிலைநாட்டும் அழகிய திறவுகோளாய் மலர்கள் அறியப்படுகின்றன. இதனால் இல்லங்களில் இயற்கையான மலர்கள் இருந்தால்; உள்ளங்கள் தோறும் மகிழ்வும், மென்மையும் குடிகொள்ளும் எனும் கருத்தாளம் புலப்படுகிறது. 'மலர்க்கண்காட்சிகள்', 'அத்தப் பூக்கோலங்கள்' முதலானவை குறிஞ்சிப்பாட்டின் வழித்தோன்றல் களாய் இன்றும் மக்களின் மனதாள்வது குறிப்பிடத்தக்கதாகும்.

**குழவிப் பெரும்பயன்**

உலக உயிர்கள் அனைத்திற்கும் தன்னினச்சுழற்சி சிறப்புடையது. பாண்டியன் அறிவுடைநம்பி என்னும் அரசப்புலவர் அளவில்லாச் செல்வமும், அனைத்துச் சுற்றமும் நட்பும் சூழ இருப்பினும்,

**''குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டுந் தொட்டும் கல்வியுந் நுழந்தும்**
**நெய்யுடை அடிசின் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லை தாம்வாழு நாளே''** **(புறநா.188:3-7)**

என்று பிள்ளைபேறும், அதன் இன்றியமையாமையும் குறித்து விளக்கியுள்ளார். மற்றொரு பாடலில் ஒரு பெண் தன் குழந்தையைப் பலியிடப் பெறுவோரிடம் கைவிட்டு வந்தது போல் களவுக் காலத்தில் நாணமிழக்கிறாள். தலைவன் மீது கொண்ட காதலால் துன்புறும் இவள் கற்பு மணத்தை வேண்டுவதை,

**''மாசில் கற்பின் மடவோள் குழவி**
**ஒய்ய வாங்கக் கைவிட் டாங்குச்**
**சேணும் எம்மொடு வந்த**
**நாணும் விட்டேம்……''** **(நற்.15:7-10)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பாடலில் கற்புடைய மகளிரின் நாணம் தாய்மைப் பயனோடு ஒப்பிடப்பட்டுள்ளது.

குழந்தைப் பேறுக்காக இல்லத் தலைவியின் ஒப்புதலோடு இரண்டாவது திருமணம் புரிந்து கொண்டதைக் கபிலர் குறித்துள்ளார். தலைவி, தன் தலைவனினும் சிறந்த உறவாய், குழந்தை பெற்றுத்தரும் இளையவளை ஏற்றுக்கொள்கிறாள். இதனை,

**"நின்னினும் சிறந்தனள், எமக்கே-நீ நயந்து**
**நன் மனை அருங்கடி அயர,**
**எம் நலம் சிறப்ப, யாம் இனிப் பெற்றோளே" (ஐங்.292:3-5)**

என்னும் பாடலடிகள் 'பிள்ளை பெறாத பெண்மையின் தாய்மை உள்ளத்தைப்' புலப்படுத்துகிறது. இக்குழவியின் சிறப்பை,

**"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற"[285]**

என்று வள்ளுவரும் உரைத்துள்ளார். இவ்வாறு பண்டைக் காலத்தில் அரிதான நிகழ்வாயிருந்த 'மக்கட்பேறு வேண்டுதல்' இக்காலத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் இயல்பான நிகழ்வாய் மாறிப்போனது.

**காலம் உணர்த்தும் நீர்**

'தேவைதான் கண்டுபிடிப்பின் தாய்' என்பதை பண்டைத் தமிழரும் உணர்ந்திருந்தனர். கார்கால மேகங்களால் கதிரவனின் வெம்மையும், ஒளியும் மழுங்கிப் போவதுண்டு. இச்சூழலில் இயல்பாய் நேரத்தைக் கண்டறிய இயலாமல், காலக்கணக்கீட்டில் 'குறுநீர்க் கன்னல்' பயன்படுத்தப்பட்டுள்ளது. நாழிகை வட்டில் எனப்படும் "சிறிய கலத்தின் அடிப்பகுதியில் நுண்ணிய துளையுண்டாக்கி அக்கலத்தில் நீர்ப்பரப்பி, அந்நீர் துளை வழியே ஒழுகும் போது நாழிகைக்கு ஒன்றாக வரையப்பட்ட கோடுகளை எண்ணிப்பார்த்து, நாழிகையை அறிந்து கொள்வது அக்கால வழக்காகும்."[286] இதற்கு அடிப்படையாய் நீர் விளங்கியுள்ளதை மதுரையாசிரியர் நல்லந்துவனார்,

**"கடல் முகந்து கொண்ட கமஞ் சூல் மா மழை**
**.........................................**
**குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது**
**கதிர் மருங்கு அறியாது அஞ்சுவரப் பாஅய்,**
**தளி மயங்கின்றே தன்குரல் எழிலி" (அகநா.43:1-8)**

என்பதனால், நீர்த்துளியின் இயக்கம் காலத்தை கணித்தறிய உதவியுள்ளதை அறியமுடிகிறது.

**கலம் அழைக்கும் நெருப்பு**

நீண்டதூரம் பயணிப்பது ஒளியென்பதை உணர்ந்த பண்டைத் தமிழர், கலங்கரை விளக்கத்தை உருவாக்கி, ஒளியின் பயன்பாட்டை நுகர்ந்துள்ளனர். இதனை,

> **“வானம் ஊன்றிய மதலை போல**
> **ஏணி சாத்திய ஏற்று அருஞ் சென்னி**
> **விண்பொர நிவந்த வேயா மாடத்து**
> **இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**
> **உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்”**
> **(பெரும்பாண்.346-350)**

என்னும் பாடல்களினடிகளால் அறியப்படுகின்றன. புலனடிப்படையில் கடலில் சென்ற கப்பல்களைச் சரியான திசைநோக்கி அழைக்கும் கலங்கரை விளக்கத்துள் நீண்டதூரம் பயணிக்கும் ஒளி பயன்படுத்தப்பட்டுள்ளது. இது அறிவியலோடு தொடர்புடைய தனித்துவம் வாய்ந்ததோர் பதிவாகப் பெறப்படுகின்றது.

**மரப்பாதுகாப்பு**

பாரியின் வள்ளல் தன்மையைக் கபிலர் மரத்தோடு ஒப்பிட்டுள்ளார். இப்பதிவு,

> **“நிழல் இல் நீள் இடைத் தனி மரம் போல**
> **பனை கெழு வேந்தரை இறந்தும்**
> **இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே!”   (புறநா.119:5-7)**

என்னுமடிகளில் இடம்பெற்றுள்ளது. இது பாரி இறந்த நிலையில் பறம்பின் வளமை கெட்டொழிந்ததைக் குறிப்பிடுகின்றது.

முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியும், புன்னை மரத்தைச் சகோதர உறவாய்ப் போற்றிய தலைவியும், மரங்களிடத்தும் மனிதம் போற்றியதைப் புலப்படுத்துகிறது. பழங்காலத்தில் இயற்கை மிகுந்திருந்த போதும், உயிரைப் பாதுகாக்கும் மருந்திற்காகக்கூட மரங்களை அழிப்பதில்லை என்பதை,

> **“மரம்சாம் மருந்தும் கொள்ளார் மாந்தர்”   (நற்.226:1)**

என்னுமடிகள் உணர்த்துகின்றன. காடு திருத்தி கழனி அமைத்த பண்டைக்கால மக்கள், மரத்தைப் பேணிக் காத்திட வலியுறுத்தியது பெறப்படுகின்றது.

**உலகியல் அரங்கில் பொதுமைச் சமூகம்**

உலகமக்கள் நலம்வாழத் தகுந்த பல்வேறு வழிமுறைகளைத் தமிழ்ப்பண்பாடு கொண்டுள்ளது. நன்மைகளைப் பகிர்ந்து கொள்ளும் பொதுவுடைமைச் சமூகத் தமிழ்திறம் உலகியல் அரங்கில் தமிழின் புகழை நிலைநிறுத்தியுள்ளது. அரசனே ஆனாலும் அறிவார்ந்து ஈட்டிய பொருளை அளவறிந்து செலவிடல் வேண்டும். இச்செல்வத்துப் பயனே ஈதலாகும்.

சாவா மருந்தாகிய அமிழ்தையும் அயலவருக்குக் கொடுத்துண்ணும் 'ஈகை, விருந்தோம்பல், மனிதம் காத்தல் முதலான நற்செயல்களால் பெறக்கூடிய புகழுக்காக **இன்னுயிரையும்** தரத்துணிவர். உலகை முழுமையாகப் பெறமுடிந்தாலும் பழிச்செயலைச் செய்வாறில்லை. தமக்கென வாழாமல் மற்றவர்களின் வாழ்வு மேம்படச் செயல்படுவர் என்னும் நல்வாழ்விற்கான பொதுமைக்கூறுகளை,

> **"உண்டால் அம்ம இவ்உலகம் - இந்திரர்**
> **அமிழ்தம் இயைவது ஆயினும், 'இனிது' எனத்**
> **தமியர் உண்டலும் இலரே முனிவு இலர்;**
> **துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சி,**
> **புகழ் எனில், உயிரும் கொடுக்குவர், பழிஎனின்,**
> **உலகுடன் பெறினும், கொள்ளலர்; அயர்விலர்;**
> **அன்ன மாட்சி அனையர் ஆகி,**
> **தமக்கு என முயலா தோன் தாள்,**
> **பிறர்க்கு என முயலுநர் உண்மையானே"** (புறநா.182:1-9)

என்னும் பாடலில் பல அறக்கருத்துக்கள், **உலகில் மனிதம் தளைப்பதற்கும், இவ்வுலகம் இயங்குவதற்கும்** தேவையானதாய் அறியக்கிடைக்கின்றன.

ஒரு மனிதன் எவ்வளவு வறுமையும், வளமையும் பெற்றிருப்பினும் உண்பது சிறிதளவும், உடுத்துவது மேலாடை, கீழாடை எனும் இரண்டுமேயாகும் என்றுரைத்து,

> **"உண்பது நாழி; உடுப்பவை இரண்டே;**
> **பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே;**
> **செல்வத்துப் பயனே ஈதல்;**
> **துய்ப்பேம் எனினே, தப்புந பலவே"** (புறநா.189:5-8)

என்று ஈதலையும், இதனால் விளையும் பயன்களையும் நக்கீரர் வலியுறுத்துகிறார். இவ்வாறான ஈதலுக்கு உரியவர்கள் அனைவரும் ஓருலகில் தோன்றி, ஓருறவாய் வாழ்பவர்களே என்பதை,

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறநா.192:1)**

என்று இவ்வுலக இயற்கையைக் கணியன் பூங்குன்றனாரின் பொதுமைக் கருத்து புலப்படுத்துகிறது. "ஈரோப்பியன் பார்லிமெண்டில் அப்துல்கலாமின் உரையில் சிறந்த சொல்லோவியமாய் எடுத்தாளப்பட்டிருப்பது"[287] தமிழினத்தின் பெயர் விளங்கும் தனிச்சிறப்பாகும். இப்பதிவின் தொடர்ச்சியாய் மனிதவாழ்வு பேரியாற்றின் நீர்வழிச் செல்லும் தெப்பம் போல, இயற்கையோடு முரண்படாமல் அதன் இயல்போடு கூடிய நற்செயல்களால் நலம் வாழவேண்டும் என்பதை வலியுறுத்துவது பெறப்படுகின்றது.

பண்டைத்தமிழ் இலக்கியங்களில் குறிஞ்சி மலர்த்தொகுப்பு தனிச்சிறப்புடையது. எவ்வுயிரையும் தம்முயிர்போல் உணர்வதும்; மக்களுக்கு முன்னுதாரணமாய் மன்னன் திகழ்வதும்; சிறியோர், பெரியோர் என்ற வேறுபாடின்றி உலகோர் அனைவரிடமும் உறவு பேணுவதும்; வீரமுரைக்கும் புறப்பாட்டுள்ளும், உலகு வியந்து போற்றும் அறக்கருத்துக்களாகப் பாண்டிய நாட்டுப் புலவர் பாக்களின் தனித்தன்மைகளைச் சுட்டுகின்றன.

**எள்**

எண்ணெய் வித்தாகிய எள், கௌவை எனப்பட்டுள்ளது. எள் செடி நீலநிறமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அது விதைக்கப்பட்டுள்ள மலைச்சாரல் நிலத்தில் 'மகுளி' என்னும் எள் நோய் பரவாமல் உள்ளது. விளைநிலமான மலைச்சாரலில் மழைபொய்த்துப்போனால் நீர் இரைத்துக் கொள்ளத்தக்கவாறு சுனைகளுள்ளன. இளங்காய்கள் முதிர்ந்து கரியதாய் ஒரு பிடிக்கு ஏழு காய்கள் விளைந்துள்ளன. இச்செடி எண்ணெய் நிறைந்துள்ள நல்ல விதைகளோடு பல கிளைகளை உடையதாய்க் கவைத்து வளர்ந்துள்ளன என்பதை,

**"நீலத்து அன்ன விதைப்புன மருங்கில்
மகுளி பாயாது மலிதுளி தழாலின்
அகளத்து அன்ன நிறைசுனைப் புறவில்**

கௌவை போகிய கருங்காய் பிடிஏழ்
நெய்கொள ஒழுகின பல்கவர் ஈர்எண்" (மலைபடு.102-106)

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

இப்பாடலில் செடியின் நிறம், விளைநிலம், நோயின் தன்மை, நீரின் தேவை, இளங்காய், முதிர்ந்த கருங்காய், எண்ணெய்வித்தின் திறம், நன்றாகக் கிளைந்து வளர்ந்துள்ள செடியின் விளைச்சல் திறன் முதலானவை ஒருங்கே புலப்படும்படி பதிவு செய்யப்பட்டுள்ளது. இது அறிவியல் ஆய்வைப் போல இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரால் சிறப்புறப் படைக்கப்பட்டுள்ளது.

**பல்லுயிரிகளின் வாழ்வியல் உரிமை**

'தி லிவிங் பிளானட் ரிப்போர்ட்' என்ற தலைப்பில் "ஆராய்ச்சியாளர்கள், பல்வேறு இனங்களைச் சேர்ந்த 4 (நான்கு) ஆயிரம் பறவைகள், மீன்கள், பாலூட்டிகள், நீர்நிலவாழ்வன மற்றும் ஊர்வன ஆகியவற்றில் இருந்து சேகரிக்கப்பட்ட தரவுகளை ஆய்வு செய்து முடிவில் இந்த அறிக்கையை வெளியிட்டு இருக்கின்றனர். கடந்த அரை நூற்றாண்டில் இரண்டு மடங்கு பெருகியுள்ள மனிதர்கள், தங்களது பசிக்காகவும், பாதுகாப்புக்காகவும் பூமியில் தம்முடன் வாழும் மற்ற உயிரினங்களை உண்பது, அவற்றை விஷமிட்டுக் கொல்வது என முற்றிலுமாக அழித்து வருவதாக இந்த அறிக்கை எச்சரிக்கிறது."[288]

பழந்தமிழ் மொழியின் உயிரின வகைப்பாடுகளைப் போன்றே இப்பூமியில் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு உயிர்வரை அனைத்து உயிர்களுக்கும் வாழ்வதற்கான உரிமை பொதுவானதாகும். இதனை மனிதன் மனிதத்தோடு சிந்தித்தால் மட்டுமே பல்லுயிர்ப் பெருக்கத்தையும் மனிதனின் வாழ்வாதாரத்தையும், இப்புவியின் நல்லியக்கத்தையும் அழிவில் இருந்து மீட்டெடுக்க முடியும் என்பது இக்காலச் சூழலியல் கருத்தாய் வலியுறுத்தப்படுகின்றது.

**தொகுப்புரை**

- ‘புவியில்’ பல்லுயிர்த் தொகுதிகளின் வாழ்வாதாரமாய் ‘வான்மழை’ அமைகிறது. ‘கதிரவனால்’ ஆவியாகும் ‘கடல்நீர்’ மேகமாதலும், அம்மேகங்களைக் குளிர்ந்த ‘காற்று’த் தீண்டுவதால் மழை உருவாதலும் இயல்பு. இவ்வைம்பெரும் சக்திகளின் ஒருங்கிணைந்த இயக்கம் உலகை இயக்கும் மூலாதாரக் கொடைகளாகத் திகழ்கின்றன.

- தானே ஒளிரும் நாள்மீனாகிய ஞாயிறு உலக இயக்கத்தின் முதற்காரணியாய்த் திகழ்கிறது. கதிரவனின் அதிகாலைத் தோற்றம் கதிர்விரி கனைச்சுடர் என்றும், அவற்றின் ஒளி பரவுதல் விடியல் வெங்கதிர் என்றும் இடம்பெற்றுள்ளது.

- மிகுதியான வெம்மையைக் கடுங்கதிர் என்றும், வெம்மைக் குறைதலை அலங்குகதிர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒளியும் வெம்மையும் குறைந்த மாலைப்பொழுதை அந்திப்படுசுடர், கதிர்மழுங்குதல் என்னும் புனைவுகள் விளக்குகின்றன. இரவின் தொடக்கம் எல் விசும்பு படர என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இப்பதிவுகள் கதிரவனின் ஒளி, வெம்மையைக் குறித்த தன்மைகளையும், நாளின் இயக்கத்தையும் புலப்படுத்தும் அடைமொழிகளாய் அமைந்துள்ளன.

- ஓய்தலின்றி இயங்கும் கதிரவன் ஒற்றைச் சக்கரத்தேரில் உலவுவதுபோல் காவிரிப்பூப்பட்டினத்தில் சுங்கவரி பெற்றமை ஒப்பிடப்பட்டுள்ளது. ஞாயிறின் பேராற்றல் மன்னனின் வீரத்திற்கும், அதன் நிலையான இயக்கம் ‘சூரியனினும் வாய்மை மாறாது நின்சொல்’ என உண்மைக்கும் உவமைகளாய்ச் சுட்டப்பட்டுள்ளன.

- நிலவின் உருவம், சூழல்வனப்பு, தண்மை முதலானவற்றோடு நலம்கூறும் ஒப்புமைப் பதிவுகளாய் எடுத்தாளப்பட்டுள்ளன. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு ஊராரின் விழாவும், முழுமதியும் மனவருத்தம் தருவதாகவும், பாரி மகளிரின் மனச்சுமையை வெளிப்படுத்துவதாகவும், உள்ளத்து உணர்ச்சிகளுக்கான வடிகாலாய் திங்கள் பதிவிடம் பெற்றுள்ளன.

- விண்மீன்களுள் மீன், பன்மீன் எனும் பொதுமைப்புனைவு, உரோகினி, வெள்ளி, மகவெண்மீன், சிறுமீன், அறுமீன் எனப் பல பதிவுகளுள்ளன. தெளிவாகத் தோற்றம் தரும் வடமீனின் ஒளியாற்றல், வடதிசையிலிருந்து தென்திசை சென்றால் மழை இராது எனும் நம்பிக்கை குறித்தும் பதிவுகள் இடம்பெற்றுள்ளன.
- வடமீன் தென்திசை சென்று வான்மழை பொய்த்தாலும், காவிரியாற்றின் நீர்வளம் பொய்க்காது தமிழகத்தை வளப்படுத்தும் எனும் உறுதியான பதிவுகள் பாண்டியநாட்டுப் புலவர் பாக்களில் காணப்படுகின்றன.
- வானின் எல்லையற்ற பெரும்பரப்பளவு மாவிசும்பு என அடுக்கி உரைக்கப்பட்டுள்ளது. அந்திச் செவ்வானில் பறக்கும் கொக்குக் கூட்டங்கள், முருகனின் மார்பிலுள்ள முத்துமாலையாய் உவமிக்கப்பட்டுள்ளது. யானைப் பிணங்களும், இரத்தத்தில் பிறைபோல் தோன்றும் தந்தமும் செவ்வானக்காட்சிகளாய் ஒப்பிடப்பட்டுள்ளன.
- ‘பொழிமழை துறந்த புகை வேய்குன்றம்’ எனச் சூழல் புலப்பாட்டோடு மழைவேட்டலும், கருவி வானம், குணகடல் முகந்த கொள்ளை வானம் என மழையின் தோன்றலும், கலிமழை கெழீஇய, படுமழைப் பொழிந்த என மிகுதியான மழையும் அடைமொழிகளோடு பதிவு செய்யப்பட்டுள்ளன.
- வானவில் திருமாலின் பலவண்ண மலர்மாலையாகவும் குளத்திலுள்ள பலவண்ண மலர்களாகவும், கிளியின் கழுத்து நிறங்களாகவும் ஒப்பிட்டு உரைக்கப்பட்டுள்ளன.
- மழை மேகங்கள் யானைக் கூட்டங்களோடும், பாரியின் உயரிய கொடை மழையோடும் உவமிக்கப்பட்டுள்ளன. இடி முழக்கம் போன்ற குன்றத்து மக்களின் பேராரவாரம், மழையை வரவழைக்கும் போலச் செய்தல் உத்தியாய்த் தெரிகிறது.
- தலைவனின் வரவறிந்து, குளிர்வித்த மழைக்கு என்ன கைம்மாறு செய்வேன் எனும் தலைவியின் பாராட்டால், உலகைத் தன்வயப்படுத்தும் மழை மக்களின் மனத்தை இயக்கும் திறன்மிகு கருவியாகப் பெறப்படுகிறது.

- கிழக்கில் தோன்றுவது கொண்டல், மேற்கில் தோன்றுவது கோடை, தெற்கில் தீண்டுவது தென்றல், வடக்கில் வருத்துவது வாடை எனத் திசையோடு காற்றின் தன்மைகள் உணர்த்தப்பட்டுள்ளன.

- காற்றின் வேகம் குதிரையின் வேகத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளது. அதன் இயக்கம் மென்மணற்தூவலோடும், உலரும் ஆடையோடும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

- உலக நாகரிகத்தின் மையப்புள்ளியான நெருப்பு, தினைப்புனம் காக்கும் கொள்ளிக்கட்டை, கலங்கரை விளக்கத்தின் ஒளி, பலவாறு ஒளிரும் அழல், அக்கினிச் சுட்டல், காடு அழித்துக் கழனி செய்யும் கருவி, காட்டுத்தீயின் துன்பம் முதலான பதிவுகளைக் கொண்டுள்ளன.

- பாண்டிய நாட்டுப் புலவர்களின் பாடல்களில் நூற்றி ஐம்பதுக்கும் மேற்பட்ட தாவரங்களும், அதன் பலவிதப் பன்பாடுகளும் சுட்டப் பெற்றுள்ளன. இலை, பூ, நறுமணம், நிறம், தோற்றம் எனுமாறு தற்காலத்தில் அற்றுப்போன தாவரங்களையும் எக்காலத்திலும் காணத்தரும் பதிவுகளைக் கொண்டுள்ளன.

- நறும்புகையோடு கூடிய அகில், குளிர்ச்சிதரும் சந்தனம், மருத்துவப் பெரும்பயனையுடைய கருவேப்பிலை, காலமன்றி பயன்கொடுத்த நாவல், உணவில் சிறப்பிடம் பெறும்புளி போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

- உணவுப் பொருட்கள், கைவினைப் பொருட்கள் என முழுமுதற் பயன்மரமாய் விளங்கும் பனை, வேம்பு அனைத்துயிர்க்கும் பொதுமைப் பயன்விளைவிக்கும் ஆலமரம் போன்றவை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

- மஞ்சள், இஞ்சி முதலான ஆற்றலுடைய மூலிகைகள் அறியப்பட்டுள்ளன. மஞ்சளும், இஞ்சியும் மலைநிலத்து விளைபொருட்களாக அறியப்படுகின்றன. மஞ்சள் அதன் பெரும்பயன் கருதி வீட்டின் முன்றிலில் வளர்க்கப்பட்டுள்ளது.

- அசுணம் ஒலியின் அதிர்வலைகளை உற்றுநோக்கி வாழும் வண்டுகளின் ஒளிபோல் உள்ள யாழிசையால் ஈர்க்கப்பட்டுக் கடினப் பறையொலியின் ‘ஒலிமாசினால்’ மூர்ச்சையாவது அறியப்படுகின்றது.
- யானையின் காதல், வீரம், இசை இன்பம் முதலான சிறந்த குணங்கள், சிலபாக்களில் மனதகழாத சித்திரங்கள், செவி, தந்தம், துதிக்கை முதலான உறுப்புகள் என்பனவாய்ச்சிறப்புணர்த்தும் பதிவுகளோடு இடம்பெற்றுள்ளன. இப்பதிவுகள் புலவர்களின் யானை குறித்த, பன்முக அறிதலைப் புலப்படுத்துகின்றன.
- தற்காலத்தில் அழியாமல் பாதுகாக்கப்படும் இந்திய தேசிய விலங்கான புலி, பால்பொருள்கள் பலதந்து, பொருளாதாரத்தை மேம்படுத்துவதால் தங்கத்தினும் மேன்மையுடையதாய் மதிக்கப்பெற்ற எருமை, பாலைநிலக் கொடுமையால் உலர்எலும்பை உண்ணும் ஒட்டகம், உப்பு வணிகத்திலும், உமணர்களின் வாழ்விலும் தனியிடம் பெற்ற கழுதை முதலான பதிவுகள் அழிந்துவரும் விலங்குகளைக் காட்சிப்படுத்துகின்றன.
- அரிதாகிப்போன தம்பலப்பூச்சி, ஈயல் மூதாய், மின்மினி முதலான சிறுபூச்சிகள் மனச்சோர்வு நீக்கும் மருந்தாக, உணவாக, அலங்கார இயற்கை மின்னொளியாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.
- குறுகிய செங்காலும், இன்னொலியும், விரைந்து பறக்கும் திறனும், மென்மையான வெண்பஞ்சுப்பொதி போன்ற தூவிகளுமாய் அன்னப்பறவையின் பண்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன.
- வேள்விக்களப் புகையின் வெம்மை தாங்காமல் குயில் கானகத்திற்குச் செல்வது சுட்டப்பட்டுள்ளன.
- அழிந்து வரும் செம்பருந்துகள் பாம்பை அஞ்சச் செய்யும் திறமுடையதாக, வளைந்த அலகோடு புனைவுகளாக்கப்பட்டுள்ளன. இறந்த பயனற்ற உடல்களை உண்டு, புவியைச் சுத்தம் செய்யும் தூய்மைக் காவலனாய் கழுகுகள் இடம் பெற்றுள்ளன. இவற்றின் ஒளி ‘இளி’ எனும் இசையோடு ஒப்பிடப்பட்டுள்ளது.

- பொன், செம்பு, எ∴கு முதலான புதுப்பிக்க இயலாத நிலவளங்களும், முத்து, பவளம், வலம்புரிச்சங்கு முதலான நீர்வளங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன.
- குறிஞ்சிப்பாட்டின் மலர்த் தொகுப்பிலுள்ள ‘மும்மலர்த் தொடையல்’ ஐவகை நிலங்களிலும், மரம், செடி, கொடி, புதர், நீர்நிலை எனப் பலவகையானும் மலர்ந்த திறத்தினதாகும். கபிலரின் மனத்திரையில் பொதிந்துள்ள இம்மலர்க்காட்சி, தாவரங்கள் மீதான புலவரின் பேரார்வத்தைப் புலப்படுத்துகின்றன.
- பாண்டிய மன்னன் அறிவுடைநம்பி, அளவில்லாச் செல்வமும், அனைத்துச் சுற்றமும், நட்பும், சூழ இருப்பினும் பிள்ளைப்பேறுதான் ஒருவனின் வாழ்வை முழுமையடையச் செய்யும் என்கிறார்.
- குழந்தையின்மையின் குறைதீர்க்க இரண்டாவது மணம் நிகழ்ந்தது. இல்லத் தலைவியே தன் தலைவனைவிட குழந்தை பெற்றுத்தரவிருக்கும் இளையோளைப் பெரிதும் போற்றுவது முதலான பதிவுகள் இடம்பெற்றுள்ளன.
- பயன்பாட்டுக் கருவிகளில் நீரும், நெருப்பும் அறிவியல் திறத்தோடு புலப்படுகிறது. காலக்கணக்கீட்டில் ‘குறுநீர்க் கன்னல்’ ஆகவும்; ஒளியின் நெடுந்தூரப் பயணத்தை உணர்ந்து கப்பல்களை வழிநடத்தும் கலங்கரை விளக்கத்துள் ஒளியாகவும், பாண்டிய நாட்டுப் புலவர்களின் படைப்பால் பண்டைத் தமிழரின் இயற்கைப் பயன்பாடுடைய கண்டுபிடிப்புகள் தனித்தன்மையுடன் காணப்படுகின்றன.
- மரங்கள் மண்ணுலகின் அற்புத வரமாகும். இதன் வளர்நிலையும், பயன்படுதிறமும் முடிவில்லாதது. இதனையும் முடிவுக்குக் கொண்டு வரும் மனதிடம் உள்ளவன் மனிதன்தான் என்பதை பண்டையர் நன்கு உணர்ந்ததால் மருந்திற்காகக்கூட மரங்களைக் கொல்லமாட்டார் என்னும் குறிப்போடு வேண்டுகோள் விடுத்துள்ள புலவரின் தனித்திறம் உலகுகாக்கும் உயர்வரியாய்த் தெரிகிறது.

- உலகியல் அரங்கில் தமிழ்வாழும் நிலைப்பேற்றிற்கான காரணிகளாய் ஈகை, விருந்து போற்றுதல், மனிதம் காத்தல் முதலான நற்செயல்களுக்காக உயிரையும் தரத்துணியும் ஆற்றலுடையோர். உலகை முழுவதுமாய்ப் பெறமுடிந்த போதும் பழிச்செயலைச் செய்வாறில்லை எனத் தமிழரின் நற்பண்புகள் போற்றப்படுகின்றன.

- வளமைப்பெருக்கும், வறுமைத்துயரும் உடையவர்களானாலும் உண்பது பசியைப் போக்குமளவிலான உணவும், உடுத்துவது மேலாடை, கீழாடை எனும் ஈருடைகளுமேயாகும் என ஒரு மனிதனின் அடிப்படைத் தேவையைச்சுட்டி, ஈதலும் அதனால் விளையும் நன்மைகளும் வலியுறுத்தப்பட்டுள்ளன. இவ்வாறான நன்மைகளைப்பெறுபவர் அனைவரும் ஓருலகில் தோன்றி ஓருறவாய் வாழ்பவர்களே என்னும் பொதுமைச்சமூகக் கருத்தும் இடம்பெற்றுள்ளன.

- எவ்வுயிரையும் தம்முயிர்போல் உணர்வதும்; மக்களுக்கு முன்னுதாரணமாய் மன்னன் திகழ்வதும், வீரமுரைக்கும் புறப்பாடல்களிலும் உலகு வியந்து போற்றும் அறக்கருத்துக்களாய் அமைந்துள்ளன. மனிதத்தோடு கூடிய மனிதனின் செயற்திறனே பல்லுயிர்ப் பெருக்கத்தையும், மனிதனின் வாழ்வாதாரத்தையும் மீட்டெடுக்கும் என்பது காலத்தின் கட்டாயமாகும்.

**சான்றெண் விளக்கம்**

1. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள் மூலம், குறள்.19.
2. இளம்பூரணனார், (உ.ஆ.), தொல். பொருள். மரபு. நூற்.635.
3. கோகிலா தங்கசாமி, மலரும் இந்திய சமுதாயத்தில் கல்வி, ப.38.
4. முருகு.119, 174.
5. மதுரை.5.
6. வானம் - அகநா.318:2, குறி.கலி.48:7.
7. விசும்பு - அகநா.253:24, முருகு.7-8, 115-116, பட்.பா.67.
8. விண் - பெரும்பாண்.348, மலைபடு.2.
9. பரிமேலழகர் உரை, பரி.1:47.
10. அண்டஞோனி சூரியன், தினத்தந்தி நாளிதழ், 23.6.15, ப.8.
11. நாகூர் ரூமி, சக்கரநாற்காலியில் சிக்கிய பிரபஞ்சம், ப.25.
12. https://ta vikipedia org. viki, ஞாயிறு.
13. சிறுபாண்.243-244.
14. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.273.
15. மேலது., ப.262.
16. ச.வே.சுப்பிரமணியன், தமிழ்ச் செவ்வியல் நூல்கள், (மூலம் முழுவதும்), முருகு.1-2.
17. அகநா.57:11, நற்.348:102, புறநா.67:4-5.
18. குறி.கலி. 56:4, அகநா.57:11.
19. குறி.கலி.58:3.
20. பட்.பா. 93.
21. பெரும்பாண். 384.
22. உரையாசிரியர்கள் குழு, புறநானூறு, புத்தகம் ஒன்று, ப.175.
23. ச.அகத்தியலிங்கம், சாகாவரம்பெற்ற சங்கப்பாடல்கள், ப.161.
24. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.267.
25. வானம், தினத்தந்தி நாளிதழ், 8.2.16, ப.8.
26. ச.முருகேசன், (ப.ஆ.), பல்துறைத் தோற்றுவாய்க்குச் சங்க இலக்கியத்தின் பங்களிப்பு - சங்க இலக்கியத்தில் கோள்கள், ப.188.
27. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.273.

28. பின்னத்தூர் நாராயணசாமி, நற்றிணை உரை, ப.254.
29. ச.மெய்யப்பன், திருக்குறள் மூலம், குறள்.10.
30. மேலது., குறள்.15.
31. கார் - குறி.பா.162, மலைபடு.142:359.
32. மதுரை.568.
33. குறி.பா.50.
34. மலைபடு.146, 514.
35. முருகு.116.
36. ஐங்.275:3.
37. பெரும்பாண்.363.
38. நற்.365:6.
39. இளமழை - ஐங்.252:2, குறி.கலி.41:25.
40. குறுந்.249:3.
41. மலைபடு.483.
42. தகவல் களஞ்சியம், தினத்தந்தி நாளிதழ், 6.11.15, ப.11.
43. நெடுநல்.173-175.
44. குறி.பா. 48.
45. அகநா. 47:5.
46. அகநா. 143:6.
47. காற்று, தினத்தந்தி நாளிதழ், 27.12.15, ப.19.
48. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.280.
49. பேராசிரியர் குழு, சுற்றுச்சூழல் கல்வி, ப.15.
50. அகில் - முருகு.296, நெடுநல்.56, குறி.பா.110.
51. அமை - முருகு.195, மலைபடு.522.
52. குறுந்.18:1.
53. குறி.பா.87-96.
54. பட்.பா.188-193.
55. மலைபடு.268-270.
56. குறி.பா.94-96.
57. அகநா.81:1-2.
58. பெரும்பாண்.83-85.

59. நற்.376:5-6.
60. குறுந்.106:2.
61. பெரும்பாண்.130-131.
62. பட்.பா.235-238.
63. பதி.பத்து. 61:6.
64. குறி.பா. 66-98.
65. பெரும்பாண்.308-310.
66. கடம்பு - அகநா.172:6, பெரும்பாண்.203-206.
67. மலைபடு.14:15.
68. நற்.54:11.
69. கமுகு - பெரும்பாண்.7-8, 380-392, நெடு.23.
70. மலைபடு.35-37.
71. பெரும்பாண்.374-376.
72. குறி.பா.70-96.
73. குறி.பா.67-96.
74. பெரும்பாண்.180-182.
75. குருகிலை - அகநா.167:11, குறி.பா.73-96.
76. குறி.பா.67-96.
77. குருந்து - அகநா.167:11, குறி.பா.95-96.
78. குறுந்.198:1-2.
79. குறி.பா.66-96.
80. நற்.119:8-9.
81. கொன்றை - பெரும்பாண்.327-329, குறி.பா.86-96.
82. அகநா.25:10.
83. முருகு.26-27.
84. குறி.பா.89-96.
85. குறி.பா.78-96.
86. குறி.பா.86-96.
87. குறி.பா.64-96.
88. செச்சை - முருகு.26-27, குறி.பா.63-96.
89. அசோகு - முருகு.21-22, 41, 208.

90. குறி.பா.82:96.
91. அகநா.150:9.
92. ஞாழல் - நற்.267:4-5, குறி.பா.81-96.
93. குறி.பா.85-96.
94. திலகமரம் - மலைபடு.520, 526, 529.
95. குறி.பா. 77-96.
96. தெங்கு - முருகு.307.308, பெரும்பாண்.353, 357, 364.
97. பெரும்பாண்.104-105.
98. நாகம் - முருகு.301-302, குறி.பா.94-96.
99. பெரும்பாண்.465.
100. மலைபடு.446-447.
101. குறி.பா.69-96.
102. அகநா.363:6-7.
103. குறுந்.156:2-3.
104. மலைபடு. 516.
105. பட்.பா. 89-90.
106. குறி.பா. 85-96.
107. பெரும்பாண். 3-6.
108. குறி.பா. 77-96.
109. பெரும்பாண். 109-110.
110. புளி - மலைபடு. 436-437, 178-179.
111. குறி.பா. 91-96.
112. புன்னை - பெரும்பாண்.266-267, குறி.பா.93-96.
113. போங்கம் - முருகு.27-30, குறி.பா.74-96.
114. மருதம் - பெரும்பாண்.232.
115. முருகு.143-144, மலைபடு.512.
116. பெரும்பாண்.306-308.
117. குறி.பா.70-96.
118. குறி.பா.67-96.
119. குறி.பா.67-96.
120. குறி.கலி.51:1

121. குறி.கலி.43:20-22.
122. வாழை - நற்.309:4-5, குறி.கலி.50:3.
123. குறி.பா.69-96.
124. பெரும்பாண்.184-186.
125. விளா - முருகு.37-41, பெரும்பாண்.95-96.
126. அகநா.228:10-12.
127. வேம்பு - நெடுநல்.176, குறுந்.67:2.
128. குறி.பா.91-96.
129. உ.வே.சாமிநாதன், குறுந்தொகை நூலாராய்ச்சி, ப.35.
130. S.Ganesan, South Indian Ethnomedicinal Plants, Pg.17.
131. www.Myvestige.com ப.21.
132. ஹரிஹர ராகவன், சர்வதேசத் தலைமையகப் பொதுமேலாளர், அடையாறு ஆலமரம், கட்டுரை, தினத்தந்தி நாளிதழ் 17.9.2013, ப.12.
133. குறி.கலி.64:2-3.
134. குறி.பா.62-96.
135. குறி.பா.71-96.
136. ஐயவி - முருகு.228, மலைபடு.122-124.
137. முருகு.236-238.
138. குறி.பா.76-96.
139. ஐங்.250:1.
140. நற்.376:5-6.
141. பெரும்பாண்.376-378.
142. குறுந்.100:2.
143. குறி.பா.63-96.
144. குறி.பா.90-96.
145. குறி.பா.90-96.
146. குறி.பா.92-96.
147. குறி.பா.78-96.
148. முருகு.190-192.
149. குறி.பா.96.
150. பெரும்பாண்.192-193.

151. பெரும்பாண்.214-218.

152. நற்.338:2.

153. குறி.பா.75-96.

154. ஆம்பல் - அகநா.36:3, பதி.பத்து.62:17.

155. பட்.பா.255-257.

156. ஐங்.240:1.

157. மலைபடு.136.

158. குறி.பா.72-96.

159. குறுந்.110-3-4.

160. பட்.பா.186-193.

161. முருகு.42-44.

162. அகநா.48:8-9.

163. குறி.பா.81-96.

164. குறி.பா.68-96.

165. குறி.பா.80-96.

166. தாமரை - குறி.பா.80-96, முருகு.72,73-76, அகநா.46:2. பெரும்பாண். 114-115, 402-405.

167. முருகு.190.

168. மதுரை.400-401.

169. நெய்தல் - மலைபடு.123-124. குறி.பா.79-96.

170. மலைபடு.459.

171. நெருஞ்சி - குறுந்.202:1-2, குறுந்.315:1-4.

172. நற்.197:2.

173. நெடுநல்.13-14.

174. நற்.59:9, 69:5.

175. ஐங்.211-212.

176. குறி.பா.79.

177. அகநா.46:36.

178. முருகு.72-75.

179. பெரும்பாண்.114.

180. பெரும்பாண்.403-405.

181. மதுரை.103-105.
182. வரகு - புறநா.120:6-9, மலைபடு.112-113.
183. ஐங்.குறி.207:2.
184. அகநா.220.
185. குறுந்.68:2.
186. மலைபடு.105-106.
187. மலைபடு.1250126.
188. நெடுநல்.121-122.
189. நற்.367:1-3.
190. மலைபடு.137.
191. குறுந்.246:2.
192. மலைபடு.515.
193. மஞ்சள் - முருகு.235-238, பெரும்பாண்.354-355, பட்.பா.17-20.
194. மலைபடு.438-439.
195. நற்.261:9-10.
196. பெரும்பாண்.220-221.
197. பெரும்பாண்.263-265.
198. குறுந்.100:2.
199. பெரும்பாண்.263-265.
200. பாசி - பெரும்பாண்.468, மலைபடு.220-222.
201. கரும்பு - குறி.கலி.40:28, அகநா.396:7.
202. அகநா.88:10-12.
203. அகநா.12:7.
204. அகநா.154:6-7.
205. மலைபடு.260-261.
206. நற்.112:2-4.
207. நண்டு - அகநா.170:11-14,380:4-7.
208. பசு - அகநா.249:12-14, குறுந்.181:3-4, 56:9-11, அகநா.4-9, நற்.359:1-3.
209. மலைபடு.413-416.
210. குறி.பா.253-261.
211. குறுந்.152:2-5.

212. ஆளி - அகநா.78, பெரும்பாண்.257-260.

213. மான் - குறி.கலி.43:14, 50:4, அகநா.827, ஐங்.287:1.

214. குதிரை - பெரும்பாண்.487:488, பட்.185, நற்.81:1-5.

215. உடும்பு - மலைபடு.508,177, பெரம்பாண்.132-133, 200, புறநா.326:9-12.

216. யானை - நற்.376, குறி.கலி.38:7,42:2, முருகு.303-305, பெரும்பாண்.358, 436, நெடுநல்.170, குறி.பா.36.

217. புலி - ஐங்.267:1, குறி.கலி.49:1, பட்.பா.220-221, குறி.பா.252-261.

218. கரடி - அகநா.81:1-5, மலைபடு.501.

219. எருமை - அகநா.206:2-3, பெரும்பாண்.164-166.

220. புறநா.211:18-19.

221. நற்.98:1-7.

222. பன்றி - நற்.336:1-3, ஐங்.261:1, 262:1, 264:1.

223. அகநா.245:17-19.

224. பட்.பா.257.

225. குறி.கலி.65:24-25.

226. குரங்கு - அகநா.82:8-9, நற்326:1-4.

227. அகநா.297:13-15.

228. முதலை - குறி.பா.257-261, அகநா.18:2-3, பட்.பா.242.

229. கழுதை - அகநா.207:1-6, 120:10.

230. மலைபடு.504.

231. நற்.98:5.

232. முயல் - நற்.59:5, பெரும்பாண்.113-116.

233. கோவை சதாசிவம், உயிர்ப்புதையல், ப.73.

234. மேலது, ப.79.

235. மேலது, ப.93.

236. இரா.செயபால், (உ.ஆ.), அகநானூறு உரைவிளக்கம், ப.265.

237. மேலது., ப.264.

238. மேலது., ப.266.

239. செ.வேங்கடராமர், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப.41.

240. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.314.

241. அயிரை - புறநா.67:6, குறுந்.178:1.

242. குறுந்.25:3-5.

243. இறால் - நற்.258:8, நற்.358:8, அகநா.170:12.

244. அகநா.346:4.

245. வரால் - மலைபடு.456-458, ஐங்.48.

246. பெரும்பாண்.284-288.

247. சுறா - அகநா.120:10, 150:17, 340:21.

248. அகநா.350:110-113.

249. அகநா.296:8-10.

250. அகநா.364:2-3.

251. குறுந்.178:1.

252. ச.மெய்யப்பன், திருக்குறள் மூலம், குறள்.475.

253. அன்றில் - நற்.152:6-7, அகநா.120:15.

254. அன்னம் - நெடுநல்.91-92, 132-133.

255. ஆண்டலை - பட்.பா.258, மலைபடு.140-141.

256. அகநா.81:1-5, 8:1.

257. கழுகு - மலைபடு.145-150, அகநா.175:1-6, அகநா.31:10-11.

258. பெரும்பாண்.204-205.

259. காக்கை - நற்.31:1-5, நற்.258:8, நற்.367:1.

260. கிளி - குறுந்.67:1-2, பெரும்பாண்.226-228, 300-301.

261. பெரும்பாண்.493-494.

262. கோழி - பட்.பா.75-77, 299, குறுந்.157:1-4.

263. குயில் - பட்.பா.55-57, பெரும்பாண்.374.

264. குருகு - நற்.211:4, 31:10, அகநா.141:19, குறுந்.226:5-6, 25:3.

265. நற்.230:2-3.

266. பட்.பா.258, 268.

267. பட்.பா.76-77.

268. வண்டு - ஐங்.256:2, பதி.பத்து.62:10.

269. ஐங்.292:2.

270. பருந்து - முருகு.148-151, அகநா.117:6, புறநா.370:25-26.

271. புறா - நெடுநல்.45-48, பெரும்பாண்.439-440.

272. மயில் - முருகு.122, 309-310, 316, குறி.பா.169.

273. நற்.44:10-12.

274. அகநா.57:1-5.

275. பட்.பா.3-6.

276. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.63.

277. புறநா.370:25-26.

278. தியடோர் பாஸ்கரன், ஒலியற்ற வசந்தம் (கட்டுரை) காலச்சுவடு, உலகத்தமிழ் இதழ், 99, ப.14.

279. பி.எல்.சாமி, சங்க இலக்கிய புள்ளின விளக்கம், ப.332.

280. செ.வேங்கடராமர், பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், ப.94.

281. மேலது., ப.189.

282. பேராசிரியர் குழு, சுற்றுச்சூழல் கல்வி, ப.11.

283. அச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.91.

284. கா.இராமச்சந்திரன், இலக்கிய இன்பம், தினத்தந்தி, கட்டுரை எண்.12.

285. ச.மெய்யப்பன். திருக்குறள் மூலம், குறள்.61.

286. இரா.செயபால், (உ.ஆ.), அகநானூறு, புத்தகம்-1, ப.127.

287. கலாமின் உரை, ஐக்கிய நாடுகள் சபை, மறு ஒளிபரப்பு அவரது நினைவலையில், 28.7.15 8.43.

288. உலக வன உயிரின நிதியம் மற்றும் லண்டன் உயிரியல் அமைப்பு - தினத்தந்தி இளைஞர் மலர், 12.11.16.

# முடிவுரை

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் போன்றவை பழந்தமிழ் வளர்ச்சியில் பாண்டியரின் பங்களிப்பை உணர்த்துகின்றன.

பண்டைத்தமிழ்ப் புலவர்களுள் நூற்றிஐந்து புலவர்கள் பாண்டிய நாட்டினர். இவர்களுள் அரசப்பரம்பரையினராய்ப் பதினொன்று புலவர்களும், மூன்று அரச மகளிரும் புலமைமிக்கோராய் இருந்துள்ளனர்.

பத்துப்பாட்டுள் ஏழு பாடல்களையும், எட்டுத்தொகையுள் அறுநூற்று இரண்டு பாடல்களையும் இப்புலவர்கள் பாடியுள்ளனர். இவற்றுள் புறப்பாடல்களினும் அகப்பாடல்கள் மிகுதியாய் இடம்பெற்றுள்ளன.

உலகின் ஆதாரமாகிய நீர், நிலம், நெருப்பு, காற்று, வானம் என்பனவற்றை இடமாகக் கொண்டு, காலத்தின் துணையோடு தோற்றம்பெறும் பல்வேறு தோன்றல்களும், கண்ணுக்குப் புலனாகும் பொருட்களன்றி இன்னுயிர், ஓசை போன்றனவும் பாடப்பெற்றுள்ளன. இவ்வாறு முதற்பொருளும், கருப்பொருளுமாய் இடம்பெறும் இயற்கை மனிதவாழ்வை முதன்மைப்படுத்தி, சூழலியல் பின்புலத்தோடு உரிப்பொருளின் சிறப்பை உணர்த்தும் பதிவுகளாய் அமைந்துள்ளன.

ஐம்பூதங்களும் ஐவகை நிலங்களின் பேராற்றலாய்ப் புலப்படுகின்றன. பண்டைத் தமிழர்கள் தாம் வாழும் இடச்சூழலுக்கு ஏற்ப ஏதேனும் ஒரு அரிசிச்சோறு, இறைச்சி போன்றவற்றை உணவாகக் கொண்டுள்ளனர். குறிஞ்சி, முல்லை நிலங்களில் சிறுதானியங்களும்; மருதம், நெய்தல் நிலங்களில் மீன்களின் பயன்பாடுகளும் சுட்டப்பட்டுள்ளன.

இளநீர், கரும்புச்சாறு, நுங்கு போன்ற நலம்தரும் இயற்கைக் குளிர்பானங்கள் மருதநிலத்துச் சிறப்புணவுகளாகப் பெறப்படுகின்றன. குறிஞ்சி நிலத்தின் பெரும்பயனாகத் தேன் இடம்பெற்றுள்ளது. குறிஞ்சி, முல்லை, மருதம் நிலங்களில், நிலவளங்களுக்கு ஏற்றவாறு வேளாண் தொழில் நடைபெற்றுள்ளது.

மதி, மலை, சுனை, மயில், கிளி எனப் பலவும் உவமைகளாக ஒரே பாடலில் இடம்பெற்றுள்ளன. இப்பதிவு மலைநிலப் பின்புலத்தோடு பெண்ணின் அழகைப் புலப்படுத்துகின்றது. ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலில் இளம்பயிர், சிறுகிளியின்தூவி, சேற்றிலும் சுனையிலும் தோன்றும் மழைநீர்க்குமிழிகள், உதிர்ந்து கிடக்கும் முல்லை மலர்கள், சிற்சிலிப்பறவைகளின் இறகுகள், தேர்ச்சக்கரத்தில் வளைந்து செல்லும் நீர், வரிசையாய் ஊர்ந்து செல்லும் பாம்புகள் என இயற்கை உவமைகள் உருவகங்களோடு கார்காலத்தையும், சூழல்வனப்பையும் காட்சிப்படுத்து கின்றன. இவ்வாறு இயல்பு மாறாத சூழலியற்புனைவுகளில் இயற்கை பேரிடம் பெறுகின்றது.

இன்னுயிர் என்னும் இயற்கைப்பாடுபொருள், நிலையில்லாத மனித வாழ்வினும் சிறந்த நற்பண்புகளை வலியுறுத்தும் பதிவுகளாய் அமைந்துள்ளன.

உள்ளுறைப் பதிவுகள், குறைகளை நிறைசெய்து மனித வாழ்வை மேம்படுத்தும் நோக்கோடும், இயற்கைப் பின்புலத்தோடும் அமைந்துள்ளன. இவ்வுத்தி உளவியல் சார்ந்த மறைமுக அறிவுரை பகர்தலை ஒத்துள்ளது. பறவை, விலங்குகளின் அன்புறு நிகழ்வுகள் மனத்தைப் பண்படுத்தும் அருமருந்தாக இறைச்சியில் சுட்டப்பட்டுள்ளன.

பொய்மைப்புலி, வண்டூது தாமரை போன்ற உவமைகள் மனத்தில் அன்பில்லாமல், புலனின்பம் விரும்புவோருக்கான பதிவுகளாகப் பொருந்துகின்றன. தலைவன் ஈட்டிவரும் மிகுந்த பொருள்வேட்டம், சுற்றத்தோடு கூடிவாழும் சமூகப்பயன்பாட்டை உணர்த்துகின்றது.

கவண்கல்லின் இயக்கம், ஓயாத அலையோசை போன்றவை அலரால் உண்டாகும் துன்பங்களையும்; களவுக்காலத்தில் நாணமிழக்கும் பெண்மை, தன் தாய்மைப்பயனை இழப்பதையும் எடுத்துரைத்து இருவரும் கூடிவாழும் கற்புமணத்தை வலியுறுத்துகின்றது.

கொக்கு, பிடி போன்றவை, தன் இணையை இழந்து துன்புற்ற நிலையிலும், தம் சந்ததிகளைப் பேணும் திறம் சுட்டப்பட்டுள்ளன. இப்பதிவுகள் இவ்வுலக உயிர்களின் இளம்பருவப் பாதுகாப்பையும்,

தாய்மையின் பயனையும் உணர்த்துகின்றன. துதிக்கையைத் தாங்கிநிற்கும் யானையின் வலிய தந்தம், விடாமுயற்சி வெற்றியைப் பெற்றுத்தரும் என்னும் சமூகநலனை வலியுறுத்துகின்றது.

கோட்டோவியமாகக் கொடிகளை வரைந்து, நுண்கலையாய்ப் பூளைப்பூக்களால் அலங்கரித்துள்ள காட்டுப்பூனையும், அதன் குட்டிகளும்; மதியும், விண்மீன்களுமாய்க் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இதுபோன்ற பதிவுகள் உயிரோட்டமுள்ள எழுத்தோவியங்களைப் புலப்படுத்துகின்றன.

நிலப்புனைவுகளுள் ஐவகை நிலங்களின் பல்வேறு தோற்றங்கள், தனித்தன்மைகள், சூழல்வனப்புகள் முதலான பதிவுகள் தலைவன், தலைவியின் பண்பு நலன்களையும்; மன்னர்கள், வள்ளல்களின் நிலவளமைக் கொடைச்சிறப்பு, விருந்து போற்றுதல் முதலான தமிழ் மரபுகளையும்; பண்டைக்காலத்தின் இயற்கை வளங்களையும் தெளிவுபடுத்துகின்றன.

பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் என்னும் மூன்று நூல்களிலும்; கபிலரின் நூற்றி அறுபத்தொன்று குறிஞ்சித்திணைப் பாடல்களிலும் மலைநிலப் பதிவுகள் பெரும்பங்களிப்பைப் பெற்றுள்ளன.

இயற்கையின் விளைநிலமாக முல்லைநிலம் விளங்குகிறது. இந்நிலத்தின் பெரும்பயனாகப் புவியும், வளிமண்டலமும் குளிர்ந்து, பருவமுறை மாறாத மழையும், மாசற்றத் தூயகாற்றும் கிடைத்துள்ளன.

மருதநிலம் நெல்லும், கரும்பும் விளையும் நீர்வளமும், நிலவளமும் உடையது. கயம், பெருங்குளம் முதலான நீர்த்தேக்கங்கள் முறையாகப் பேணப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டுக்கு வையைப் பெரும்வளத்தைத் தந்துள்ளது.

நெய்தல்நிலம் பன்னாட்டு வாணிபத் தொடர்புடையதாய் அறியப்படுகின்றது. பிரிவொழுக்கத்தை மேற்கொள்ளும் பயணத்தில், துன்பம் மிகுந்த நெடுவழியாகப் பாலைநிலம் சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சிநிலம் மருவிய பாலைநிலச் சுட்டலில், காட்டுத்தீயின் தீவிரத்தை ஆலம்பேரிச்சாத்தனார் பதிவுசெய்துள்ளார்.

பாண்டிய நாட்டுப் புலவர்கள், தாம் நன்கு அறிந்த நிலச்சூழலையும், தம் அனுபவத்தால் கண்டுணர்ந்த நிகழ்வுச் சுட்டலையும் இயற்கைப் பதிவுகளில் கையாண்டுள்ளனர். பண்டைப் பாக்களுள் பேரிடம்பெறும் கபிலரின் பாடல்களில் மருதநிலப்புனைவுகள் இடம்பெறவில்லை. அள்ளூர் நன்முல்லையார் முல்லை, நெய்தல் நிலங்களைப் பாடவில்லை. வெள்ளிவீதியார் முல்லைநிலத்தைப் பாடவில்லை. நக்கீரரின் பாடலில் முல்லைநிலப்புனைவுகள் இடம்பெறவில்லை.

அளப்பறியா வானின் பரப்பு மாகவிசும்பு என இருமுறை அடுக்கிச் சுட்டப்பட்டுள்ளது. உலகை இயக்கும் ஞாயிறின் ஒளியாற்றல், வெப்ப ஆற்றல் போன்றவற்றைக் கருத்திற்கொண்டு இளங்கதிர், கடுங்கதிர், அந்திப்படுசுடர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன் நிலையான பேராற்றல் உண்மையோடு ஒப்பிடப்பட்டுள்ளது.

திங்களின் தண்ணிய ஒளி, பிறைவடிவம், முழுமதி முதலானவை பெண்ணின் அழகோடும், கோப்பெருஞ்சோழனின் அருள்நிறைந்த முகத்தோடும் ஒப்பிடப்பட்டுள்ளது. மூன்றாம்பிறையைத் தொழுவது பண்டைக்கால வழக்கென்பதை அறியமுடிகின்றது. வளர்பிறைபோல் மன்னனின் வெற்றியும், தேய்பிறைபோல் பகைவர்கள் கெட்டழிவதும் ஒப்பிடப்பட்டுள்ளன. இப்பதிவில் ஒளியின் வளர்ச்சி நன்னிமித்தமாகப் புலப்படுகிறது.

விழா நாளில் தனித்திருக்கும் தலைவியிடமும், தந்தையையும், நாட்டையும் இழந்த பாரிமகளிரின் நினைவலைகளிலும் துன்பியல் உணர்ச்சிகளுக்கான வடிகாலாய் முழுமதி குறித்தப்பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

தெளிவாகத் தோற்றம் தரும் வடமீனின் ஒளியாற்றலும்; இம்மீன் வடதிசையிலிருந்து தென்திசை சென்றால் மழையிராது என்னும் நம்பிக்கையும் பதிவுசெய்யப்பட்டுள்ளன. இப்பதிவுகள் பண்டைத் தமிழரின் நம்பிக்கையோடு கூடிய வானியல் அறிவைப் புலப்படுத்துகின்றன.

மழைவேட்டல், மழை உருவாதல், மிகுதியான மழைப்பொழிவுகள் குறித்த விளக்கப்பதிவுகள் சுட்டப்பட்டுள்ளன. கைமாறு செய்யமுடியாத

பெரும்பயனைத்தரவல்ல மழை என அதன் பெரும்பயனும்; தலைமக்களின் காதல் மனத்தை இயக்கும் திறமும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

மரம் என்னும் பண்டைக்காலப் பதிவு தாவரங்களுக்கு இணையானது. இம்மரங்களில் சில அழிக்கப்பட்டு விளைநிலங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. போரால் அழிந்துபட்ட இயற்கைவளம் குறித்து வருந்தும் பதிவுகளும் இடம்பெற்றுள்ளன.

மருந்திற்காகக்கூட மரம் அழிக்கப்படுவதில்லை என்னும் பதிவில் தாவரங்களின் மருத்துவப்பயனும், மரப்பாதுகாப்பும் உணர்த்தப்பட்டுள்ளன. இதுபோன்ற காரணங்களால் பறவை, விலங்குகளைவிட மிகுதியான எண்ணிக்கையில் நூற்றி ஐம்பது வகைத் தாவரங்கள், நீர்ப்பாசிகள் முதலானவை இடம்பெற்றுள்ளன. நாவல்மரம், வேம்பு, கடுகு எண்ணெய் போன்றவற்றின் மருத்துவப் பயன்பாடுகள் சுட்டப்பட்டுள்ளன.

யானை குறித்த பதிவுகள், புலவர்களின் பன்முக அறிதலைப் புலப்படுத்துகின்றன. ஒட்டகம் குறித்த பதிவு பாலைநிலத்தின் கடுமையைச் சுட்டுகின்றது. எருமைப்பாலின் மதிப்புக் கூட்டப்பட்ட உணவுப் பொருட்கள் பொருளாதார மேம்பாட்டை உணர்த்துகின்றன.

காற்றின் வேகம், அன்னப்பறவையின் பறக்கும் திறன் போன்றவை குதிரையின் வேகத்தோடு உவமிக்கப்பட்டுள்ளன. இக்குதிரையின் வேகத்திறன் தற்கால அறிவியலில் இயந்திரத்திறன் விளக்கக் குறியீடாய் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

பாம்புகளை வேட்டையாடும் பருந்து, தூய்மைக்காவலனா கழுகு, மழைநோக்கும் மண்ணுயிரிகளான ஈயல், வானம்பாடி, மின்மினி குறித்த பதிவுகள் இடம்பெற்றுள்ளன. அரிதாகிவரும் இவ்வுயிரினங்கள் குறித்து அறிந்துகொள்ளும் இயற்கைக் கொடைகளாய் இப்பதிவுகள் புலப்படுகின்றன.

வண்டின் சிறகொலி யாழிசையாக, அருவியின் ஒலி முழவொலியாக, மானின் குளம்படியொலி பெருவங்கியமாக, குயில் கூவுதல் குழலிசையாக, மயில் அகவுதல் முழவின் எதிரொலியாக, தேரைகளின் தொடர்ஒலி தாளவாத்தியங்களாக இயற்கையின் இன்னிசைகள் புலப்படுகின்றன.

குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்றுள்ள தொன்னூற்று ஒன்பது வகைத் தாவரங்களையும், அடைமொழி விளக்கப் பதிவுகளையும், ஓரிடத்தில் புலப்படுத்தும் இப்பதிவு தாவரவியல் பெயர்ப்பலகையாய்த் தனிச்சிறப்புடையது. கபிலரின் இம்மலர்ப்புனைவு மற்ற புலவர்களினும் தனித்துவம் வாய்ந்த பதிவாய்ப் பெறப்படுகிறது.

நீர்த்துளி காலத்தை உணர்த்துவதும், நீண்டதூரம் பயணிக்கும் ஒளி கப்பலை வழிநடத்துவதும் இயற்கையோடு இயைந்த அறிவியல் திறத்தினதாகும்.

அறக்கருத்துக்களுள் இயற்கை பேரிடம் பெறவில்லை எனினும் தம் உயிரினும் மேலாகப் பிறரைப் போற்றுவதும்; அறம் வழுவாமல் தன் இன்னுயிரை இழந்தும் இறவாப்புகழைப் பெறுவதும்; உலகில் மனிதம் நிலைப்பதற்கும், இவ்வுலகம் இயங்குவதற்குமான காரணிகளாய் உணர்த்தப்படுகின்றன. இப்பதிவுகள் மனிதனின் வாழ்க்கைக்கு இயற்கை இன்றியமையாதது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. மனிதனின் இயற்கையோடு இயைந்த நற்பண்புகள் உலக இயக்கத்திற்கு உதவுவனவாகும் என்பதைப் புலப்படுத்துகின்றன.

பசித்துன்பம் தீர்க்குமளவிலான உணவு, மேலாடை, கீழாடை என்னும் ஈராடை, உலகிலுள்ள எவ்வூரும் தாம் எல்லோரும் வாழ்வதற்கான ஊராகும்; மனிதகுலத்தினர் அனைவரும் ஒரே உறவினர் ஆவார் என்னும் பொதுமைச் சமூகக் கருத்துகள் பாண்டிய நாட்டுப் புலவர்களின் தனித்துவம் வாய்ந்த உலக இலக்கியப் பதிவுகளாகும்.

எள்ளுச்செடியின் நிறம், விளைநிலம், நீர்த்தேவை, இளங்காய், முதிர்ந்தகாய், ஒருபிடிக்கு ஏழு காய்கள் என அதன் விளைச்சல், எண்ணெய் நிறைந்த விதைகளின் முதல்தரம் முதலானவை குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பயிரைத் தாக்கும் மகுளி என்னும் நோய், அந்நோய்த் தாக்காத வேளாண்மை குறித்தும் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் பதிவு செய்துள்ளார். இப்பதிவு வேளாண் அறிவியலின் விளக்கப்பதிவாய் தனிச்சிறப்புடன் அமைந்துள்ளது.

தாவரவியல், வேளாண் அறிவியல், வானியல், நீர்மேலாண்மை, மருத்துவம், மண்ணியல், விலங்கியல், உணவு மேலாண்மை, சுற்றுச்சூழலியல் போன்ற பல்வேறு துறைகளில் சிறந்து பண்டைத் தமிழர் வாழ்ந்துள்ளனர்.

ஐம்பூதங்களுள் இடம்பெறும் இயற்கைப் பாடுபொருட்கள், கருத்துத்தெளிவிற்கும் காட்சிப் புலப்பாட்டிற்கும் ஏற்றவாறு பதிவுகள் பெற்றுள்ளன. இப்பதிவுகள் மனிதவாழ்வினை முதன்மையாகக் கொண்டுள்ள போதும், இயற்கையைப் புறக்கணிக்கவில்லை. எளியதாய்க் காணப்படும் நெருஞ்சிமலர், கட்புலனாகாத இன்னுயிர், வேளாண் அறிவியலின் விளக்கப்பதிவுகளாய் எள் என நுட்பத்தோடு படைத்தாளப்பட்டுள்ளன. இவை இயற்கை மனிதவாழ்வை மேம்படுத்துவதும் மனிதன் இயற்கையைப் பாதுகாப்பதும் இன்றியமையாதது என்பதை வலியுறுத்துகின்றன.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. சாமிநாதையர்.உ.வே., (உ.ஆ.) — குறுந்தொகை (மூலம்-உரை-ஆராய்ச்சி), டாக்டர் உ.வே.சா. பதிப்பு, டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், 2, அருண்டேல் கடற்கரைசாலை, பெசன்ட் நகர், சென்னை-90. பதிப்பு - 2009.

2. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ.) — குறுந்தொகை திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிட்., 522, டி.டி.கே.சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18. பதிப்பு - 2007.

3. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ.) — ஐங்குறுநூறு, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிட்., 1/140, பிரகாசம் சாலை, சென்னை-1. மறுபதிப்பு - திசம். - 1972.

4. சோமசுந்தரனார்.பொ.வே., (உ.ஆ.) — பரிபாடல், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிட்., 1/140, பிரகாசம் சாலை, சென்னை-1. மறுபதிப்பு - 1975.

5. சோமசுந்தரனார்.பொ.வே., கலித்தொகை
(உ.ஆ.) நச்சினார்க்கினியர் உரை,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
(பி) லிட்.,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை-1.
நான்காம் பதிப்பு - ஜுலை - 1975.

6. சோமசுந்தரனார்.பொ.வே., அகநானூறு,
(உ.ஆ.) திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
(பி) லிட்.,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை-1.
மறுபதிப்பு - பிப்ரபரி - 1976.

7. சோமசுந்தரனார்.பொ.வே., பத்துப்பாட்டு (இருதொகுதி),
(உ.ஆ.) திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
(பி) லிட்.,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை-1.
மறுபதிப்பு - 1971.

8. துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு., பதிற்றுப்பத்து,
(உ.ஆ.) திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்பக்கழகம்
லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை-18.
ஐந்தாம் பதிப்பு - ஆகஸ்ட் - 1999.

9. துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு., (உ.ஆ.) — புறநானூறு (இரு தொகுதிகள்), செவ்விலக்கியக் கருவூலம், தமிழ்மண் அறக்கட்டளை, சென்னை-17. முதற்பதிப்பு - 2008.

10. நாராயணசாமி ஐயர், பின்னத்தூர்.அ. (உ.ஆ.) — நற்றிணை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., 522, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை-18. மறுபதிப்பு - 2007.

**துணைமைச் சான்றுகள்**

1. அகத்தியலிங்கம்.ச., — சங்க இலக்கியங்கள், செவ்வியல் இலக்கியங்களே, மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600 108. முதற்பதிப்பு - 1997.

2. அகத்தியலிங்கம்.ச., — சாகா வரம் பெற்ற சங்கப் பாடல்கள், மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் - 608 001. முதற்பதிப்பு - டிசம்பர் - 2002.

3. அரவிந்தன்.மு.வை., — உரையாசிரியர்கள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம். முதற்பதிப்பு - ஏப். 1968.

4. ஆசிரியர் குழு, தமிழக வரலாறும் பண்பாடும்,
பதிப்புரிமை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
தனிச்சுற்றறிக்கை.

5. ஆரோக்கியசாமி, நாமிருக்கும் நாடு /
தென்னிந்திய வரலாறு,
அமுத நிலையம் பி லிமிடெட்,
தேனாம்பேட்டை,
சென்னை-18.
முதற்பதிப்பு - டிசம்பர் - 1955.

6. இரத்தினசாமி.சு., சங்க கால அரசர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
8/1, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை-18.
முதற்பதிப்பு - நவம்பர் - 1995.

7. இராசமாணிக்கனார்.மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு - 1970.

8. இராமையா பிள்ளை.நா., நற்றிணை,
வர்த்தமான் பதிப்பக வெளியீடு,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை-17.
முதற்பதிப்பு - 1999.

9. இளங்குமரனார், பொருளதிகார வாழ்வியல் விளக்கம்,
தமிழ்மண் பதிப்பகம்,
7, சிங்காரவேலர் தெரு,
தியாகராயர் நகர், சென்னை-17.
முதற்பதிப்பு - 2003.

10. உரையாசிரியர் குழு, புறநானூறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை-98. நான்காம் பதிப்பு - அக்டோபர் - 2011.

11. கரிகாலன்.நை.சி., புறநானூற்று ஆய்வுகள், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-B, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98. முதற்பதிப்பு - டிசம்பர் - 2011.

12. கிருஷ்ணமூர்த்தி.இரா., பாண்டியர் பெருவழுதி நாணயங்கள், 161, அண்ணா சாலை, சென்னை - 600 002. முதற்பதிப்பு - டிசம்பர் - 1987.

13. குளோரியா சுந்தரமதி,இலா. சங்க இலக்கிய மருதம், தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம், முதற்பதிப்பு - 1973.

14. கோபால கிருஷ்ணமாச்சாரியார், திருக்குறள், உமா பதிப்பகம், 18/171, பவளக்காரத்தெரு, மண்ணடி, சென்னை-1. முதற்பதிப்பு - ஜூலை 2009.

15. கோகிலா தங்கசாமி, மலரும் இந்திய சமுதாயத்தில் கல்வி, மா நில பதிப்பகம், 48, TPK சாலை, பைகரா, மதுரை-4. மறுபதிப்பு - அக்டோபர் - 2009.

16. கோவிந்தன்.கா., சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை பகுதி-5, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் (பி)லிட்., 1/140, பிராட்வே, சென்னை-1. மறுபதிப்பு - மார்ச் - 1959.

17. கோவிந்தன்.கா., சங்கத் தமிழர்புலவர் வரிசை பகுதி-3, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் (பி)லிட்., 1/140, பிராட்வே, சென்னை-1. முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 1954.

18. கோவிந்தன்.கா., சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை பகுதி-4, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 154, டி.டி.கே. சாலை, சென்னை-18. முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 1954.

19. கோவிந்தன்.கா., தமிழர் பண்பாடு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 154, டி.டி.கே. சாலை, சென்னை-18. முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 1954.

20. கோவிந்தனார்.கா., தமிழக வரலாறு சங்ககால அரசர்கள், எழிலகம், 46, செல்வவிநாயகர் கோவில் தெரு, திருவத்திபுரம் (செய்யாறு) 604 407. முதற்பதிப்பு - ஜூன் 1993.

21. சஞ்சீவி.ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னை பல்கலைக்கழகம், முதற்பதிப்பு - 1973.

22. சஞ்சீவி.ந., கிருட்டிணா சஞ்சீவி — தென்பாண்டித் திருநாடு அல்லது திருநெல்வேலி வரலாறு, (கால்டுவெல்லின் திருநெல்வேலி சரித்திரம்-1881), காவ்யா பதிப்பகம், 16, இரண்டாம் குறுக்குத்தெரு, கோடம்பாக்கம், சென்னை. முதற்பதிப்பு - 1977.

23. சதாசிவம் (கோவை), — உயிர்ப் புதையல், வெளிச்சம் வெளியீட்டகம், 1441, அவிநாசி சாலை, பீளமேடு, கோவை - 641 004. முதற்பதிப்பு - 2009. Velicham V @ g mail . com.

24. சதாசிவ பண்டாரத்தார்.சி.வை., — பாண்டியர் வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-8. பதிப்பு - 1986.

25. சாமி.பி.எல்., — சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1/40, பிரகாசம் சாலை, சென்னை-1. பதிப்பு - 1976.

26. சாமி.பி.எல்., சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1/40, பிரகாசம் சாலை,
சென்னை-1.
பதிப்பு - 1970.

27. சாமிநாதையர்.உ.வே., சங்ககாலத் தமிழும் பிற்காலத் தமிழும்,
டாக்டர் சாமிநாதையர் பப்ளிகேஷன்ஸ்,
53, பிள்ளையார் கோவில் வீதி,
சென்னை-5.
பதிப்பு 1957.

28. சிங்காரவடிவேலன்.அர., சங்க இலக்கிய உவமைகள்,
பழனியப்பன் பதிப்பகம்,
தேவகோட்டை.
பதிப்பு - 1986.

29. சீனிவாசன்.ச.பொ., பத்துப்பாட்டில் வருணனை மரபுகள்,
சேகர் பதிப்பகம்,
66, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர்,
சென்னை-78.
முதற்பதிப்பு - ஜுலை - 2013.

30. சுப்பிரமணியன்.கா., சங்ககாலச் சமுதாயம்,
ஆய்வுக் கட்டுரைகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை - 600 098.
மூன்றாம் பதிப்பு - மே 1993.

31. சுப்பிரமணியன்.ச.வே., பகவதி.கே., — தமிழ் இலக்கிய கொள்கை, உலக தமிழர் ஆராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 600 113. முதல் பதிப்பு - ஆகஸ்டு - 1983.

32. சுப்பிரமணியன்.ச.வே., — பத்துப்பாட்டு, கோவிலூர் மடாலயம், கோவிலூர் - 630 307. முதற்பதிப்பு அக். 2003.

33. சுப்பிரமணியன்.ச.வே., — தமிழ்ச் செவ்வியல் நூல்கள் மூலம் முழுவதும், 31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-8. முதற்பதிப்பு - 31 டிசம்பர் 2008.

34. சுப்பிரமணியன்.பெ., பாலசுப்பிரமணியன்.கு.வெ., தட்சிணாமூர்த்தி.அ., — பரிபாடல், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98. பதிப்பு - 2011.

35. செயபால்.இரா., (உ.ஆ.) — அகநானுறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98. நான்காம் பதிப்பு - 2011.

36. ஞானசம்பந்தன்.அ.ச., — இலக்கியக்கலை, முல்லை நிலையம், 9, பாரதி நகர், முதல் தெரு, தி.நகர், சென்னை-17. மறுபதிப்பு - 2010.

37. தட்சிணாமூர்த்தி.அ., ஐங்குறுநூறு (மூலமும் உரையும்),
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-98.
நான்காம் பதிப்பு - அக்டோபர் - 2011.

38. தமிழண்ணல், குறுந்தொகை,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் - 630 307.
முதற்பதிப்பு - ஏப்பிரல் - 2002.

39. தமிழண்ணல், தொல்காப்பியரின் இலக்கியக்
கொள்கைகள்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்ப முதலி தெரு,
மதுரை - 625 001.
முதற்பதிப்பு - 2004.

40. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு,
இலக்கியக் கொள்கைகள்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்ப முதலி தெரு,
மதுரை - 625 001.
நான்காம் பதிப்பு - 2014

41. தர்மராஜ்.ஜே., சுற்றுச்சூழலியல்,
டென்சி பப்ளிகேஷன்ஸ் சிவகாசி,
இராசபாளையம் - 17.
எட்டாம் பதிப்பு - 2014.

42. தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை,
பெண் புலவர் களஞ்சியம்,
(ஆதிமந்தி முதல் ஆண்டாள் வரை)
பச்சைப் பசேல்,
15, முனிரத்தினம் தெரு,
அய்யாவு (நாயுடு), குடியிருப்பு,
அமைந்தகரை, சென்னை-29.
பதிப்பு - 2001.

43. தெய்வம்.இரா., சங்க இலக்கியத்தில்
ஓரெழுத்தொருமொழி,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-98.
முதற்பதிப்பு - 2011.

44. நாகராசன்.வி., குறுந்தொகை,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-98.
முதற்பதிப்பு - 2011.

45. நாகூர் ரூமி, சக்கரநாற்காலியில் சிக்கிய பிரபஞ்சம்,
வள்ளல் அழகப்பர் பதிப்பகம்,
அழ.நாராயணன், வளர்மதி இல்லம்,
காரைக்குடி-1.
முதற்பதிப்பு - 2013.

46. பரமகுரு.மரு., பறம்புமலை (திருக்கொடுங்குன்றம்),
(திருவண்ணாமலை ஆதினம், குன்றக்குடி),
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு, சென்னை-1.
பதிப்பு - 1996.

47. பரிமணம்.அ.மா., பாலசுப்பிரமணியன்.கு.வெ., (தலைமைப் பதிப்பாசிரியர்) — பத்துப்பாட்டு மூலமும் உரையும், (இரு தொகுதி), நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98. முதற்பதிப்பு - ஏப்ரல்-2004.

48. பரிமணம்.அ.மா., (உ.ஆ.) — பதிற்றுப்பத்து, கோவிலூர் மடாலயம், கோவிலூர் - 630 307. முதற்பதிப்பு - ஏப்பிரல் - 2003.

49. பாக்கியமேரி, — வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98. ஐந்தாம் பதிப்பு - 2013.

50. பாலசாரநாதன்.சு., — சங்ககாலப் புலவர்கள், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், வெளியீடு எண்.94, பெசண்ட் நகர், சென்னை-90. முதற்பதிப்பு - 1986.

51. பேராசிரியர் குழு, — சுற்றுச்சூழல் கல்வி, பெரியார் ஈ.வே.ரா. கல்லூரி முன்னாள் மாணவர் சங்கம், திருச்சி-23. பதினொன்றாவது பதிப்பு - 2013.

52. மணவாளன்.அ.அ., சங்க இலக்கிய ஒப்பாய்வு,
சங்க இலக்கியம்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-98.
இரண்டாம் பதிப்பு: ஆகஸ்டு 2011.

53. மாணிக்கம்.வ.சுப., சங்க நெறி,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு,
சென்னை-1.
பதிப்பு - 1989.

54. மாணிக்கம்.வ.சுப., தமிழ்க்காதல்,
மணிவாசகர் பதிப்பகம்,
மெய்யப்பன் தமிழ் ஆய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம் - 608 001.
முதற்பதிப்பு - 2002.

55. மாணிக்கனார்.அ., பத்துப்பாட்டு (இரு தொகுதி),
வர்த்தமான் பதிப்பகம்,
141, உஸ்மான் சாலை,
சென்னை-17.
முதற்பதிப்பு - 1999.

56. மாதையன்.பெ., அகத்திணைக் கோட்பாடும்
சங்க அகக்கவிதை மரபும்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானிஜான்கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை-14.
முதற்பதிப்பு - டிசம்பர் - 2009.

57. மாதையன்.பெ., சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை-98.
இரண்டாம் பதிப்பு - மார்ச் - 2010.

58. முத்துக்கண்ணப்பர்.தி., சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்,
பாரி நிலையம்,
59, பிராட்வே,
சென்னை - 600 108.
பதிப்பு - 1978.

59. மெய்யப்பன்.ச., கபிலர்,
மணிவாசகர் நூலகம்,
12பி, மேலசன்னதி,
சிதம்பரம் - 608 001.
முதல்பதிப்பு - நவம்பர் 1995.

60. மெய்யப்பன்.ச., திருக்குறள் மூலம்,
தென்றல் நிலையம்,
12-பி, மேலச்சன்னதி,
சிதம்பரம்-1.
பதிப்பு - 2006.

61. வரதராசன்.மு., இலக்கியத்திறன்,
பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
7-D, கொடிமரத்தெரு,
ராயபுரம்,
சென்னை-13.
மறுபதிப்பு - 1996.

62. வரதராசன்.மு., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,
பாரி நிலையம்,
184, பிராட்வே, சென்னை-18.
மறுபதிப்பு - 2011.

63. விசுவநாதன்.அ., கலித்தொகை மூலமும் உரையும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-98.
நான்காம் பதிப்பு - அக்டோபர் - 2011.

64. வின்சென்ட்.இலா., தமிழ் நிலமும் இனமும்,
பாரதி புத்தக நிலையம்,
421, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை-18.
முதற்பதிப்பு - ஜூன் - 2010.

65. வீரபாண்டியன் வலசை (இராசேந்திரன்.நா.) வாழத்துடிக்கும் வனவிலங்குகள்,
பாரதி புத்தகாலயம்,
7/40, கிழக்குச் செட்டித்தெரு,
பரங்கிமலை, சென்னை-16.
பதிப்பு - 2004.

66. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை - 600 108.
முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 2000.

67. வேங்கடசாமி. மயிலை.சீனி., தமிழர் வளர்த்த அழகுக்கலை,
செண்பகா பதிப்பகம்,
32-13-கிருஷ்ணா தெரு,
பாண்டிபஜார், சென்னை-7.
பதிப்பு - 2004.

68. வேங்கடசாமி. மயிலை.சீனி., ஆய்வுக் களஞ்சியம்,
பண்டைத் தமிழக வரலாறு,
சேரர் சோழர் பாண்டியர் (தொகுதி-1),
தமிழ்மண் பதிப்பகம்,
2, சிங்காரவேலர் தெரு,
தியாகராஜர் நகர், சென்னை-17.
பதிப்பு - 2014.

69. வேங்கடராமச் செட்டியார்.செ., பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள்,
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை-1.
முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 1960.

70. ஸ்ரீகுமார், தமிழில் திணைக்கோட்பாடு,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-B, சிட்கோ இண்ட்ஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-98.
முதல் பதிப்பு - ஏப்ரல் 2012.

**இலக்கண நூல்கள்**

1. இளம்பூரணனார், (உ.ஆ.) தொல்காப்பியப் பொருளதிகாரம்,
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம் 3,
ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை-14.
முதற்பதிப்பு - 2005.

2. இளங்குமரனார்.இரா., (உ.ஆ.) தொல்காப்பியம் பொருளதிகாரம்
பேராசிரியம்-1,
தமிழ்மண் பதிப்பகம்,
2, சிங்காரவேலர் தெரு,
தியாகராயர் நகர்,
சென்னை-17.
முதற்பதிப்பு - 2003.

3. இராமசுப்பிரமணியன்.வ.த., (உ.ஆ.) — நம்பியகப்பொருள், முல்லை நிலையம், 9, பாரதிநகர் முதல் தெரு, தி.நகர், சென்னை-17. மறுபதிப்பு - 2012.

4. சேனாவரையர், (உ.ஆ.) — தொல்காப்பியம் பொருளதிகாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 154, டி.டி.கே.சாலை, சென்னை-18. 12-ஆம் பதிப்பு - ஜூலை 1994.

5. நடராசன்.பி.ரா., (உ.ஆ.) — நாற்கவிராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கம் (ப.உ.,பு.வி.), உமா பதிப்பகம், 171, புதிய எண்.18, பவளக்கார தெரு, மண்ணடி, சென்னை-1. முதல்பதிப்பு - 2010.

**அகராதிகள்**

1. அடோன் பப்ளிஷிங் குரூப், — அடோன் தமிழ் - ஆங்கில அகராதி, G.P.C. திருவனந்தபுரம், முதற்பதிப்பு - ஆகஸ்ட் - 2007, இப்பதிப்பு - மார்ச் - 2010.

2. ஆசிரியர் குழு, — சுருக்கத் தமிழ் அகராதி, (சென்னைப் பல்கலைக்கழக இசைவு பெற்றது), மதராஸ் லாஜர்னல் அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4. முதற்பதிப்பு - 1955.

3. ஆசிரியர் குழு, அருங்கலைச் சொல் அகரமுதலி,
தூயதமிழ்ச் சொல்லாக்கத்துறை,
தஞ்சைப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்-5.
முதற்பதிப்பு - 2002.

4. இன்னாசி.சூ., வீரமாமுனிவர் - சதுரகராதி,
சத்தியா பதிப்பகம்,
பிளாட் எ நியுடெக் வைபவ்,
57-53 ஆவது தெரு,
அசோக்நகர், சென்னை-83.
பதிப்பு - 2005.

5. கந்தையா பிள்ளை.ந.சி., தமிழ்ப் புலவர் அகராதி,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
பவழக்காரத்தெரு, சென்னை-1.
இரண்டாம் பதிப்பு - 1960.

6. கழகப் புலவர் குழு, கழகத் தமிழ் அகராதி,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்பக்கழக லிமிடெட்,
79, பிரகாசம் சாலை,
சென்னை-18.
5-ஆம் பதிப்பு - ஜுன் 1985.

7. கேட்டோ.கா., வாழ்வியற் களஞ்சியம் தொகுதி-7,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு - மே 1988.

8. சாரங்கபாணி.இரா., சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,
தொகுதி 1,2,3,
தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு - 2001.

9. சுப்பிரமணியன் பா.ரா., — க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,
12, நாலாவது குறுக்குத்தெரு,
கற்பகம் பூங்கா,
அடையாறு, சென்னை-20.
மறுபதிப்பு - மே - 1999.

10. பழனியப்பன்.வெ.,
பழனி.உ., — தமிழ்ப் புலவர் வரலாற்றுக்களஞ்சியம்,
தொகுதி - 3,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
(வைரவிழா வெளியீடு 1929 - 1989)
பதிப்பு - 1989.

11. வையாபுரிப்பிள்ளை,
(மு.ப.ஆ.) — தமிழ்ப் பேரகராதி
சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு,
சென்னை - 5.
மறுபதிப்பு - 1982.

**சொற்பொழிவுகள்**

1. — சிற்றிலக்கிய சொற்பொழிவுகள்,
கழக வெளியீடு (முதலாவது மாநாடு),
1/140, பிராட்வே,
சென்னை-1.
மறுபதிப்பு - 1971.

2. — நற்றிணைச் சொற்பொழிவுகள்
கழக வெளியீடு (முதலாவது மாநாடு),
1/140, பிராட்வே,
சென்னை-1.
இரண்டாம் பதிப்பு - 1950.

**ஆய்வேடுகள்**

1. அமுதா.க., — சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும், தமிழ் முனைவர் பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3 சூன் - 2005.
2. புனிதவதி.த., — திருக்குறளில் இயற்கை, தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3. மார்ச் - 2016.

**இதழ்கள்**

1. நாளிதழ்கள் - தினத்தந்தி, தினமலர்

**தமிழ் ஆய்விதழ்கள்**

1. ஆய்வுக்கோவை, — இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், தமிழியற்புலம், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், 44-வது கருத்தரங்கு தொகுதிகள், முதற்பதிப்பு - 2013.
2. காலச்சுவடு, — உலகத் தமிழ் மாத இதழ் இதழ் 99 மார்ச் 2008, பழைய எண்.216, திருவல்லிக்கேணி, நெடுஞ்சாலை, சென்னை-5. kalachuradu@gamail.com

3. நவீனத் தமிழாய்வு (பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதல்)
   ராஜா பப்ளிகேஷன்ஸ்,
   10 (அப்ஸ்டைர்) இப்ராஹிம் நகர்,
   காஷாமலை, திருச்சி-23.
   rajapublications.com
   பதிப்பு -

4. பன்னாட்டுப் பரப்பில் தமிழ் இலக்கியப் போக்குகள்
   செம்மூதாய்ப் பதிப்பகம்,
   19/F2, ரூபி ரெஸ்டென்ஸி,
   நர்மதா தெரு,
   சந்திரன் நகர், இரும்புலியூர்,
   கிழக்குத் தாம்பரம்,
   சென்னை-59.
   முதற்பதிபபு - நவம்பர் - 2017.

5. தொடரும்
   ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
   த.பெ.எண்.8836,
   பாண்டிபஜார்,
   சென்னை-17.


**மருத்துவ நூல்**


1. Ganesan.S.,
   South Indian Ethnomedicinal Plants,
   Volume-1,
   Thiagarajar College,
   Madurai-9.
   First Edition - 2011.
   www.Myvestige.com

அட்டவணை - 1

# பாண்டிய நாட்டுப் புலவர்களும் பாடற்தொகைகளும்

| வ.எண். | பாண்டிய நாட்டுப் புலவர்கள் | அகம் மட்டும் | புறம் மட்டும் | அகமும் புறமும் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| | **ஆண்பாற் புலவர்கள்** | | | | |
| 1. | அகம்பன் மாலாதனார் | 1 | - | - | 1 |
| 2. | அண்டர் மகன் குறுவழுதியார் | 3 | 1 | . | 4 |
| 3. | ஆலம்பேரி சாத்தனார் | 8 | - | - | 8 |
| 4. | இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் (மலைப்படுகடாம்) | 2 | 1 | - | 3 |
| 5. | இளம்புல்லூர்க் காவிதி | 1 | - | - | 1 |
| 6. | இளம்பெருவழுதியார் (பரிபாடல்) | 2 | 1 | 1 பரி.15 | 4 |
| 7. | உக்கிரப் பெருவழுதி | 2 | - | - | 2 |
| 8. | ஒக்கூர் மாசாத்தனார் | 1 | 1 | . | 2 |
| 9. | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் | 1 | 1 | . | 2 |
| 10. | கடியலூர் உருத்திரங்கண்ணனார் (பட்டினப்பாலை / பெரும்பாண்) | 2 | - | -<br>1 | 2<br>2 |
| 11. | கணியன் பூங்குன்றனார் | 1 | 1 | . | 2 |
| 12. | கபிலர் (குறிஞ்சிப்பாட்டு), பதிற்றுப்பத்து | 196 | 28<br>10 | . | 234 |
| 13. | கிள்ளி மங்கலங்கிழார் | 4 | - | - | 4 |
| 14. | கிள்ளி மங்கலங்கிழார் மகனார் சோகோவனார் | 1 | - | - | 1 |
| 15. | குறுங்குடி மருதனார் | 2 | - | - | 2 |
| 16. | கோட்டியூர் நல்லந்தையார் | 1 | - | - | 1 |
| 17. | கோளியூர் கிழார் மகனார் செழியனார் | 1 | - | - | 1 |
| 18. | கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் | - | 6 | - | 6 |
| 19. | செங்கண்ணனார் | 2 | - | - | 2 |
| 20. | சேந்தங்கண்ணனார் | 2 | - | - | 2 |

| 21. | சேந்தம் பூதனார் | 7 | - | - | 7 |
|---|---|---|---|---|---|
| 22. | தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் | 2 | - | - | 2 |
| 23. | தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் | 5 | 1 | - | 6 |
| 24. | நக்கீரர்<br>(திருமுருகாற்றுப்படை நெடுநல்வாடை) | 31 | 3<br>1 | -<br>1 | 36 |
| 25. | நல்வழுதியார் (பரிபாடல்) | - | - | பரி.12 | |
| 26. | படுமரத்து மோசிகீரனார் | 6 | - | - | 6 |
| 27. | படுமரத்து மோசிகொற்றனார் | 1 | - | - | 1 |
| 28. | பாண்டியன் அறிவுடை நம்பி | 3 | 1 | . | 4 |
| 29. | பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் | - | 1 | - | 1 |
| 30. | பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் | 2 | - | - | 2 |
| 31. | பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் | - | 1 | - | 1 |
| 32. | பாண்டியன் மாறன்வழுதி | 3 | - | - | 3 |
| 33. | பிசிராந்தையார் | 2 | 4 | . | 6 |
| 34. | பெருங்குன்றூர் கிழார்<br>பதிற்றுப்பத்து - 9 | 6 | 5<br>10 | - | 21 |
| 35. | பேராலவாயர் | 4 | 2 | . | 6 |
| 36. | பொதும்பில் கிழார் | 1 | - | - | 1 |
| 37. | பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் | 3 | - | - | 3 |
| 38. | மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் | 12 | 1 | . | 13 |
| 39. | மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் | 11 | 1 | . | 12 |
| 40. | மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார் | 1 | - | - | 1 |
| 41. | மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் | - | 1 | - | 1 |
| 42. | மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் | 3 | - | - | 3 |
| 43. | மதுரை ஓலைக்கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனார் | - | 1 | - | 1 |
| 44. | மதுரைக் கடையத்தனார் மகன் வெண்ணாகனார் | 1 | - | - | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 45. | மதுரைக் கணக்காயனார் | 4 | 1 | . | 5 |
| 46. | மதுரைக் கண்டரதத்தனார் | 1 | - | - | 1 |
| 47. | மதுரைக் கண்ணனார் | 1 | - | - | 1 |
| 48. | மதுரைக் கண்ணத்தனார் | 2 | - | - | 2 |
| 49. | மதுரைக் கதக்கண்ணனார் | 1 | - | - | 1 |
| 50. | மதுரைக் கவுணியன் பூதத்தனார் | 1 | - | - | 1 |
| 51. | மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் | 1 | 1 | . | 2 |
| 52. | மதுரைக் காமக்கணி நப்பாலந்தனார் | 1 | - | - | 1 |
| 53. | மதுரைக் காருலவியங் கூத்தனார் | 1 | - | - | 1 |
| 54. | மதுரைக் கூத்தனார் | 1 | - | - | 1 |
| 55. | மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் | 9 | 1 | . | 10 |
| 56. | மதுரைக் கொல்லன் புல்லன் /ர் | 1 | - | - | 1 |
| 57. | மதுரைக் கொல்லன் வெண்ணாகார் | 2 | - | - | 2 |
| 58. | மதுரைச் சுள்ளம் போதனார் | 1 | - | - | 1 |
| 59. | மதுரைத் தத்தங் கண்ணனார் | 1 | - | - | 1 |
| 60. | மதுரைத் தமிழ்க் கூத்தனார் | - | 1 | - | 1 |
| 61. | மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார் | 2 | - | - | 2 |
| 62. | மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் | 1 | - | - | 1 |
| 63. | மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் | 1 | - | - | 1 |
| 64. | மதுரை இளம்பாலாசிரியர் சேந்தன் கொற்றனார் | 1 | - | - | 1 |
| 65. | மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார் | 1 | - | - | 1 |
| 66. | மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார் | 1 | - | - | 1 |
| 67. | மதுரைப் புல்லங் கண்ணனார் | 1 | - | - | 1 |
| 68. | மதுரை மருதன் இளநாகனார் | 35 | 3 | - | 38 |
| 69. | மதுரைப் பூவண்ட நாகன் வேட்டனார் | 1 | - | - | 1 |
| 70. | மதுரைப் பெருங்கொல்லனார் | 1 | - | - | 1 |

| 71. | மதுரைப் பெருமருதனார் | 1 | - | - | 1 |
|---|---|---|---|---|---|
| 72. | மதுரை பெருமருதிளநாகனார் | 1 | - | - | 1 |
| 73. | மதுரைப் போத்தனார் | 1 | - | - | 1 |
| 74. | மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தனார் | 1 | - | - | 1 |
| 75. | மதுரைப்பள்ளி மருதங்கிழார் மகனார் சொகுந்தனார் | 2 | - | - | 2 |
| 76. | மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் | 3 | - | - | 3 |
| 77. | மதுரை யீழத்துப் பூதன்தேவனார் | 6 | - | - | 6 |
| 78. | மதுரை வேளாசான் | - | 1 | - | 1 |
| 79. | மதுரை வேளாதத்தன் | 1 | - | - | 1 |
| 80. | மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார் | 1 | - | - | 1 |
| 81. | மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார் | 1 | - | - | 1 |
| 82. | மருங்கூர்ப்பாகை சாத்தன் பூதனார் | 1 | - | - | 1 |
| 83. | மாங்குடி மருதனார் (மதுரைக்காஞ்சி) | 6 | 6<br>1 | | 13 |
| 84. | மாலை மாறன்/னார் | 1 | - | - | 1 |
| 85. | மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலந்தனார் | 1 | - | - | 1 |
| 86. | முடத்திருமாறன் | 2 | - | - | 2 |
| 87. | மோசி கண்ணத்தனார் | 1 | - | - | 1 |
| 88. | மோசிகீரனார் | 4 | 5 | . | 9 |
| 89. | மோசி கொற்றனார் | 1 | - | - | 1 |
| 90. | மோசி கரையனார் | 1 | - | - | 1 |
| 91. | மோசி சாத்தனார் | - | 1 | - | 1 |
| 92. | விரியூர் நக்கனார் | - | 1 | - | 1 |
| 93. | வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனார் | 1 | - | - | 1 |
| 94. | வேம்பற்றூர்க் குமரனார் | 1 | 1 | . | 2 |

| | பெண்பாற் புலவர்கள் | | | | |
|---|---|---|---|---|---|
| 95. | அள்ளூர் நன்முல்லையார் | 10 | 1 | . | 11 |
| 96. | ஒக்கூர் மாசாத்தியார் | 7 | 1 | . | 8 |
| 97. | பாரி மகளிர் | - | 1 | - | 1 |
| 98. | பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு | - | 1 | - | 1 |
| 99. | மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் | 2 | - | - | 2 |
| 100. | மதுரைக்காமக்கணி நப்பசலையார் | 1 | - | - | 1 |
| 101. | மதுரை நல்வெள்ளியார் | 4 | - | - | 4 |
| 102. | மதுரைப் படைமங்க மண்ணியார் | - | 1 | - | 1 |
| 103. | மாறோக்கத்து நப்பசலையார் | 1 | 7 | . | 8 |
| 104. | வெள்ளி வீதியார் | 13 | - | - | 13 |
| 105. | பொதும்பில் புல்லாளங்கண்ணியார் | 1 | - | - | 1 |
| | **மொத்தம்** | **487** | **118** | **4** | **609** |

**அட்டவணை - 2**

| நூற்பெயர் | கடவுள் வாழ்த்து | அகப் பாக்கள் | புறப் பாக்கள் | அகப்புறப் பாக்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| **எட்டுத்தொகை** | | | | | |
| நற்றிணை | 1 | 400 | - | - | 401 |
| குறுந்தொகை | 1 | 400 | - | - | 401 |
| ஐங்குறுநூறு | 1 | 500 | - | - | 501 |
| பதிற்றுப்பத்து | - | - | 80 | - | 80 |
| பரிபாடல் | - | - | - | 22 | 22 |
| கலித்தொகை | 1 | 149 | - | - | 150 |
| அகநானூறு | 1 | 400 | - | - | 401 |
| புறநானூறு | 1 | - | 399 | - | 400 |
| **பத்துப்பாட்டு** | | | | | |
| திருமுருகு காற்றுப்படை | - | - | 1 | - | 1 |
| பொருநர் ஆற்றுப்படை | - | - | 1 | - | 1 |
| சிறுபாண் ஆற்றுப்படை | - | - | 1 | - | 1 |
| பெரும்பாண் ஆற்றுப்படை | - | - | 1 | - | 1 |
| முல்லைப் பாட்டு | - | 1 | - | - | 1 |
| மதுரைக் காஞ்சி | - | - | 1 | - | 1 |
| நெடுநல்வாடை | - | - | - | 1 | 1 |
| குறிஞ்சிப்பாட்டு | - | 1 | - | - | 1 |
| பட்டினப்பாலை | - | - | - | 1 | 1 |
| மலைபடுகடாம் | - | - | 1 | - | 1 |
| | **6** | **1851** | **485** | **24** | **2366** |

சான்று: பாக்யமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு.

# பாண்டிய நாட்டுப் புலவர் பாடல்களில் இயற்கை
# (சங்க காலம்)

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**சே.பாண்டிலீலா**

**(பதிவு எண் : 670)**

**நெறியாளர்**

முனைவர் **க.அமுதா**

**தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி-3**






# அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில்3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி மற்றும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**சனவரி - 2019**

# முடிவுரை

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் போன்றவை பழந்தமிழ் வளர்ச்சியில் பாண்டியரின் பங்களிப்பை உணர்த்துகின்றன.

பண்டைத்தமிழ்ப் புலவர்களுள் நூற்றிஐந்து புலவர்கள் பாண்டிய நாட்டினர். இவர்களுள் அரசப்பரம்பரையினராய்ப் பதினொன்று புலவர்களும், மூன்று அரச மகளிரும் புலமைமிக்கோராய் இருந்துள்ளனர்.

பத்துப்பாட்டுள் ஏழு பாடல்களையும், எட்டுத்தொகையுள் அறுநூற்று இரண்டு பாடல்களையும் இப்புலவர்கள் பாடியுள்ளனர். இவற்றுள் புறப்பாடல்களினும் அகப்பாடல்கள் மிகுதியாய் இடம்பெற்றுள்ளன.

உலகின் ஆதாரமாகிய நீர், நிலம், நெருப்பு, காற்று, வானம் என்பனவற்றை இடமாகக் கொண்டு, காலத்தின் துணையோடு தோற்றம்பெறும் பல்வேறு தோன்றல்களும், கண்ணுக்குப் புலனாகும் பொருட்களன்றி இன்னுயிர், ஓசை போன்றனவும் பாடப்பெற்றுள்ளன. இவ்வாறு முதற்பொருளும், கருப்பொருளுமாய் இடம்பெறும் இயற்கை மனிதவாழ்வை முதன்மைப்படுத்தி, சூழலியல் பின்புலத்தோடு உரிப்பொருளின் சிறப்பை உணர்த்தும் பதிவுகளாய் அமைந்துள்ளன.

ஐம்பூதங்களும் ஐவகை நிலங்களின் பேராற்றலாய்ப் புலப்படுகின்றன. பண்டைத் தமிழர்கள் தாம் வாழும் இடச்சூழலுக்கு ஏற்ப ஏதேனும் ஒரு அரிசிச்சோறு, இறைச்சி போன்றவற்றை உணவாகக் கொண்டுள்ளனர். குறிஞ்சி, முல்லை நிலங்களில் சிறுதானியங்களும்; மருதம், நெய்தல் நிலங்களில் மீன்களின் பயன்பாடுகளும் சுட்டப்பட்டுள்ளன.

இளநீர், கரும்புச்சாறு, நுங்கு போன்ற நலம்தரும் இயற்கைக் குளிர்பானங்கள் மருதநிலத்துச் சிறப்புணவுகளாகப் பெறப்படுகின்றன. குறிஞ்சி நிலத்தின் பெரும்பயனாகத் தேன் இடம்பெற்றுள்ளது. குறிஞ்சி, முல்லை, மருதம் நிலங்களில், நிலவளங்களுக்கு ஏற்றவாறு வேளாண் தொழில் நடைபெற்றுள்ளது.

மதி, மலை, சுனை, மயில், கிளி எனப் பலவும் உவமைகளாக ஒரே பாடலில் இடம்பெற்றுள்ளன. இப்பதிவு மலைநிலப் பின்புலத்தோடு பெண்ணின் அழகைப் புலப்படுத்துகின்றது. ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலில் இளம்பயிர், சிறுகிளியின்தூவி, சேற்றிலும் சுனையிலும் தோன்றும் மழைநீர்க்குமிழிகள், உதிர்ந்து கிடக்கும் முல்லை மலர்கள், சிற்சிலிப்பறவைகளின் இறகுகள், தேர்ச்சக்கரத்தில் வளைந்து செல்லும் நீர், வரிசையாய் ஊர்ந்து செல்லும் பாம்புகள் என இயற்கை உவமைகள் உருவகங்களோடு கார்காலத்தையும், சூழல்வனப்பையும் காட்சிப்படுத்து கின்றன. இவ்வாறு இயல்பு மாறாத சூழலியற்புனைவுகளில் இயற்கை பேரிடம் பெறுகின்றது.

இன்னுயிர் என்னும் இயற்கைப்பாடுபொருள், நிலையில்லாத மனித வாழ்வினும் சிறந்த நற்பண்புகளை வலியுறுத்தும் பதிவுகளாய் அமைந்துள்ளன.

உள்ளுறைப் பதிவுகள், குறைகளை நிறைசெய்து மனித வாழ்வை மேம்படுத்தும் நோக்கோடும், இயற்கைப் பின்புலத்தோடும் அமைந்துள்ளன. இவ்வுத்தி உளவியல் சார்ந்த மறைமுக அறிவுரை பகர்தலை ஒத்துள்ளது. பறவை, விலங்குகளின் அன்புறு நிகழ்வுகள் மனத்தைப் பண்படுத்தும் அருமருந்தாக இறைச்சியில் சுட்டப்பட்டுள்ளன.

பொய்மைப்புலி, வண்டூது தாமரை போன்ற உவமைகள் மனத்தில் அன்பில்லாமல், புலனின்பம் விரும்புவோருக்கான பதிவுகளாகப் பொருந்துகின்றன. தலைவன் ஈட்டிவரும் மிகுந்த பொருள்வேட்டம், சுற்றத்தோடு கூடிவாழும் சமூகப்பயன்பாட்டை உணர்த்துகின்றது.

கவண்கல்லின் இயக்கம், ஓயாத அலையோசை போன்றவை அலரால் உண்டாகும் துன்பங்களையும்; களவுக்காலத்தில் நாணமிழக்கும் பெண்மை, தன் தாய்மைப்பயனை இழப்பதையும் எடுத்துரைத்து இருவரும் கூடிவாழும் கற்புமணத்தை வலியுறுத்துகின்றது.

கொக்கு, பிடி போன்றவை, தன் இணையை இழந்து துன்புற்ற நிலையிலும், தம் சந்ததிகளைப் பேணும் திறம் சுட்டப்பட்டுள்ளன. இப்பதிவுகள் இவ்வுலக உயிர்களின் இளம்பருவப் பாதுகாப்பையும்,

தாய்மையின் பயனையும் உணர்த்துகின்றன. துதிக்கையைத் தாங்கிநிற்கும் யானையின் வலிய தந்தம், விடாமுயற்சி வெற்றியைப் பெற்றுத்தரும் என்னும் சமூகநலனை வலியுறுத்துகின்றது.

கோட்டோவியமாகக் கொடிகளை வரைந்து, நுண்கலையாய்ப் பூளைப்பூக்களால் அலங்கரித்துள்ள காட்டுப்பூனையும், அதன் குட்டிகளும்; மதியும், விண்மீன்களுமாய்க் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இதுபோன்ற பதிவுகள் உயிரோட்டமுள்ள எழுத்தோவியங்களைப் புலப்படுத்துகின்றன.

நிலப்புனைவுகளுள் ஐவகை நிலங்களின் பல்வேறு தோற்றங்கள், தனித்தன்மைகள், சூழல்வனப்புகள் முதலான பதிவுகள் தலைவன், தலைவியின் பண்பு நலன்களையும்; மன்னர்கள், வள்ளல்களின் நிலவளமைக் கொடைச்சிறப்பு, விருந்து போற்றுதல் முதலான தமிழ் மரபுகளையும்; பண்டைக்காலத்தின் இயற்கை வளங்களையும் தெளிவுபடுத்துகின்றன.

பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் என்னும் மூன்று நூல்களிலும்; கபிலரின் நூற்றி அறுபத்தொன்று குறிஞ்சித்திணைப் பாடல்களிலும் மலைநிலப் பதிவுகள் பெரும்பங்களிப்பைப் பெற்றுள்ளன.

இயற்கையின் விளைநிலமாக முல்லைநிலம் விளங்குகிறது. இந்நிலத்தின் பெரும்பயனாகப் புவியும், வளிமண்டலமும் குளிர்ந்து, பருவமுறை மாறாத மழையும், மாசற்றத் தூயகாற்றும் கிடைத்துள்ளன.

மருதநிலம் நெல்லும், கரும்பும் விளையும் நீர்வளமும், நிலவளமும் உடையது. கயம், பெருங்குளம் முதலான நீர்த்தேக்கங்கள் முறையாகப் பேணப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டுக்கு வையைப் பெரும்வளத்தைத் தந்துள்ளது.

நெய்தல்நிலம் பன்னாட்டு வாணிபத் தொடர்புடையதாய் அறியப்படுகின்றது. பிரிவொழுக்கத்தை மேற்கொள்ளும் பயணத்தில், துன்பம் மிகுந்த நெடுவழியாகப் பாலைநிலம் சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சிநிலம் மருவிய பாலைநிலச் சுட்டலில், காட்டுத்தீயின் தீவிரத்தை ஆலம்பேரிச்சாத்தனார் பதிவுசெய்துள்ளார்.

பாண்டிய நாட்டுப் புலவர்கள், தாம் நன்கு அறிந்த நிலச்சூழலையும், தம் அனுபவத்தால் கண்டுணர்ந்த நிகழ்வுச் சுட்டலையும் இயற்கைப் பதிவுகளில் கையாண்டுள்ளனர். பண்டைப் பாக்களுள் பேரிடம்பெறும் கபிலரின் பாடல்களில் மருதநிலப்புனைவுகள் இடம்பெறவில்லை. அள்ளூர் நன்முல்லையார் முல்லை, நெய்தல் நிலங்களைப் பாடவில்லை. வெள்ளிவீதியார் முல்லைநிலத்தைப் பாடவில்லை. நக்கீரரின் பாடலில் முல்லைநிலப்புனைவுகள் இடம்பெறவில்லை.

அளப்பறியா வானின் பரப்பு மாகவிசும்பு என இருமுறை அடுக்கிச் சுட்டப்பட்டுள்ளது. உலகை இயக்கும் ஞாயிறின் ஒளியாற்றல், வெப்ப ஆற்றல் போன்றவற்றைக் கருத்திற்கொண்டு இளங்கதிர், கடுங்கதிர், அந்திப்படுசுடர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன் நிலையான பேராற்றல் உண்மையோடு ஒப்பிடப்பட்டுள்ளது.

திங்களின் தண்ணிய ஒளி, பிறைவடிவம், முழுமதி முதலானவை பெண்ணின் அழகோடும், கோப்பெருஞ்சோழனின் அருள்நிறைந்த முகத்தோடும் ஒப்பிடப்பட்டுள்ளது. மூன்றாம்பிறையைத் தொழுவது பண்டைக்கால வழக்கென்பதை அறியமுடிகின்றது. வளர்பிறைபோல் மன்னனின் வெற்றியும், தேய்பிறைபோல் பகைவர்கள் கெட்டழிவதும் ஒப்பிடப்பட்டுள்ளன. இப்பதிவில் ஒளியின் வளர்ச்சி நன்னிமித்தமாகப் புலப்படுகிறது.

விழா நாளில் தனித்திருக்கும் தலைவியிடமும், தந்தையையும், நாட்டையும் இழந்த பாரிமகளிரின் நினைவலைகளிலும் துன்பியல் உணர்ச்சிகளுக்கான வடிகாலாய் முழுமதி குறித்தப்பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

தெளிவாகத் தோற்றம் தரும் வடமீனின் ஒளியாற்றலும்; இம்மீன் வடதிசையிலிருந்து தென்திசை சென்றால் மழையிராது என்னும் நம்பிக்கையும் பதிவுசெய்யப்பட்டுள்ளன. இப்பதிவுகள் பண்டைத் தமிழரின் நம்பிக்கையோடு கூடிய வானியல் அறிவைப் புலப்படுத்துகின்றன.

மழைவேட்டல், மழை உருவாதல், மிகுதியான மழைப்பொழிவுகள் குறித்த விளக்கப்பதிவுகள் சுட்டப்பட்டுள்ளன. கைமாறு செய்யமுடியாத

பெரும்பயனைத்தரவல்ல மழை என அதன் பெரும்பயனும்; தலைமக்களின் காதல் மனத்தை இயக்கும் திறமும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

மரம் என்னும் பண்டைக்காலப் பதிவு தாவரங்களுக்கு இணையானது. இம்மரங்களில் சில அழிக்கப்பட்டு விளைநிலங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. போரால் அழிந்துபட்ட இயற்கைவளம் குறித்து வருந்தும் பதிவுகளும் இடம்பெற்றுள்ளன.

மருந்திற்காகக்கூட மரம் அழிக்கப்படுவதில்லை என்னும் பதிவில் தாவரங்களின் மருத்துவப்பயனும், மரப்பாதுகாப்பும் உணர்த்தப்பட்டுள்ளன. இதுபோன்ற காரணங்களால் பறவை, விலங்குகளைவிட மிகுதியான எண்ணிக்கையில் நூற்றி ஐம்பது வகைத் தாவரங்கள், நீர்ப்பாசிகள் முதலானவை இடம்பெற்றுள்ளன. நாவல்மரம், வேம்பு, கடுகு எண்ணெய் போன்றவற்றின் மருத்துவப் பயன்பாடுகள் சுட்டப்பட்டுள்ளன.

யானை குறித்த பதிவுகள், புலவர்களின் பன்முக அறிதலைப் புலப்படுத்துகின்றன. ஒட்டகம் குறித்த பதிவு பாலைநிலத்தின் கடுமையைச் சுட்டுகின்றது. எருமைப்பாலின் மதிப்புக் கூட்டப்பட்ட உணவுப் பொருட்கள் பொருளாதார மேம்பாட்டை உணர்த்துகின்றன.

காற்றின் வேகம், அன்னப்பறவையின் பறக்கும் திறன் போன்றவை குதிரையின் வேகத்தோடு உவமிக்கப்பட்டுள்ளன. இக்குதிரையின் வேகத்திறன் தற்கால அறிவியலில் இயந்திரத்திறன் விளக்கக் குறியீடாய் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

பாம்புகளை வேட்டையாடும் பருந்து, தூய்மைக்காவலனா கழுகு, மழைநோக்கும் மண்ணுயிரிகளான ஈயல், வானம்பாடி, மின்மினி குறித்த பதிவுகள் இடம்பெற்றுள்ளன. அரிதாகிவரும் இவ்வுயிரினங்கள் குறித்து அறிந்துகொள்ளும் இயற்கைக் கொடைகளாய் இப்பதிவுகள் புலப்படுகின்றன.

வண்டின் சிறகொலி யாழிசையாக, அருவியின் ஒலி முழவொலியாக, மானின் குளம்படியொலி பெருவங்கியமாக, குயில் கூவுதல் குழலிசையாக, மயில் அகவுதல் முழவின் எதிரொலியாக, தேரைகளின் தொடர்ஒலி தாளவாத்தியங்களாக இயற்கையின் இன்னிசைகள் புலப்படுகின்றன.

குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்றுள்ள தொன்னூற்று ஒன்பது வகைத் தாவரங்களையும், அடைமொழி விளக்கப் பதிவுகளையும், ஓரிடத்தில் புலப்படுத்தும் இப்பதிவு தாவரவியல் பெயர்ப்பலகையாய்த் தனிச்சிறப்புடையது. கபிலரின் இம்மலர்ப்புனைவு மற்ற புலவர்களினும் தனித்துவம் வாய்ந்த பதிவாய்ப் பெறப்படுகிறது.

நீர்த்துளி காலத்தை உணர்த்துவதும், நீண்டதூரம் பயணிக்கும் ஒளி கப்பலை வழிநடத்துவதும் இயற்கையோடு இயைந்த அறிவியல் திறத்தினதாகும்.

அறக்கருத்துக்களுள் இயற்கை பேரிடம் பெறவில்லை எனினும் தம் உயிரினும் மேலாகப் பிறரைப் போற்றுவதும்; அறம் வழுவாமல் தன் இன்னுயிரை இழந்தும் இறவாப்புகழைப் பெறுவதும்; உலகில் மனிதம் நிலைப்பதற்கும், இவ்வுலகம் இயங்குவதற்குமான காரணிகளாய் உணர்த்தப்படுகின்றன. இப்பதிவுகள் மனிதனின் வாழ்க்கைக்கு இயற்கை இன்றியமையாதது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. மனிதனின் இயற்கையோடு இயைந்த நற்பண்புகள் உலக இயக்கத்திற்கு உதவுவனவாகும் என்பதைப் புலப்படுத்துகின்றன.

பசித்துன்பம் தீர்க்குமளவிலான உணவு, மேலாடை, கீழாடை என்னும் ஈராடை, உலகிலுள்ள எவ்வூரும் தாம் எல்லோரும் வாழ்வதற்கான ஊராகும்; மனிதகுலத்தினர் அனைவரும் ஒரே உறவினர் ஆவார் என்னும் பொதுமைச் சமூகக் கருத்துகள் பாண்டிய நாட்டுப் புலவர்களின் தனித்துவம் வாய்ந்த உலக இலக்கியப் பதிவுகளாகும்.

எள்ளுச்செடியின் நிறம், விளைநிலம், நீர்த்தேவை, இளங்காய், முதிர்ந்தகாய், ஒருபிடிக்கு ஏழு காய்கள் என அதன் விளைச்சல், எண்ணெய் நிறைந்த விதைகளின் முதல்தரம் முதலானவை குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பயிரைத் தாக்கும் மகுளி என்னும் நோய், அந்நோய்த் தாக்காத வேளாண்மை குறித்தும் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் பதிவு செய்துள்ளார். இப்பதிவு வேளாண் அறிவியலின் விளக்கப்பதிவாய் தனிச்சிறப்புடன் அமைந்துள்ளது.

தாவரவியல், வேளாண் அறிவியல், வானியல், நீர்மேலாண்மை, மருத்துவம், மண்ணியல், விலங்கியல், உணவு மேலாண்மை, சுற்றுச்சூழலியல் போன்ற பல்வேறு துறைகளில் சிறந்து பண்டைத் தமிழர் வாழ்ந்துள்ளனர்.

ஐம்பூதங்களுள் இடம்பெறும் இயற்கைப் பாடுபொருட்கள், கருத்துத்தெளிவிற்கும் காட்சிப் புலப்பாட்டிற்கும் ஏற்றவாறு பதிவுகள் பெற்றுள்ளன. இப்பதிவுகள் மனிதவாழ்வினை முதன்மையாகக் கொண்டுள்ள போதும், இயற்கையைப் புறக்கணிக்கவில்லை. எளியதாய்க் காணப்படும் நெருஞ்சிமலர், கட்புலனாகாத இன்னுயிர், வேளாண் அறிவியலின் விளக்கப்பதிவுகளாய் எள் என நுட்பத்தோடு படைத்தாளப்பட்டுள்ளன. இவை இயற்கை மனிதவாழ்வை மேம்படுத்துவதும் மனிதன் இயற்கையைப் பாதுகாப்பதும் இன்றியமையாதது என்பதை வலியுறுத்துகின்றன.